Regd. No. 2975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 208

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5    ஜீவியச் சந்தா ரூ. 100.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி *—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பராபவஹு சித்திரைமீ 1966ஹு ஏப்ரல்மீ

# ஸ்ரீ ராமாநுஜன் 208







சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 18. | 1966ஆ ஏப்ரல்மீ பராபவஆ சித்திரைமீ | ஸஞ்சிகை 4


## திருவாய்மொழி நூற்றந்தாதி—87

எங்காத லுக்கடிமா லேய்ந்த வடிவழகென்று *
அங்காது பற்றுசா ஆங்கவன்பால்—* எங்குமுள்ள
புள்ளினத்தைத் தூதாகப் போகவிடு மாறன்தாள் *
உள்ளினர்க்குத் தீங்கையறுக்கும்.

| | | | |
|---|---|---|---|
| எம் காதலுக்கு அடி | எமது அன்புக்குக் காரணம் | எங்கும் உள்ள புள் இனத்தை | எவ்விடத்துமுள்ள பறவைக் கூட்டத்தை |
| மால் ஏய்ந்த வடிவு அழகு என்று | எம்பெருமானிடத்துள்ள விக்ரஹ ஸௌந்தர்யமே என்று அறுதியிட்டு | தூது ஆக போக விடும் | தூதனுப்பின |
| அங்கு ஆது பற்றுசு ஆ | அந்த வடிவழகே ஆலம்பனமாக | மாறன் தாள் | ஆழ்வாருடைய திருவடிகளானவை |
| ஆங்கு அவன் பால் | அப்பெருமானை நோக்கி அவனுறையுமொருதிருப்பதியிலே | உள்ளினர்க்கு தீங்கை அறுக்கும் | தம்மைச் சிந்தித்தவர்களுடைய தீமைகளைப் போக்கி விடும். |

* * * கண்ணுற்கண்ட பக்ஷிகளையெல்லாம் தூதுவிடுகிற பதிகமாம் * எங்கானலகங்கழிவாயென்பது. ஆசார்யஹ்ருதயத்தில் "தம்பிழையும் சிறந்த செல்வமும்" இத்யாதி சூர்ணையில் "........ஸௌந்தர்யங்களை யுணர்த்தும் வ்யூஹ விபவ பரத்வ த்வயார்ச்சைகள் தூதுநாலுக்கும் விஷயம்" என்று ஸௌந்தர்யமே பற்றுசாக இத்திருவாய்மொழியில் தூதுவிட்டதாக அருளிச்செய்ததற்கேற்ப மூன்னடிகள் அருளிச்செய்யப்பட்டன.

கீழ்த்திருவாய்மொழியாகிய * உருகுமால்நெஞ்சத்தில் ஒருவாறு குணஸ்மரணத்தாலே தரிக்கும்படி செய்துவைத்தானெம்பெருமான்; குணங்களை ஸ்மரிக்க ஸ்மரிக்க, அப்பெருமானை நேரே காணவேண்டும்படியான விடாய்மிக்கது. அதனாலே தூதுவிடுவதாயிற்று இப்பதிகம். திருவாய்மொழியாயிரத்திலும் தூதுவிடும் பதிகங்கள் நான்கு; (1) அஞ்சிறையமடநாராய், (2) வைகல்பூங்கழிவாய், (3) பொன்னுலகாளீரோ, (4) இத்திருவாய்மொழி. * அஞ்சிறையமடநாரையில் அபராத ஸஹத்வமாகிற

க்ஷமாகுணம் பற்றாசாக வியூஹத்திலே தூதுவிட்டார். * வைகல் பூங்கழிவாயில் ஆச்ரித ஜநரக்ஷண தீக்ஷிதத்வம் பற்றாசாக விபவத்திலே தூதுவிட்டார்; * பொன்னுலகாளீரில் ஐகரஸ்யம் பற்றாசாகப் பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூதுவிட்டார். இனி இத்திருவாய்மொழியில், அவனுடைய வடிவழகு பற்றாசாக அர்ச்சையிலே தூது விடுகிறார். இப்பதிகத்தினிரண்டாம் பாட்டில் "திருமூழிக்களத்தில் தம் பரிஜன பரிவாரங்களோடே கூடிக்குலாவா நின்றாரவர்; அதனாலே நம்மை மறந்தார்போலும்; * செக்கமலத் தலர்போலுங் கண் கை கால் செங்கனிவாய் அக்கமலத்திலைபோலுந் திருமேனியழகை நினைப்பூட்டி' இப்படிப்பட்ட வடிவழகிலே யீடுபட்ட பராங்குசநாயகி உம்மைப்பிரிந்து தரித்திருக்க வல்லளோ வென்று சொல்லுங்கோள்' என்று சில பறவைகளைக் குறித்துக் கூறித் தூது விடுவதாய்ச் சென்றது * எங்கானலகங்கழிவாயென்னும் இத்திருவாய்மொழி. அதன் ஸாரப்பொருள் இந்த வெண்பாவில் சுருக்கியருளிச் செய்யப்பட்டதாயிற்று. .... (87)

## — ஸ்ரீராமாநுஜனுக்குச் சந்தா செலுத்தியவர்கள் —

மதராஸ் மெம்பர்கள் :

1. ஸ்ரீ P. B. சிங்கராசாரியர் G. T.
2. „ T.C.A. Anandalwar Advocate6
3. „ T. G. ஆராவமுதய்யங்கார் 17
4. „ T. ராமகிருஷ்ணராவ் 17
5. „ P. A. ஸௌந்தரராஜன் 17
6. „ T. S. ராகவாசாரியர் 4
7. „ S. A. சிங்காரம் பிள்ளை 1
8. „ T. N. ராமசாமி முதலியார் 2
9. „ V. P. K. சாரியார் 11
10. „ A. N. ரங்கஸாமி ஐயங்கார் G. T.
11. „ R. K. Madhavan G. T.
12. „ V. V. Ramanujam, P.H D. 5
13. „ K. V. Srinivasan 5
14. „ V. Rangachari G P. O.
15. „ T. S. Krishnaswami 5
16. ஸ்ரீ T. B. ஆளவந்தார் பாண்டிச்சேரி
17. „ T.S. N. ஸௌந்தரராஜபாகவதர் „
18. „ V. K. சக்கரவர்த்தி B. E (Hons.) [Poona
19. „ S. V. ஆண்டாள் ஸன்னநல்லூர்
20. „ உபய வேதாந்தப்ரகடநஸபா [மதுரை
21. „ M. S. Sundararajan கோவை
22. „ S. Parthasarathi Madurai
23. „ R.செந்தாமரைக்கண்ணனையங்கார் [மேட்டூர் டாம்
24. „ A. B. மரதகவல்லியம்மா Mysore
25. „ R. ஸ்ரீரங்கம்மாள் குளித்தலை
26. „ C. R. Ramaswami Iyengar [கோவை
27. „ R. Rajalakshmi Bombay
28. „ P. N. Krishnaswami Iyengar [New Delhi
29. „ C. V. Rajan Bangalore
30. „ S Krishnayyangar Tinnevelly

குறிப்பு :—இப்போது நிகழும் மாதம் 66 ஜனவரி௴ ஆனால் 66 ஏப்ரல் மாதப் பத்திரிகை இப்போது வெளி வருகின்ற தென்பதை அன்பர்கள் கவனிக்கவேணும். 1965௵த்திய சந்தா பாக்கியுள்ளவர்கள் இவ்வருஷத்துச் சந்தாவையும் சேர்த்து அனுப்பவேணும். பழைய பாக்கி [யில்லாதவர்கள் புது வருடச் சந்தாவை தாமதமில்லாமல் அனுப்பவேண்டியது.

இப்படிக்கு

மானேஜர்.

# உபந்யாஸசதத்வயம் — இரண்டாம்பகுதியில்

நூற்றறுபத்தைந்தாமுபந்யாஸம்முதல்.

(முன் தொடர்ச்சி)

## 165.மும்மூர்த்திகளுக்குமேலானமூலசக்திவிமர்சோபந்யாஸம்

உலகில் மனிதர்களும் பலவகைப்பட்டவர்கள், மனிதர்களின் மதங்களும் பல வகைப்பட்டவை. மதம் என்கிற வடசொல்லுக்குச் சரியான தமிழ்ச் சொல் 'கொள்கை' என்பது. தாவரங்களாயும் மிருகங்களாயும் பறவைகளாயும் பிறவாமல் மனிதர்களாய்ப் பிறந்தவர் ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான கொள்கையைக் கொள்ள உரிமையுடையவர்களே. ஆனால் ஸமுதாயக் கொள்கை யென்பது தான் மதமென வழங்கப்பெறும். வைணவமதம், சைவமதம், த்வைதமதம், அத்வைதமதம், வல்லபமதம் என வழங்கப்பெறும் மதங்கள்பலவும் ஒரு சில நபர்களைச் சேர்ந்த தல்லாமல் ஒரு பெருந்திரளைச் சேர்ந்தவையாய் நாடெங்கும் நகரமெங்கும் உலக மெங்கும் பரவியுள்ளன வென்பது உலக முற்று முணர்ந்ததேயாம். அந்தந்த மதங் களில் பிறந்தவர்கள் தத்தம் மதப்ரவர்த்தகர்களான ஆசாரியர்களிடத்தில் மெய் யன்பு பூண்டிருக்கக் கடமைப்பட்டவர்களாதலால் அப்பேராசிரியர்கள் காட்டிய வழியைப் பின்பற்றி முறை வழுவாது பேசவும் எழுதவும் உபதேசங்கள் செய்யவும் ப்ராப்தம். இது பொதுவிதி.

ஆனால், தங்களுடைய மதம் தவறென்றும் மூல புருஷர் கொண்ட கொள்கை பொருத்த மற்றதென்றும் சில மேதாவிகளுக்குத் தோன்றவுங் கூடும் இது அஸம்பாவிதமன்று. அன்னவர்கள் தங்களுடைய மதப்ரவர்த்தகர்கள் காட்டின வழியை விட்டு விலகி அவர்களின் வாக்குக்கு முரணாகப் பேசவோ எழுதவோ நேர்ந் தால் அதை யாரும் தடுக்க முடியாதுதான். ஆனால் அவர்கள் செய்யவேண்டிய தென்ன வென்றால், ஸ்வமத ப்ரவர்த்தகர்களான பேராசிரியர்களின் கொள்கைகளை மறுத்தோ மறைத்தோ தாங்கள் வேறானவொரு கொள்கையைப் பரப்பும்போது தகுந்த பிரமாணங்களை நன்கு நிரூபித்துத் தமது கொள்கையை நிலை நாட்ட வேண்டும். அப்படியல்லாமல் ஒரு பிரமாணமும் காட்டாமல் மனம்போனபடியும் மதிபோனபடியும் பேசுவதும் எழுதுவதும் செய்தால் 'இவர்கள் பித்தர்கள்' என்றல்லது வேறு சொல்ல வொண்ணாது.

நேற்று 16-12-65 தேதியன்று வெளிவந்த தினமணி பத்திரிகையில், ஒரு ஐயங்கார் த்ரிமூர்த்தி தத்துவத்தைப் பற்றிப் பேசின பேச்சு பிரசுரம் செய்யப் பட்டிருக்கின்றது. எங்ஙனேயென்னில்;

"படைத்தல் கரத்தல் அழித்தல் என்ற முத்தொழில்களை நடத்தும் மும்மூர்த்திகளும் தங்களுக்கு மேலானவொரு மூல சக்தியின் கட்டளையை நிறைவேற்றுபவர்களே. அந்த மூல சக்தியைத் தான் சைவர்கள் சிவன் என்றும், வைணவர்கள் விஷ்ணு வென்றும் அழைக்கின்றனர். எந்தப் பெயர் வைத்து அழைத்தாலும் ஒன்றுதான்"

என்று ஐயங்கார் பேசினதாக வுள்ளது. இத்தகைய கொள்கை சில வகுப்பினர்க்கு உண்டென்று கொள்வோம். இந்த வாதத்தை ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் எடுத்துக் களைந்தொழித்திருக்க, ஸ்ரீவைஷ்ணவ மரபில் வருமொருவர்—ஸ்ரீமந்நாத முனிகளின் பரம்பரையைச் சேர்ந்தவராகவும் சொல்லிக் கொள்ளுமொருவர் அந்த ஸ்ரீவைஷ்ணவ பரமாசாரியர்களின் திருவுள்ளம் கன்றும்படி பேசுவது பொருத்த முடையதாகுமா?

ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களின் கொள்கை யென்பது கிடக்கட்டும். வேத வேதாந்த ஸித்தாந்த மென்னவென்று பார்ப்போம். த்ரிமூர்த்திகளுக்கும் மேலான வொரு சக்தியிருப்பதாகவும் அந்த சக்திக்குக் கட்டுப்பட்டு மும்மூர்த்திகள் தத்தம் தொழிலை நிறைவேற்றி வருவதாகவும் எந்த வேதத்திலாவது உபநிஷத்திலாவது ஓதியிருப்பதுண்டோ? "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" இத்யாதிகளான உபநிஷத்துக்களும், அவற்றையடியொற்றிய *ஜந்மாத்யஸ்ய யத:* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரமும் தத்பாஷ்யாதிகளும் இந்த விபரீதக் கொள்கைக்கு இறையேனும் இடந் தருமோ? *பீஷாஸ்மாத் வாத: பவதே* என்று தொடங்கியுள்ள உபநிஷத் வாக்ய மானது மும்மூர்த்திகளும் பராசக்திக்குக் கட்டுப்பட்டு அஞ்சி நடுங்கி வேலை செய்வ தாகவா சொல்லுகிறது? *அகிலபுவநஜந்மஸ்தேமபங்காதிலீலே* என்கிற விசேஷணம் ஸ்ரீமந்நாராயண னொருவனுக்குத் தவிர இன்னொரு வ்யக்திபிடத்தில் ஸமந்விதமாகு மென்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர் நினைப்பதுண்டா? ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களுக் கெல்லாம் வழிகாட்டியான ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்னத்தில் (ச்லோ. 11.) *ஸ்வாபாவிகா நவதிகாதிசயேசித்ர்த்வம் நாராயண! த்வயி ந ம்ருஷ்யதி வைதிக: க:? ப்ரஹ்மா சிவச் சதமக: பரமஸ் ஸ்வராடிதி ஏதேபி யஸ்ய மஹிமார்ணவ விப்ருஷஸ் தே* என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தியொன்று போதும் வைதிகர்கள் தெளிவுபெற. நாராயணனுடைய ஐச்வர்யமானது ஸ்வாபாவிகமென்றும், [அதாவது, அந்யாதீந மன்றென்றும்] அநவதிகாதிசயமென்றும் இதில் கண்டோக்தம். *பதிம் விச்வஸ்யாத் மேச்வரம்* ப்ரசாஸிதாரம் ஸர்வேஷாம் *மத்த: பரதரம் நாந்யத்* இத்யாதி அபரிமித ப்ரமாணங்களினால் ஸர்வோத்துங்க தத்வமாகச் சொல்லப்படுகிற நாராயணனுக்கும் நியாமகவஸ்து ஒன்றிருப்பதாக ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எழுதுவது மஹத்தான ஸாஹஸம். *ந தஸ்யேசே கச்சந தஸ்ய நாம மஹத் யச:* என்கிற உபநிஷத் வாக்யத் தில் தச்சப்த நிர்திஷ்டமான தேவதை எதுவென்று நினைத்திருக்கிறாரோ இவர்? *ஹிரண்யகர்ப்ப இத்யஷ்டௌ* என்று உபநிஷத்து காட்டுகிற எட்டுருக்குக்களில் *பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத்* என்றும், *யஸ்ய விச்வ உபாஸதே ப்ரசிஷம்* என்றும், ஸர்வநியந்தாவாக ஓதப்படுகிற தேவன் "மேலானவொரு மூல சக்தியின் கட்டளையை.............." என்கிற ஐயங்காருடைய வாக்கியத்தில் மேலான மூல சக்தி யாகக் குறிப்பிடும் வஸ்துவா?

ஆயிரம் வருஷங்களுக்கு முன்னே ஆளவந்தார் "நாராயண! த்வயி ந ம்ருஷ்யதி வைதிக: க:?" என்று கேட்டிருந்ததற்கு "அஹமஸ்மி அம்ருஷ்யந் வைஷ்ணவோ வைதிக:" என்று விடையிறுக்க இவ்வையங்கார் இன்று தோன்றினார் போலும். நாராயணனை அர்ணவமாகவும், மற்றையோர்களை சீகரமாகவும் வைத்துப் பேசியுள்ள ஆளவந்தாரைப் போற்றுங் குடியிலே பிறந்தவர்கள் 'நாராயணனும் சீகரமே;

வேறேயொரு அர்ணவமிருக்கின்றது' என்று பேசுவது ஜன்மாந்தரஸஹஸ்ர நற்றவப் பயன்போலும். மேலும் எழுதியுள்ள வார்த்தையும் அசங்கிதம்.

ஸ்ரீரங்கநாதனுடைய திருநாபிக்கமலத்தை வருணித்தருளிச் செய்யாநின்ற பட்டர், ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்,

"த்ரயோ தேவாஸ் துல்யாஸ் த்ரிதயமித மத்வைதமதிகம்
த்ரிகாதஸ்மாத் தத்வம் பரமிதி விதர்க்காந் விகடயந்,
விபோர் நாபீபத்மோ விதிசிவநிதாநம் பகவதஸ்
ததந்யத் ப்ரூபங்கீபரவதிதி ஸித்தாந்தயதி நః"

என்கிற சுலோகத்தினால் வெளியிட்டருளின அர்த்தம் மிகச் சீரியது. இதன் பொருளைச் சிறிது விவரிக்கிறேன். [த்ரயோ தேவாః துல்யாః] அரி அயன் அரனென்னும் மூன்று தெய்வங்களுக்கும் ஸாம்யஞ் சொல்லுவர் சிலர். [த்ரிதயம் இதம் அத்வைதம்] இம் மூன்று தெய்வங்களும் வெவ்வேறல்ல, ஒன்றே யென்பர் சிலர். கீழே சொன்னது த்ரிமூர்த்தி ஸாம்யவாதம்; இது த்ரிமூர்த்தியைக்யவாதம். வஸ்துக்களின் பேதத்தை யொப்புக்கொண்டு அவற்றுக்கு ஏற்றத்தாழ்வுகளில்லாமை சொல்லுவது ஸாம்யவாத மெனப்படும். வஸ்துக்களுக்கு பேதத்தையே ஒப்புக் கொள்ளாமை ஐக்யவாதமெனப்படும். [அதிகம் த்ரிகாதஸ்மாத் தத்வம் பரம்] இம் மூன்று தெய்வங்களிற் காட்டிலும் மேற்பட்டதான துரீய ப்ரஹ்மமே பரதத்துவமென்று உத்தீர்ணவாதம் பண்ணுவர் சிலர். [இதி விதர்க்காந் விகடயந் விபோః நாபீபத்ம: இத்யாதி.] இத்தகைய விதர்க்கங்களை யெல்லாம் அடியறுக்கின்ற திருநாபிக் கமலமானது ப்ரஹ்மருத்ரர்களுக்கும் முதற்கிழங்காயிருந்து கொண்டு உலகமெல்லாம் ஸ்ரீமந்நாராயணனுடைய புருவ நெறிப்புக்குப் பரவசப்பட்டதென்கிற ஸித்தாந்தத்தை நமக்கு நன்கு தெரிவிக்கின்றது என்றதாயிற்று.

நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் (72) *முதலாந் திருவுருவம் மூன்றென்பர்,
ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர்—முதல்வா!
நிகரிலகுகாருருவா! நின்னகத்ததன்றே, புகரிலகு தாமரையின் பூ.*

என்று அருளிச் செய்துள்ள பாசுரத்தையே பட்டர் இந்த ச்லோகரத்னத்தினால் வியாக்கியானித்தருளினபடி. அடியேனுடைய பெரிய திருவந்தாதி திவ்யார்த்த தீபிகையிலும் ஸ்ரீரங்கராஜஸ்தவ வியாக்கியானத்திலும் விசதமாகக் காண்க. இவ்வுபந்யாஸத்திற்கு சிகரமான விஷயம் அடுத்த உபந்யாஸத்தில் காணத்தக்கது. (165)

## 166. கீதாபாஷ்யதாத்பர்யசந்த்ரிகாவிசேஷோபந்யாஸம்

கீழுபந்யாஸத்தின் அநுபந்தமாகவே இவ்வுபந்யாஸம் எழுகின்றது. ஸ்ரீமந் நாராயணமூர்த்திக்கு மேலாக வொரு மூலசக்தி யிருப்பதாகவும், அதன் கட்டளையை நிறைவேற்றுவதே நாராயணனுடையவும் பணியென்பதாகவும் ஒரு பிரமாணத்திற்கும் கட்டுப்படாமல் ஸ்வச்சந்தமாகப் பேசின ஓர் ஐயங்காருடைய குத்ஸிதவாதம் கீழுபந்யாஸத்தில் அடியறுக்கப்பட்டது. அந்த துர்வார்த்தையை ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுருவும் அடியறுத்திருப்பது இங்குக் காட்டப்படுகின்றது. அப்பேராசிரியர்

தமது நூல்களில் பல விடங்களில் அந்த வாதத்தைக் கண்டித்திருந்தாலும் கீதா பாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் முக்கியமானவோரிடம் எடுத்துக்காட்டப்படுகிறதிங்கு.

கீதையில் பத்தாமத்யாயத்தில் (ச்லோ. 11) "பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவாந்" என்பது அர்ஜுனனுடைய வார்த்தை. அவ்விடத்தில் பாஷ்யத்தில் "நாராயண பரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர:, நாராயண பரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர:* இதிஹி ச்ருதயோ வதந்தி" என்று முடிக்கப்பட்டது. இதை விவரிக்கப் புகுந்த தாத்பர்ய சந்த்ரிகையில் (நாராயண பரம் ப்ரஹ்ம) என்றவிடத்திலும் (நாராயணபரோர்ஜ்யோதி:) என்ற விடத்திலும் சிலர் நாராயணுத் பரமென்று பஞ்சமீதத்புருஷ ஸமாஸம்பண்ணி நாராயணனிற் காட்டிலும் மேம்பட்டதாக ஒன்றிருப்பதாய் அபார்த்தம் செய்வதுண்டாகையாலே அதனை நிரஸிக்கத் திருவுள்ளம்பற்றின நிகமாந்தமஹாகுரு,

> "....நாராயணேதி. அநயோர் வாக்யயோ: ப்ரதமௌ நாராயண சப்தௌ லுப்தவிபக்திகௌ; *தத்வம் நாராயண: பர:* இத்யாதி ஸஹபாடவசாத் வ்யஸ்தத்வம் ப்ரதமாந்தத்வஞ்ச ப்ராப்தம். ததைவ ஸவிபக்திகதயா ச்ருத்யந்தரே அதீயதே * நாராயண: பரம் ப்ரஹ்ம * இத்யாதி. ஏதேந பஞ்சமீஸமாஸதாம் வதந் பகவத் த்வேஷீ ப்ரத்யுக்த:; ஸர்வ ச்ருதி ஸ்ம்ருதிஸூத்ரந்யாய விரோதாச்ச."

என்றெழுதியுள்ளார், இதில் "பகவத்த்வேஷீ" என்று விருது சாத்தப்பெற்ற மஹாநுபாவர் யாரோ! என்கிற ஸந்தேஹம் இன்று தீர்ந்தது. இந்த தாத்பர்ய சந்த்ரிகா ஸ்ரீஸூக்தியை யடியொற்றியே வேதாந்த கௌஸ்துபகாரர் "..... சாகாந்தரீய: ஸவிஸர்க்க: பாட: ச்வபசஸ்ய ஜிஹ்வாம் ச்சிநத்தி" என்றெழுதி வைத்தார். (நாராயணபர:) என்ற ச்ருதியில் பஞ்சமீஸமாஸம் கொண்டுதானே நாராயணனுக்கும் மேற்பட்டதொன்று இருப்பதாகப் பேசவேண்டும், அந்தப் பேச்சு பலநூற்றுண்டுகட்கு முன்னமே அடியறுக்கப்பட்டிருக்க, அது மீண்டும் இப்போது தலைகாட்டத் தொடங்கியதும் நன்மைக்காகவே யாயிற்று. ... ... (166)

## 167. பதின்மர் திருப்பள்ளியெழுச்சியாராய்ச்சி

திருப்பாவைக்குத் தனியனருளிச்செய்த பட்டர் "நீலா துங்கஸ்தநகிரிதடீஸுப்த முத்போத்ய க்ருஷ்ணம்" என்று *நப்பின்னை கொங்கை மேல் வைத்துக்கிடந்த மலர் மார்பனை கண்ணபிரானை ஆண்டாள் திருப்பள்ளி யுணர்த்தினதாகக் கூறினர். ஆனல் கண்ணபிரானைத் திருப்பள்ளியுணர்த்தின பாசுரங்கள் சிலவே. ஆய்ச்சிகளைத் துயிலுணர்த்தின பாசுரங்கள் பத்து. *புள்ளுஞ் சிலம்பினகாண்* என்கிற ஆருவது பாசுரம் முதலாக *எல்லேயிளங்கிளியே* என்கிற பதினைந்தாம் பாசுரமீருகவுள்ள பத்துப் பாசுரங்களினல் பாகவதோத்தமிகளைத் திருப்பள்ளி யுணர்த்தியிருப்பது காண்கிறோம். பகவத் கீதை பத்தாமத்யாயத்தில் (9.) *மச்சித்தா மத்கதப்ராணு போதயந்த: பரஸ்பரம், கதயந்தச் ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச* என்ற சுலோகத்தில் "பரஸ்பரம் போதயந்த:" என்று பணித்தது பாங்காகப் பரிபாலிக்கப்பட்டபடி. எழுப்பவேண்டும்படி உள்ளே கிடப்பவர்கள் மச்சித்தா: என்றதற்கு இலக்கானவர்கள், வெளியிலே நின்று எழுப்புமவர்கள் மத்கதப்ராணு: என்றதற்கு

இலக்கானவர்கள். இதற்குமேல் "போதயந்த: பரஸ்பரம்" என்றதற்கு இங்கு விஷய மில்லை போல் தோன்றும்; வெளியில் நிற்பவர்கள் மட்டுமே யெழுப்புவதனால் பரஸ்பர ப்ரபோதனமில்லையே யென்று நினைக்கக் கூடும். ஆழ்ந்து நோக்கினால் இதுவுமுண்டென்பது விளங்கும். இந்த பாகவதத் திருப்பள்ளி யெழுச்சியில் கடைப் பாசுரமான * எல்லே யிளங்கிளியில் பரஸ்பர ஸம்பாஷணை ஸுஸ்பஷ்டம். இது மற்ற ஒன்பது பாசுரங்களில் நிகூடம் என்று வ்யாக்யாதாக்களான பரமாசாரியர் கள் திருவுள்ளம்பற்றி யிருப்பது காண்க.

இந்தப் பத்துப் பாசுரங்களாலும் ஆழ்வார்கள் பதின்மரும் எழுப்பப்படுவ தாகக் கொள்வதிலே மிக்க ஔசித்யமுள்ளது. இரண்டு மூன்று நூற்றாண்டுகட்கு முன்பு வாழ்ந்த வொரு வானமாமலை ஜீயர்ஸ்வாமி தாம் பணித்த ஸ்வாபதேசவுரை யொன்றில் இந்த யோஜனையைக் காட்டியுள்ளார். ஆனால் அவர் ஆழ்ந்து உபபத்தி களை நிரூபியாமல் "பேய்ப் பெண்ணே! என்றிருப்பதனால் பேயாழ்வாரை யெழுப்பு கிறது" என்ற ரீதியிலே எழுதியுள்ளார். தவிரவும் இங்கு எழுப்பப்படுவதாகக் கருதப்படுகிற ஆழ்வார்களுக்கு ஓர் அடைவும் கொண்டிலர். அது நிற்க. பாசுரம் பாடின ஆண்டாள் ஆழ்வார்கள்பதின்மரை யெழுப்புவதாகத் திருவுள்ளம்பற்றியிருந் தாளா? இன்ன பாசுரத்தினால் இன்ன ஆழ்வாரை யெழுப்புவதாகத் திருவுள்ளம் பற்றியிருந்தாளா? என்று ஆராயப் புகுவோமாயின் இது பயனற்ற ஆராய்ச்சியே யென்று தேறும். ஸ்ரீராமாயணஶ்லோகங்களுக்கு எட்டு அர்த்தங்கள் பத்து அர்த் தங்கள் ...பேராசிரியர்கள் பணிக்கக் காண்கிறோம். வேதாந்தவாசிரியர் தத்வடீகை தொடங்குகையில் "அகிலேத்யாதி பாஷ்யஸ்ய தசார்த்தாந் அபிதத்மஹே" [*அகிலபுவநஜந் மேத்யாதி ஸ்ரீபாஷ்ய மங்களச்லோகத்திற்குப் பத்துப் பொருள்கள் பணிக்கிறோம்] என்கிறார். இப்படி அவரவர்கள் பலபலவாகப் பணிக்கும் பொருள்களெல்லாம் மூல வக்தாக்கள் கருதியவைதானா? என்று கேட்டால் யார் என்னவிடை யிறுக்கமுடியும்.

முற்காலத்தில் அக்ஷோப்ய முனிக்கும் வித்யாரண்யர்க்கும் த்வைதாத்வைத சர்ச்சை நடந்ததாகவும், இருதரப்பு வாதங்களையு மேடுபடுத்தி வேதாந்த வாசிரியர் கடாக்ஷிக்கவனுப்பி மத்யஸ்த நிலையில் அபிப்ராயம் தெரிவிக்குமாறு கோரியதாக வும், ஸ்வாமி *அஸிநா தத்த்வமஸிநா பரஜீவப்ரபேதிநா, வித்யாரண்ய மஹாரண்யம் அக்ஷோ ப்யமுநிரச்சிநத்* என்றொரு காரிகையை யெழுதி யனுப்பினதாகவும் சொல்லப்பட்டு வருகிறது. மேலே காட்டின காரிகையினால் வித்யாரண்யர்க்கு பங்கமும் அக்ஷோப்ய முனிக்கு வெற்றியும் ஸ்வாமி திருவுள்ளம்பற்றி யருளினதாகச் சொல்லி வருகிறார்கள். இதே சுலோகத்திற்கு வித்யாரண்யபக்ஷபாதிகள் என்ன அர்த்தம் சொல்லுகிறார்க ளென்னில்; "வித்யாரண்ய மஹாரண்யம்" என்பதை ஸமஸ்தபதமாகக் கொள் ளாமல் [வித்யாரண்யராகிற மஹாரண்யத்தை என்று ரூபகமாகக் கொள்ளாமல்] இரண்டு பதமாகப் பகுத்து ஹேவித்யாரண்ய! என்று ஸம்போதனமாக்கி மஹாரண்ய மென்பதற்கு ப்ருஹதாரண்ய கோபநிஷத்தென்று பொருளாக்கி, ஓவித்யாரண்யரே! அக்ஷோப்ய முனியானவர் ப்ருஹதாரண்யக உபநிஷத்தைக் கெடுத்துவிட்டார் (அதாவது) அதற்கு விருத்தமாக வாதம் செய்திருக்கிறார்—என்றதாக அர்த்தம் சொல்லி வருகிறார்கள். இது ஸ்வாமியினுடைய திருவுள்ளத்திற்கு ஈஷத்தும் இணங்

கியதன்று என்பது நமக்குத் தெரியும். ஸ்வாமி கருதிய பொருள் இப்படித்தான் என்று பிறர் வாதாடினல் இதற்கு ஒய்வு ஏது? திருப்பாவைப் பாசுரங்களுக்கு அர்த்தம் செய்வதில் இப்படிப்பட்ட அஸங்தர்ப்பங்களுக்கு ப்ரஸக்தியில்லை. இந்த பாசுரத்தினல் இன்ன ஆழ்வார் திருப்பள்ளி யுணர்த்தப்படுகிறார் என்று ஒருவர் கூறினல், மற்றொருவர் 'அவ்வாழ்வாரல்லர், இவ்வாழ்வாரே' என்னலாம். அதற்குரிய உபபத்திகளைக் காட்டிவிட்டால் ப்ராமாணிகர்களும் ரஸிகர்களுமானவர்கள் அஞ்ஜலி செய்யவும் தலை துலுக்கவும் ப்ராப்தமாகும். ஏதோ ஒன்றிரண்டு இரண்டு மூன்று பதங்களையோ வார்த்தைகளையோ கொண்டு "இவற்றுக்குச் சேர இவ்வாழ்வாரை நான் இப்பாட்டுக்கு இலக்காக நிர்ணயிக்கிறேன்" என்று ஒருவர் கூறினல், ஸர்வாத்மநா உபபந்நமான நிர்வாஹம் காண்கிற வரையில் அது ரஸ்யமாகலாம். அடுத்த உபந்யாஸம் இவ்வுபந்யாஸத்தின் அநுபந்தமாகும். .... .... (167)

## 168. திருப்பாவைப் பாசுரங்களில் ஆழ்வார்களின்நிர்ணயம்,

கீழ் 167 ஆம் உபந்யாஸத்தை நன்றாக மனனம் செய்து கொண்டு இவ்வுபந்யாஸத்திலே அவகாஹிப்பது. திருப்பாவையில் * புள்ளும் சிலம்பினகாண் தொடங்கி * எல்லே யிளங்கிளியே யளவும் பத்துப் பாசுரங்களினல் ஆழ்வார்கள் பதின்மரைத் திருப்பள்ளி யுணர்த்துவதான ப்ரஸ்தாவத்தை அடியோடு இசையாமல் "இது வீணன கல்பனை, அஸங்கதமான கல்பனை, அநாவச்யகமான ப்ரயாஸம்" என்று சிலர் சொல்லிவிடுவதுண்டு. அப்படிப்பட்டவர்களைப் பற்றி நமக்கு ஏதும் விவக்ஷிதமில்லை. ஆழ்வார்களை யெழுப்புவ தென்கிற பக்ஷத்தை அங்கீகரித்து விட்டால், அப்படி அங்கீகரிக்குமவர்கள் அடியேன் காட்டும் வழியையே தஞ்சமாகக் கொண்டு தீரவேண்டுமென்று, இதை அடியேன் கல்வெட்டாகச் சொல்லத் துணிகிறேன்.

ஆழ்வார்களின் அடைவு எங்ஙனே யிராநின்ற தென்னில்; ஆண்டாளுக்கு முன்னே எழுவரும், பின்னே மூவருமாகவுள்ளது. முன்னேயுள்ள எழுவரை பொய்கையார் பூதத்தார் பேயார் மழிசையர்கோன் மாறன் குலசேகரன் பட்டநாதன் என்கிற அடைவிலும், பின்னேயுள்ள மூவரை தொண்டரடிப் பொடிகள் திருப்பாண் பெருமாள் கலியன் என்கிற அடைவிலும் காண்கிறோம். இவர்களைத் திருப்பள்ளி யுணர்த்து மாண்டாள் எவ்விதமான அடைவைத் திருவுள்ளம்பற்றினளென்னில், தனது திருத் தந்தையாரும் ஆசாரியருமான பெரியாழ்வாரை முதல்வராக்கி, அதன் பிறகு ஆரோஹணக்ரமத்தைக் கொண்டு குலசேகரர் காரிமாறன் மழிசைமன்னன் பேயார் பூதத்தார் பொய்கையார் என்னுமிவர்கட்கு தான் கொண்ட அடைவு தப்பாமல் திருப்பள்ளி யெழுச்சிபாடி, [இவ்வளவோடு பன்னிரண்டு பாசுரங்களைத் தலைக்கட்டி] மேல் மூன்று பாசுரங்களாலே பிற்பட்ட ஆழ்வார்கள் மூவரையும் அவர்களது அவதார அடைவு தப்பாமல் முறையே திருப்பள்ளி யுணர்த்தியிருப்பதாக ஸ்பஷ்டமாய்த் தெரியவருகின்றது. 'இந்த பாசுரத்திற்கு இன்ன ஆழ்வார் தாம் இலக்கானவர்' என்பதை நிர்ணயிப்பதற்கு ஆண்டாள் ஒன்றிரண்டு சான்றல்ல, பலசான்றுகள் பொறித்திருக்கின்றாள். அவ்வவ்வாழ்வார்களின் சரித்திரம் காட்டுதல், அவரவர்களின் அஸாதாரணமான அனுபவங் காட்டுதல், அவரவர்களின் ஸ்ரீஸூக்தி தண்டங்கள் நினைவுக்கு வரும்படி செய்தல்...என்றிங்ஙனே பல சான்றுகளைப் பாசுரந்

# ஆசார்ய ஸார்வபௌமனான நிகமாந்த குருவின் அயிந்தை திருமாளிகைக்கு அழகுற்ற திருப்பணி

இவ்விருள் தருமாஞாலத்தில், எம்பெருமாற்கடிமை செய்வாரையும் சேறும் ஐம்புலன் பெற்ற மானிடர்க்கு பகவத் பாகவத கைங்கர்யத்தில் அபிநிவேசம் கதாசித் உண்டாகுமேயானாலும் அது அவர்கள் முன் செய்த நல்வினைப் பயனேயானாலும் ஆசார்ய க்ருபையின் ஈருகவமைந்தது என்பது மறுக்கவொண்ணாதது. இஃதினிலும் விஞ்சி கைங்கர்யமே கண்ணாகவும், நித்ய கர்த்தவ்யமாகவும் கொண்டு அஃதினை அனவரதம் அனுஷ்டிப்பதில் சதாத்வரையாக இருந்துவரும் ஒரு மஹான் இந்த லீலா விபூதியின்கண் உளரென்றால் அவர் தார்மிகரத்னமான



ஸ்ரீமான் M. சுதர்சனமையங்கார் ஸ்வாமியே. இந்த ஸ்வாமி சுமார் ரூ. 3500/- செலவில் திருவஹீந்திரபுரத்திலுள்ள ஸ்வாமி ஸ்ரீ தேசிகனின் புராதன திருமாளிகைக்கு நல்லதோர் மரக்கதவு சிறந்த வேலைப்பாட்டுடன் சேமக்காப்பாகவமைத்துத் தந்தது சிறந்த நற்பணியன்றோ. இது செய்யும் வகையில் ஸ்வாமி காட்டியுள்ள த்வரையோ ஆசார்யபக்தியோ எழுதவொண்ணாது. வெகுகாலமாக இப்படியொரு கைங்கர்யம் நிறைவேறாமலிருந்த குறையை இந்த ஸ்வாமியைக்கொண்டு கைங்கர்யபூர்த்தி செய்துகொண்டது ஆசார்யனின் கடாக்ஷ பலமன்றோ.

இத்திருப்பணியின் பூர்த்தி கார்த்திகை மாதம் 14-ந் தேதி (29—11—1965) ச்ரவண நன்னாளில் ஸ்வாமி தேசிகனாலேயே அமைந்ததும் ஒரு தனிச்சிறப்பு. ஸ்வாமி இந்த நன்னாளில் திருமாளிகைக்குப் புறப்பாடு கண்டருள தத்வியாஜமாக இந்த நூதன நிர்மித கவாடங்களைத் திறந்து வைத்ததும் ஸ்வாமியின் முத்திரையைப் பெற்றதாகவன்றோ வமைந்தது.

இவ்வரிய ஸந்தர்ப்பத்தை வ்ருதாவாக்காமல் அத்திருமாளிகையின் நிர்வாஹஸ்தர்கள், ஸ்ரீ ஸுதர்சனமையங்கார் ஸ்வாமிக்கு ஒரு பாராட்டு விழா நடத்தி பொன்னாடை போர்த்தி கௌரவித்தது மிகப்பொருத்த முடையதே. இவ்வைபவத்துக்கு ஸ்ரீமத ஹோபிலமடம் ஆஸ்தான வித்வான் திருக்கள்ளம் ஸ்ரீ உ. வே. நரசிம்மராகவாச்சாரியார் ஸ்வாமி அத்யக்ஷராக இருந்ததும் வித்வான் ஸ்ரீ உ. வே. ஈ. தே. ஸ்ரீநிவாஸாச்சாரியார் ஸ்வாமி பாராட்டிதழ் வாசித்தளித்ததும், ஸ்ரீ உ. வே தி. ஈ. ராமபத்ராசாரியார் ஸ்வாமி வந்தனோபசாரம் வழங்கியதும் முக்கிய அம்சமாகும்.

இப்படிக்கு, D. ஆராவமுதன்.

# ஸ்ரீ உ.வே. K. வீரராகவாசாரியர் ஸ்வாமி (வைதண்டவாஸி)

தினப்படி ஜனன மரணங்கள் அளவில்லாமல் நடந்துவருகின்றன. பிறப்பவர்களை யெல்லாம் பிறந்தார்களாக நாம் நினைப்பதில்லை. பதினாயிரத்தில் ஒருவரோ இருவரோதான் பிறந்தார்களாகப் பரிகணிக்கப்படுகிறார்கள். "பரிவர்த்தினி ஸம்ஸாரே ம்ருத: கோ வா ந ஜாயதே, ஸ ஜாதோ யேந ஜாதேந யாதி வம்சஸ் ஸமுந்நதிம்." என்றான் ஒரு மஹாகவி. அப்படிப்பட்ட மஹநீயர்களின் திருவுருவப் படங்களை ஸம்பாதித்து அடியேனுடைய பத்ரிகைகளிலும் நூல்களிலும் சேர்த்து வெளியிட்டுவரவேணுமென்கிற அபிருசியைப் பலகால் வெளியிட்டிருக்கிறேன். இப்போது இங்கு ஒரு மஹநீயரை ஸேவிக்கப்பெறுகிறீர்கள். இந்த ஸ்வாமி நிகழும் விச்வாவஸு ஆண்டு ஐப்பசிமாதத்தில் (19-10-65) பரமபதித்தார். அப்போது இந்த ஸ்வாமியின் திருநக்ஷத்திரம் 88. வயோவ்ருத்தர் என்பதுமட்டுமன்றிக்கே சில வ்ருத்தருமாவர். 15 வருடங்களுக்கு முன்பு அடியேன் ஸபரிவாரனாக பதரிகாச்ரமம் விடைகொண்டிருந்தபோது இந்த ஸ்வாமியும் தேவியாருடன் அந்த யாத்திரையில் அந்வயித்திருந்தார். ஒரு மூன்றுமாதகாலம் இந்த ஸ்வாமியோடு ஸஹவாஸம் செய்யும் பாக்கியம் கிடைத்ததடியேனுக்கு. இவருடைய ஸதாசார ஸதநுஷ்டானங்களைத் தொண்ணூறுநாள் கூட விருந்து அநுபவித்தவனடியேன்.



ஸ்ரீமத். K. வீரராகவாசாரியர் ஸ்வாமி (திருநெல்வேலி ஜி.)

மனிதர்களுக்கு இயற்கையாக எத்தனையோ தோஷங்கள் ஏற்படுவதுண்டே; அக்குற்றங்களில் ஒன்றுகூட இந்த ஸ்வாமியை ஸ்பர்சித்திருக்கவுமில்லை. "ஜப்தவ்யம் குருபரம்பரையும் த்வயமும்" என்று ஆசாரியர்கள் அருளிச்செய்திருப்பதை ப்ரத்யக்ஷமாக அடியேன் பார்த்தது இந்த ஸ்வாமியினிடத்தில்தான். தீர்த்தம் கண்டவிடங்களில் ஆசமனப்ராணாயாமங்கள் செய்து ஜபத்தில் அமர்ந்துவிடுவர். ஆஹாரநியதியுள்ளவர். தவறாது ஸ்ரீராமாயண பாராயணம் செய்வதை விரதமாகக் கொண்டவர். சில காண்டங்களை கண்டஸ்தமாகவும் வைத்துக் கொண்டிருந்தார். ஸ்வஸ்தானத்தில் இருவேளையும் தேவாலயஞ்சென்று பெருமாளை ஸேவித்துவருவதை நியமமாகக்கொண்டிருந்தவர். நாச்சியார் கோவிலில் ப்ரஸித்த வித்வானாக எழுந்தருளியிருந்த நடாதூர் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் திருவடிஸம்பந்தம் பெற்றவர். திருநெல்வேலி ஜில்லா கோபாலஸமுத்ரம் கிராமத்தில் ஜனித்தவர். இவர்க்குத் திருக்குமாரர்கள் இருவர். மூத்தவர் ஸ்ரீமான். G. V. லக்ஷ்மீவராஹன். இளையவர், ஸ்ரீமான். G. V. லக்ஷ்மீநாராயணன். இருவரும் சென்னையில் நல்ல பதவியில் வாழ்கிறார்கள். எனக்கு ஸஹோதரர்களென்னும்படி வாழ்பவர்கள். அவ்விருவரும் நீடூழி வாழ்க.

தோறும் அமைத்திருப்பது அற்புதமானது, மிகவாச்சரியமானது. தெய்வவாக்குகளில் இப்படி அமைவது தெய்வ ஸங்கல்பத்தாலன்றி மநுஷ்யேச்சையாலன்று.

வடமொழிக்கவிகளும் தென்மொழிக்கவிகளும் ச்லேஷயமகங்களை வைத்துக் கவிபாடுவர்கள். இருபாஷையிலும் வெவ்வேறுவிஷயங்களில் இரண்டுமூன்றுநான்கு பொருள்கள் தோன்றும்படி பதப்ரயோகங்களைச் செய்வர்கள் நிபுண கவிகள். ஆனால் இத்தகைய பிரயோகங்கள் ஆலோசித்தாலோசித்து புத்திபூர்வமாகச் செய்யப்படுமவை. அப்படியல்லாமல், 'என்னைக் கொள் என்னைக் கொள்' என்று பொருள்கள் மிடைதந்து மிளிரும்படி திருவாக்குக்கள் அமைந்தால் அது தெய்வ வாக்கேயாம், அதுதான் தெய்வவாக்கு. * புள்ளுஞ்சிலம்பினகாண்முதல் * எல்லே யிளங்கிளி வரையிலுள்ள பாசுரங்களினால் உணர்த்தப்படுகின்ற ஆழ்வார்கள் பதின்மரைப்பற்றின விவரணம் அடியேனுடைய திவ்யார்த்ததீபிகைப் பதிப்பொன்றில் ஏற்கெனவே வெளிவந்திருந்தாலும் ஸம்க்ஷேபமானவதனால் ரஸிகர்களுக்குப் பரிபூர்ணத்ருப்தி பிறவாதென்று கருதி இப்போது ஸம்க்ஷேபருசியை விட்டுச் சிறிது விரிவாகவே விளக்கி யமைக்கின்றேன். மேல்வரும் பத்து உபந்யாஸங்களும் அடைவே நோக்கத்தக்கன.

அலங்கார சாஸ்த்ரத்தில் முத்ராலங்கார மென்பதொன்று. "ஸூச்யார்த்த ஸூசநம் முத்ரா ப்ரக்ருதார்த்தபரை: பதை:" என்பது அதன் லக்ஷணம். ஸூசிப்பிக்க வேண்டிய விஷயத்தை ஸூசிப்பிக்கும் சொற்கள் முன்னும் பின்னும் ஒழுங்காக அந்வயித்தாகவேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லை. அவ்வோபதங்கள் தனித்தனி யாகவே நின்று ஸூசிப்பிக்கவேண்டிய விஷயத்தை ஸூசனை செய்யக் குறை யில்லை. இந்த முறை ஸம்ஸ்க்ருத காவியங்களில் விசேஷமாகவுண்டு. இனி பத்துப் பாசுரங்களுக்கும் ஆழ்வார்கள் பரமான பொருளின் பொருத்தங்களை விவரிக்கிறேன்.

## 169. புள்ளுஞ்சிலம்பினகாண்—பெரியாழ்வார்.

புள்ளும்சிலம்பினகாண் புள்ளரையன்கோயில் *
வெள்ளைவிளிசங்கின்பேரரவம் கேட்டிலையோ *
பிள்ளாய்!எழுந்திராய் பேய்முலைநஞ்சுண்டு *
கள்ளச்சகடம் கலக்கழியக்காலோச்சி *
வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை *
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும்யோகிகளும் *
மெள்ளவெழுந்து அரியென்றபேரரவம் *
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். (6)

பாகவதோத்தமர்களை யெழுப்பும் பத்துப் பாசுரங்களில் முதற் பாசுரமான இது பெரியாழ்வாரை யுணர்த்துகின்றதென்பது பாட்டிலுள்ள எட்டடிகளாலும் மூதலிக்கப்படுகின்றது. முதலில் இப்பாட்டிலுள்ள விளியைக் கொள்வோம்,

பிள்ளாய்! என்பது விளி. அறிவில்லாதவளே! என்பது இதன் பொருள். *ப்ராஹ வேதாந் அசேஷாந்* என்றும் *வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்* என்றும் மஹாஜ்ஞான நிதியாகப் புகழப்பட்டவிவரை அறிவில்லாதவரே! என் றழைப்பது பொருந்துமோ? மஹாபசாரமாகாதோ? என்று சங்கிக்க நேரும். இவர்க்குப் பெரியாழ்வாரென்று திருநாமம் ப்ரஸித்தமானதற்கு எது ஹேது? என்று ஆராயுமளவில் "மங்கலாசாசனத்தில் மற்றுள்ள வாழ்வார்கள் தங்கள் ஆர்வத்தளவு தானன்றிப்—பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றன், பெரியாழ்வாரென்னும் பெயர்" என்கிற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தினுல் மங்களா சாஸனத்திலுண்டான அபிநிவேசந்தான் ஹேதுவென்று தேறுகிறது. *மங்களாநாஞ்ச மங்களம்* என்றிருக்கிற எம்பெருமானுக்கு இவர் மங்களாசாஸனம் பண்ணப்புகுவது பொருந்துமோ? என்று தோன்றுகிற சங்கைக்கு நம் பூருவாசாரி யர்கள் என்ன பரிஹாரம் செய்தருளினர்களென்றல், "ஜ்ஞான விபாககார்யமான அஜ்ஞானத்தாலே வருமவை யெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்கிற ஸ்ரீவசந பூஷண சூர்ணையினுல் அதையுணரலாம். எம்பெருமானுடைய ஞானம், சக்தி, ஐச்வர்யம், வீர்யம், பராக்ரமம் முதலான திருக்குணங்களில் அஜ்ஞானமுண்டாகியே மங்களாசாஸன ப்ரவ்ருத்தி விளைகின்றது. அவனுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார் யங்களில் மட்டும் கண்ணைச்செலுத்தி ஜ்ஞானசக்தியாதிகளை மறந்ததனுல்தான் அத்தலைக்கு ரக்ஷைபிடுவதாகிற மங்களாசாஸனம் செய்யப்ராப்தமாகிறது. மறதி யென்பது அஜ்ஞானப்ரபேதமே யாதலால் இந்த அஜ்ஞானமே காரணமாகப் பெரியாழ்வார் பிள்ளாய்! என அழைக்கப்பட்டார். நம்மைப்போல ஆழ்வாரும் அஜ்ஞானியா? என்று வினவலாகாது. நம்முடைய அஜ்ஞானம் கர்மநிபந்தன மாகையாலே ஹேயம். ஆழ்வாருடைய அஜ்ஞானமானது 'ஜ்ஞானம் மிகமுற்றி அஜ் ஞானமாகப் பரிணமித்தது' என்னும்படி விளைந்ததாதலால் ஹேயமன்று, பரமோ பாதேயம். ஆகவேதான் "ஜ்ஞானவிபாக கார்யமான அஜ்ஞானம்" என்று ஸ்ரீவசநபூஷண ஸூக்தியுள்ளது. ஆக, பிள்ளாய்! என்கிற விளி மங்களாசாஸன பரதையையிட்டுப் பெரியாழ்வார்க்கே பொருந்தும்.

பிள்ளாய்! என்பதற்கு மற்றொருவகையாகவும் பொருள் கூறலாம். ப்ருஹதா ரண்யக உபநிஷத்தில் (5-5-1) "தஸ்மாத் ப்ராஹ்மணஃ பாண்டித்யம் நிர்வித்ய பால்யேந திஷ்டாஸேத்" என்று ஓதியிருக்கின்றது. 'பரிபூர்ண ஞானத்தைப்பெற்று பால்யத் தோடு இருக்கவேணும்' என்றது. இதன் பொருளை சாரீரகமீமாம்ஸையில் [ப்ரஹ்ம ஸூத்ரத்தில்] (3-4-49.) * அநாவிஷ்குர்வந் அந்வயாத் * என்கிற ஸூத்ரம் விவரிக் கின்றது. ப்ரஹ்ம வித்யையை அதிகரித்தவன் தன்னுடைய மாஹாத்மியத்தை வெளிப்படுத்தாமல் [செருக்குக் கொள்ளாமல்] இருக்கவேண்டுமென்பதே 'பால்யேந திஷ்டாஸேத்' என்பதற்குப் பொருள் என்றதாயிற்று. அநாவிஷ்கார ரூபமான பால்யமே உபநிஷத் விவக்ஷிதமென்றபடி. பெரியாழ்வாரிடத்தில் இத்தகைய பிள்ளைத்தன மிருந்ததென்றுகொண்டு பிள்ளாய்! என விளித்ததாகக் கொள்ளலா மாயினும் முன்னம் விவரித்த பொருளே மிகநன்று. இனி முதலடியே தொடங்கிப் பெரியாழ்வார்க்கான பொருத்தங்கள் கேண்மின். [புள்ளும் சிலம்பினகாண்] பொழுது

விடிந்தமைக்குச் சொல்லப்படுமடையாளங்களில் இது முதன்மையானது. ஒருத்தியை யெழுப்பும்போது சொல்லுமடையாளத்தை மற்றொருத்தியிடம் சொல்லுவதில்லை. ஆனால் இந்த ஓர் அடையாளம் மட்டும் மறுபடியும் மேலே (13.) * புள்ளின்வாய் கீண்டானை * என்கிற பாட்டிலும் சொல்லப்படுகிறது—* புள்ளுஞ் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்* என்று. இதற்கென்ன காரணமென்னில்: அந்தப் பாசுரம் தொண்டரடிப்பொடி யாழ்வாரைத் திருப்பள்ளி யுணர்த்துவது. இப்பெரியாழ்வாரும் அவரும் நந்தவனத்திலேயே வாழ்ந்தவர்கள். *புலம்பின புட்களும் பூம்பொழில் களின்வாய்* என்கிற திருப்பள்ளி யெழுச்சியிற் பாசுரத்தின்படி பறவைகள் சிலம்பு வது பொழில்களிலே யாதலால் இவ்வாழ்வார்களிருவரும் பொழிலிடத்தே வாழ்ந்த வர்கள் என்பதைக் காட்டவேண்டியே இங்கும் அங்கும் 'புள்ளுஞ் சிலம்பினகாண்' என்றருளிச் செய்தது. "சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞான கர்மங்களைச் சிறகென்று குரு ஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்யஸ்தாநே பேசும்" என்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையின்படி ஆழ்வாருடைய ஆத்ம பந்துக்கள் உணர்ந்தபடியைக் கூறினவாறு. பறவைகளென்கிற இயற்பொருளே போதுமானது.

[புள்ளரையன்] — பக்ஷிராஜன் என்றபடி. பெரியாழ்வாருடைய த்யான ச்லோகம் "வைநதேயாம்சஸம்பூதம் விஷ்ணுசித்த மஹம்பஜே" என்று ப்ரஸித்த மானது. புள்ளரையனுடைய அம்ச பூதர் இவ்வாழ்வார். நாச்சியார் திருமொழியில் "செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்று ஆண்டாளருளிச்செய்த பாசுரத்திற்கு அந்தரங்கமான பொருளொன்று சொல்லிப் போருவதுண்டு; மெய்ம்மைப் பெருவார்த்தையாவது கீதையின் ஸாரமான சரமச்லோகம். அது திருத்தேரிலே நின்று உபதேசிக்கப் பட்டது. அந்தத் தேரானது கருத்மானே வடிவெடுத்த தென்பர். கருத்மதம்சமான பெரியாழ்வார் அந்த மெய்ம்மைப் பெரு வார்த்தையைக் கேட்டிருக்க ஔசித்ய முண்டன்றே. ஆக இதனால் பெரியாழ்வார் புள்ளரையனுடைய அம்சபூதரென்பது ஆண்டாள் திருவுள்ளத்தில் உறைந்துள்ள தென்பதறியலாம்.

[கோயில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ?] கோயிலென்பது கோ - இல் என்று பிரியும்; கோ - அரசன்; அவனுடைய இல் - (பாண்டிய ராஜ) ஸபாமண்டபம்; அதில் பெரியாழ்வாருக்காகச் சங்கின் பேரரவம் உண்டானது உலகமறிந்ததேயன்றே. "பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தா னென்று ஈண்டிய சங்க மெடுத்தூத" என்கிற தனியனை யறியாதாருண்டோ? தவிர, இங்கே ஒரு பெரிய விசேஷமுண்டு; 'வெள்ளை விளி சங்கு' என்கிற சொல் தொடர் பெரியாழ்வார் திருவாக்கில் தான் அவதரித்துள்ளது. பெரியாழ்வார் திரு மொழி (4-1-7.) "வெள்ளை விளி சங்கு வெஞ்சுடர்த் திருச்சக்கரமேந்து கையன்" என்கிற பாசுரங் காண்க. தனிப்பட்ட ஒன்றிரண்டு சொற்களானால் அது குறிக் கொள்ளத் தக்கதன்று. மூன்று சொற்கள் சேர்ந்து விட்டால் அந்த சொற்சேர்த்தி ஒருவர்க்கு அஸாதாரணமாகக் கொள்ளவேண்டி வரும். ப்ரணமம் என்கிற வொரு பதத்தை யாரும் சொல்லலாம்; ப்ரணமம் லக்ஷ்மணமுநிः என்றால் இது இன்ன ஆசாரி

யருடைய வாக்கு என்று வெளியாகிவிடும். இவ்வண்ணமாகவே வெள்ளை விளி சங்கு என்கிற சொல்தொடர் செவிப்பட்ட வுடனே பெரியாழ்வாருடைய நினைவு உண்டாகியே தீரும். இப்பாட்டுக்குப் பெரியாழ்வார் தாம் விஷய பூதர் என்கைக்கு இதுவும் ஒரு முக்கியமான கமகம்.

[பேய்முலை நஞ்சுண்டு] ஸ்ரீக்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களை யெல்லாம் கொள்ளை கொள்ளையாக அநுபவித்தவர் * போகத்தில் வழுவாத புதுவையர்கோன் ஒருவரே. அவர் முதன் முதலாக அநுபவித்த கிருஷ்ண சேஷ்டிதம் எது வென்றால் பேய்முலை நஞ்சுண்டது தான். பெரியாழ்வார் திருமொழியில் முதற் பதிகமான * வண்ணமாடம் திருவாய்ப்பாடியின் கோலாஹலங்களைப் பேசுவது. இரண்டாம் பதிகமான *சீதக்கடலில் தான் சேஷ்டித வர்ணந-உபக்ரமம். அதில் நான்கு பாசுரங்களில் ஒரு சேஷ்டிதமும் அநுபவிக்கப்படவில்லை. ஐந்தாம் பாட்டு—*பிறங்கிய பேய்ச்சி முலை துவைத்துண்டிட்டு. * இதில் பேய்முலைநஞ்சுண்ட கதைதான் முற்பட்டிருப்பது. [கள்ளச்சகடங் கலக்கழியக் காலோச்சி]. அந்த சீதக்கடற் பதிகத்திலேயே * நாள்களோர் நாலைந்து பாசுரத்திலே சகடபங்கம் பூதனாவதம் ஆகிய இரண்டு சேஷ்டிதங்களையும் சேர்த்து அநுபவிக்கிறார். ஆக இதனாலும் பெரியாழ்வார் திடப்படுவர். இதற்குமேல் [வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை உள்ளத்துக் கொண்டு] என்றது பெரியாழ்வாரைத் தவிர மற்றொருவரைத் தொடாது. இவ்வாழ்வார்தாம் * பனிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடி வந்தென் மனக்கடலில் வாழவல்ல * என்றும், *அரவத்தமளியினோடும் அழகிய பாற்கடலோடும் அரவிந்தப் பாவையுந் தானும் அகம்படி வந்து புகுந்து, பரவைத்திரை பலமோதப் பள்ளி கொள்கின்ற பிரானைப் பரவுகின்றான் விட்டுசித்தன் * என்று மருளிச்செய்து, தம்மை 'வெள்ளத்தரவில் துயிலமர்ந்த வித்தினை யுள்ளத்துக்கொண்ட முனிவராக'ப் பேசி வைத்தவர். இது மிகமிக முக்கியமான சான்று. [முனிவர்களும் யோகிகளும்] முனிவரென்றாலும் யோகியென்றாலும் பர்யாயம்போல் தோன்றும். "குணாநுபவ நிஷ்டரும் கைங்கர்ய நிஷ்டரும்" என்று ஆசாரியர்கள் வாசிகாட்டி யருளுகிறார்கள். குணாநுபவ நிஷ்டையும் கைங்கர்ய நிஷ்டையுமுள்ளவர் பெரியாழ்வார். பாசுரங்கள் பாடின முகத்தால் குணாநுபவநிஷ்டராயினர். *வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்த மஹாதனத்தைக்கொண்டு ஸ்ரீ வில்லிபுத்தூரில் ப்ராகார கோபுர மண்டபாதி நிர்மாணங்களை நிர்வஹித்தருளினவராதலால் கைங்கர்ய நிஷ்டருமாயினர்.

[மெள்ளவெழுந்து.] * அல்வழக்கொன்று மில்லாவணி கோட்டியர்கோனன செல்வநம்பியின் ப்ரோத்ஸாஹனத்தினால் மதுரையில் வல்லப தேவராயனென்னும் பாண்டியர்கோன் வித்வத்ஸபை திரட்டமுயன்றபோது வடபெருங்கோயிலுடையான் இந்த விஷ்ணுசித்தருடைய கனவிலே காட்சிதந்து எழுப்பி 'நீர்போய் பரதத்வ ஸ்தாபனம் பண்ணிக் கிழியறுத்து வாரும்' என்று நியமித்ததாகவும், 'அதற்கு அடியேன் அர்ஹனல்லேனே'யென்று இவர் சொன்னதாகவும், அதுபற்றி உமக்கென்ன விசாரம்? என்று பெருமாள் கூற, அதன்மேல் 'அந்தோ! நமக்கு நிலமல்லாத காரியத்தை நியமிப்பதே!' என்று ஆயாஸத்தோடு சயனத்தை விட்டெழுந்ததாகவும் சரித்திரமுள்ளது. இங்கு மெள்ளவெழுந்து என்றதனால் அது நினைவூட்டப்

படுகிறது [அரியென்ற பேரரவம்] இவ்வாழ்வார் ராஜஸபையில் சென்று என்ன பண்ணினர்? * ப்ராஹ வேதாந் அசேஷாந் — வேண்டிய வேதங்களோதினர். * வேதம் தொடங்குவதற்கு முன்னே என்ன சொல்லுவது? 'ஹரி: ஓம்' என்று சொல்லுவது. அதைச் சொல்லாமல் வேதம் சொல்லலாகாதன்றே. அதைக் காட்டுகிறது ஹரி யென்ற பேரரவமென்று. இத்தனை பொருத்தங்கள் மற்றோராழ்வார்க்கு இப்பாசுரத்தில் கிடைக்க வழியில்லை. இவ்வாழ்வார்க்கு மற்றொரு பாட்டில் இத்தகைய வாய்ப்புகள் கிடைக்க வழியுமில்லை. மேல் ஒவ்வொரு பாட்டிலும் அடியேனது நிரூபணம் இத்தகைத்தே. .... .... .... ... (169.)

## 170. கீசுகீசென்றெங்கும்—குலசேகராழ்வார்.

கீசுகீசென்றெங்குமானைச்சாத்தன் கலந்து பேசினபேச்சரவம் கேட்டிலையோபேய்ப் பெண்ணே!*
காசும்பிறப்பும் கலகலப்பக்கைபேர்த்து * வாசநறுங்குழலாச்சியர் * மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம்கேட்டிலையோ * நாயகப்பெண்பிள்ளாய் நாராயணன்மூர்த்தி *
கேசவனைப்பாடவும்நீகேட்டேகிடத்தியோ* தேசமுடையாய்!திறவேலோரெம்பாவாய்.

கீழ்ப்பாசுரத்திலுணர்த்தப்பட்ட பெரியாழ்வார்க்கு அடுத்த முந்தியவரான குலசேகராழ்வார்க்குத் திருப்பள்ளியெழுச்சி பாடும் பாசுரமிது. இதில் பேய்ப் பெண்ணே! நாயகப் பெண்பிள்ளாய்! தேசமுடையாய்! என்கிற மூன்று விளிகளும் குலசேகராழ்வார்க்கு அஸாதாரணமானவை. [பேய்ப்பெண்ணே] பெருமாள் திருமொழியில் மூன்றாவது பதிகம் முழுவதும் தம்மைப் பேயராகப் பிரசுரப்படுத்திக்கொண்டது. *மையல் கொண்டொழிந்தேன், நரகாந்தகன் பித்தனே, உன்மத்தன் காண்மினே, மணவாளன்றன் பித்தனே, எம்பிரானுக் கெழுமையும் பித்தனே, பித்தனா யொழிந்தேன், பேயனாயொழிந்தே னெம்பிரானுக்கே, தனிப்பெரும் பித்தனுங் குலசேகரன்* என்று ஒருகாற் சொன்னாப்போலே ஒன்பதின்காற் சொன்ன பேயர் இவரே. [நாயகப் பெண்பிள்ளாய்] நாயகனென்று அரசனுக்குப் பெயர்; இவர் அரசர். *கொல்லி காவலன் கூடல் நாயகன் கோழிக்கோன் குலசேகரன் * என்று தம் வாக்கால் தம்மை நாயகராகச் சொல்லிக் கொண்டவருமிவர். முக்கியமான பொருள் கேளீர். யதிராஜ ஸப்ததியில் * அமுநா தபநாதிசாயிபூம்நா யதிராஜேந நிபத்த நாயகஸ்ரீ: * என்றருளிச் செய்தபடி ஆசார்ய கோஷ்டியில் எம்பெருமானார் நாயகமணியாக [நடுநாயகமாக) விளங்குவது போலக் குலசேகராழ்வார் ஆழ்வார்கள் கோஷ்டியில் நடுநாயகமாக விளங்குபவர். முதலாழ்வார்கள் மூவர், மழிசையர், மாறன் ஆக ஐவர் முன்னே விளங்க, பட்டர்பிரான், ஆண்டாள் முதலான ஐவர் பின்னே விளங்க நடுநாயகமாகவன்றே இவர் விளங்குவது. பெண்ணே! என்றும் பெண் பிள்ளாய்! என்று முள்ள விளிகளும் இவர்க்குப் பொருந்தும்; பெருமாள் திருமொழியில் * ஏர்மலர்ப்பூங்குழல் * ஆலை நீள்கரும்பு * மன்னுபுகழ் * ஆகிய மூன்று பதிகங்களும் கோபிகள், தேவகி, கௌஸல்யை யெனும் பிராட்டிமார் பாவனையில் பேசினவன்றே. [தேசமுடையாய்] தேஜஸ்ஸை யுடையாய்! என்றபடி. பகவத்

ஜதையில் [18-43] * சௌர்யம் தேஜோ த்ருதிர் தாக்ஷ்யம் யுத்தேசாபி அபலாயனம், தானமீச்வரபாவச் ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் * என்கிற சுலோகத்தில் தேஜஸ்ஸு க்ஷத்ரிய தருமமாகச் சொல்லப் பட்டது. "தேஜ:—பரை: அநபிபவநீயதா" என்று பாஷ்யம். தேசங்களை யுடையாய்! என்கிற பொருளுமாகலாம். * கொல்லிநகர்க்கிறை கூடல்கோமான் குலசேகரன் * கொல்லி காவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன் * என்று பல தேசங்களையுடையவராகச் சொல்லிக்கொண்டவரன்றோவிவர். அன்றியும், ஆசார்ய ஹ்ருதயத்தில் (81) "தேவத்வமும் நிந்தையானவனுக்கு ஒளிவரும் ஜனிகள் போலே ப்ரஹ்மஜன்மமும் இழுக்கென்பார்க்குப் பண்டைநாளிற் பிறவி உண்ணாட்டுத் தேசிறே" என்றுள்ள சூர்ணிக்கு மூலமாகக் கொள்ளப்பட்ட *உண்ணாட்டுத் தேசன்றே* என்கிற பெரியதிருவந்தாதிப் பாசுரத்தில் "ஆழியங்கைப் பேராயற்கு ஆளாம்பிறப்பு—உண்ணாட்டுத் தேசன்றே" என்னப்பட்டது. அதாவது அடிமைக்கு விரோதியான ஜன்மாத்யபிமானமின்றிக்கே கைங்கர்யாநுரூபமான குடிப்பிறவி உயர்ந்த தேஜஸ்ஸு என்றவாறு. அத்தகைய தேஜஸ்ஸையுடையவர் குலசேகராழ்வாரொருவரே; எங்ஙனேயென்னில், பெருமாள் திருமொழியில் *ஊனேறுசெல்வப் பதிகத்தில் " வேங்கடத்துக் கோனேரிவாழும் குருகாய்ப் பிறப்பேனே—மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே!—செண்பகமாய் நிற்கும் திருவுடையேனாவேனே—தம்பகமாய்நிற்கும் தவமுடையேனாவேனே....எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே" என்று அபிமானஹேதுவல்லாத ஜன்மத்தை விரும்பியவர் இவ்வாழ்வாரே யாதலால் உண்ணாட்டுத் தேசுடையாரிவர். ஆக பேய்ப்பெண்ணே! நாயகப் பெண்பிள்ளாய்! தேசமுடையாய்! என்கிற மூன்று விளிகளும் குலசேகராழ்வார்க்கே பொருந்துவனவாயின. இனி முதலடியே தொடங்கி விவரிக்கிறேன்.

[ஆனைச்சாத்தம் எங்கும் கீசுகீ சென்று.) க்ருஷ்ணன் என்கிற நாமதேயம் உலகில் பேச்சுவகையில் பல விகாரங்களை யடைவது வழக்கம். கிட்டு, கிட்டன், குட்டு, கிச்சு என்றிப்படி பலவாறு திரிகிற முறையில் கீசு என்றும் திரியும். எங்கும் கீசுகீ சென்றது—க்ருஷ்ண க்ருஷ்ண என்னு முச்சாரணமே எங்கு மாயிற்றென்றபடி: ஆனைச்சாத்தமென்று ஒரு விலக்ஷணபக்ஷிக்குப் பேராதலால் விலக்ஷணாதிகாரிகள் பகவந்நாமோச் சாரணமே செய்யும்படியைச் சொன்னவாறு. குலசேகராழ்வாருடைய சரித்திரத்திலே சிறிது செல்வோம். *குஷ்யதே யஸ்ய நகரே ரங்கயாத்ரா தினேதினே* என்றபடி இவ்வாழ்வார் அடிக்கடி திருவரங்கம் பெரிய கோயிலுக்குப் பயணம் செய்யப் பாரிப்பர். அதைக் கண்ட மந்திரிகள் 'இவர் ஸ்ரீரங்கம் செல்வாராயின் மீளவும் இங்கு வரவேமாட்டார்; ஆகவே இவர் புறப்படாதபடி செய்துவிடவேணும்' என்று கருதி, பகவத் பக்தியிற் காட்டிலும் பாகவத பக்தியே மிகச் சிறந்ததென்று கொண்டிருக்கு மிவ்வாழ்வார் பாகவதர்களைக் கண்டால் பயணத்தை நிறுத்தி இவர்களை உபசரிப்பதிலேயே ஊன்றியிருப்பர் என்றெண்ணி பாகவதர்களைத் தேடிக் கொண்டு வந்து முன்னே நிறுத்துவர்கள்; குலசேகரரும் அவர்களின் ஆராதனத்திலே ஊன்றி யிருந்து திருவரங்கப் பயணத்தை நிறுத்தி விடுவர். இத்

தகைய உபாயத்தை மந்திரிகள் அடிக்கடி செய்து அவருடைய பயணத்தை அப் போதைக்கப்போது நிறுத்தியே வந்தார்கள். ஆழ்வாரும் அந்த பாகவதோத்தமர் களை அகங்கனிந்த அன்போடு ஸத்கரித்துவரவே அந்நாடெங்கும் ஸ்ரீ வைஷ்ணவத் திரள் மிக்கது. எங்கும் பகவந்நாம ஸங்கீர்த்தனமே மலிவு பெற்றது. இது சொல் லப்படுகிறது ஆனைச்சாத்தம் எங்கும் கலந்து கீசுகீசென்று பேசின பேச்சரவம் கேட்டிலையோ? என்பதனால்.

அதற்குமேல் என்னுயிற்றென்பதையும் சரித்திரத்திலே பார்ப்போம். அந்நா டெங்கும் மலிந்த ஸ்ரீவைஷ்ணவத்திரள் அரண்மனையினுள்ளும் ஆலோசனைச் சபா மண்டபத்திலும் இன்னும் அந்தரங்கமான இடங்களில் எக்காலத்திலும் சிறிதும் தடையின்றிப் போவது வருவதாகி அரசன்பக்கல் வரம்பு கடந்த ஸ்வாதந்திரியம் பாராட்டுதலைக் கண்டு பொறுமை கொண்ட மந்திரிகள் இந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கலில் குலசேகரர்க்கு வெறுப்பை யுண்டாக்கக் கருதினர். அவருடைய அர்ச்சாவ தாரப் பெருமாளுக்கு விசேஷமான திருவாபரணங்களுண்டு; அவற்றில் சிறந்த தொரு ரத்னஹாரத்தைத் தாங்கள் களவாடி அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் மேல் பழி யிட்டு விட்டால் அரசன் அவர்களைக் கண்டித்து விலக்கிவிடக் கூடுமென்றறுதியிட்டு அப்படியே சூழ்ச்சி செய்து விட்டனர். அர்ச்சகர்கள் திருவாபரணம் களவு போயிற் றென்று அரசரிடம் முறையிட, அரசர் மந்திரிகளை யழைத்து 'கள்வனைக் கண்டு பிடியுங்கள்' என்று கட்டளையிட, அதுவே வியாஜமாக 'ப்ரபோ! இந்தக் களவு செய்தவர்கள் வைஷ்ணவர்களேயன்றி வேறு எவருமல்லர்; இவர்களே எப்போதும் இங்கு மங்கும் தட்டின்றித் திரிகின்றனர்; பிறனொருவன் புதியனாக வந்து அஞ்சாது இத்தொழில் செய்யான்' என்று பாகவதர் மீது அடாப்பழிசுமத்தினர். அக்கடுஞ் சொல்லைக் கேட்ட குலசேகரர் பாகவதர்களின் மஹிமையை நன்குணர்ந்தவராதலால் 'வைஷ்ணவசிகாமணிகள் ஒருபோதும் இத்தகைய பாவச்செயலை நெஞ்சிலும் நினையார்; இதனை உங்களுக்கு உறுதிப் படுத்துதற்காக யானே பிரமாணங் காட்டு வேன்' என்று சொல்லி, பாம்பை உள்ளிட்டதொரு குடத்தைச் சபை முன்பே தருவித்து 'ஸ்ரீவைஷ்ணவர்கள் த்ரிகரணத்தாலும் சுத்தர்கள்; இல்லையாயின் இந் நாகம் இப்பொழுதே என்னைத் தீண்டிக் கொல்லுக' என்று சபதஞ்செய்து அக் குடத்தினுள்ளே கையிட்டனர். "ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென்று அவர் களுக்கே வாரங்கொடு குடப்பாம்பில் கையிட்டவன், மாற்றலரை வீரங் கெடுத்த செங்கோல் கொல்லி காவலன் வில்லவர் கோன், சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே" என்ற தனியன் காண்க. ஆக இந்த சரித்திரத்திற்குச் சேர இப் பாட்டினுள்ளது, காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து என்பது. காசு என்பதும் பிறப்பு என்பதும் இடையர்களின் ஆபரண விசேஷங்களென்று வியாக்கியானம்; ஆபரண ப்ரஸ்தாவமுள்ளது குலசேகராழ்வார் வைபவத்தில் தான். கைபேர்த்து என்றது கையிட்டு என்றபடி. குடப்பாம்பில் கையிட்ட கதையை நினைப்பூட்டினபடி. களவுசெய்து பாகவதர்கள் மீது பழி சுமத்தின மந்திரிகளுக்குத் தண்டனையாக அவர்களின் கையைப் பேர்த்ததாகவும் கதையுண்டு. அதுவும் இங்கே விவக்ஷித மாகலாம்.

வாச நறுங்குழலாச்சியர் மத்தினுலோசைபடுத்த தயிர்க் கதையைக் குலசேகராழ்வாரொருவரே பெருமாள் திருமொழியில் ஓர் ஆய்ச்சியின் வாக்கால் வெளியிட்டுள்ளார்; அதில் (6-2). * கெண்டையொண்கண்மடவாளொருத்தி கீழையகத்துத் தயிர் கடையக் கண்டு, ஒல்லை நானும் கடைவனென்று கள்ளவிழியை விழித்துப் புக்கு, வண்டமர் பூங்குழல் தாழ்ந்துலாவ வாண்முகம் வேர்ப்பச் செவ்வாய் துடிப்பத், தண் தயிர் நீ கடைந்திட்ட வண்ணம் தாமோதரா! மெய்யறிவன் நானே.* என்கிற பாசுரம் இங்கு நினைவுக்கு வந்தே தீரும். [நாராயணன் மூர்த்திகேசவனைப்பாட] குலசேகராழ்வார் தாம் தம்முடைய திவ்வியப் பிரபந்தத்தை நிகமித்தருளுகையில் "தமிழ் மாலை பத்தும் வல்லார் நலந்திகழ் நாரணனடிக் கீழ் நண்ணுவாரே" என்று நாராயணனைப் பாடியருளினர். கேசவனென்பதற்கு ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றும் பல பொருள்களில் திருவாய்ப்பாடியில் நலியவந்த கேசியென்னும் குதிரை வடிவனான அசுரனைக் கொன்றவனென்கிற பொருளுமொன்று. குலசேகராழ்வார் தமது திருமொழியின் முதற் பதிகத்தில் கண்ணபிரானுடைய சரிதைகளை யநுஸந்திக்கத் தொடங்குகையில் முந்துறமுன்னம் * மாவினை வாய்பிளந்து உகந்தமாலை * என்று கேசிவத சரிதையையே யநுஸந்தித்தார். [நீ கேட்டே கிடத்தியோ?] குலசேகர வைபவத்திலுள்ள கதை கேண்மின்; இவர் ஒரு நாள் ஸ்ரீராமாயண காலக்ஷேபம் செய்து வருகையில் ஆரண்ய காண்டத்தில் கரதூஷணாதிகள் பதினாலாயிரம் அரக்கர்களைத் திரட்டிக்கொண்டு போர்செய்யப் புறப்பட்டு வந்தபோது "சதுர்தச ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம், ஏகச் ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி" என்று ஆகாசசாரிகள் வயிறு பிடித்துரைக்கும் சுலோகத்தைப் பௌராணிகர் விரித்துரைக்க, கேட்ட குலசேகரர் இது எப்போதோ நடந்த கதையென்று கொள்ளாமல் அப்போது தான் நடப்பதாகக் கொண்டு தாம் மிக மிக ஸம்ப்ரமம் கொண்டதாகவும், பிறகு பௌராணிகர் வெகு சாதுர்யமாக இவரைத் தேற்ற வேண்டி "தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம், பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே". என்கிற விஜயச்லோகத்தை விரித்துரைத்து இவருடைய ஸம்ப்ரமத்தைத் தணித்ததாகவும் கதை யுள்ளது. கதை கேட்பவர்கள் யாவரும் கேட்டுக்கொண்டு வாளாகிடப்பது போலல்லாமல் இவர் ஸம்ப்ரமித்தவரென்பது கேட்டே கிடத்தியோ வென்பதனுல் நன்கு காட்டப்பட்டதாயிற்று. "குலசேகராழ்வாரே! நீர் அஸ்மதாதிகளைப் போலே கதை கேட்டுக்கொண்டு வாளாகிடப்பவரோ? என்று கேட்கிறபடி ஸுவ்யக்தமாக வுள்ளதன்றோ.

இவையெல்லாம் நிற்க; இப்பாட்டில் மிகப் பெரிய விஷயமொன்று குறிக்கொள்ளத் தக்கது. அதாவது, ஆனைச்சாத்தமென்கிற சொல் திருப்பாவையில் தவிர வேறு எந்த நூலிலும் பிரயோகம் பெறவில்லை. இது திசைச்சொல்லாயிருக்குமோவென்று நினைத்திருந்தேன். கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வானமாமலை சின்ன கலியன் ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியோடு ஸம்பாஷிக்க நேர்ந்த காலை ஸ்ரீ ஸ்வாமி மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை எழுந்தருளியிருந்தபோது அந்த நாட்டில் ஆனைசாதம் என்றொரு பக்ஷி வழங்கப்படுவதாகக் கேட்டிருந்ததை

ஸாதித்தருளினர். ஸ்ரீ குலசேகரர் மலைநாட்டு ஆழ்வாராகையாலே அவருடைய பாஷை இங்கு தெய்விகமாகப் புகுந்தது போலும். திருவாய்மொழியில் (9-8.) * அறுக்கும் வினையாயின * என்கிற பதிகம் மலைநாட்டுத் திருப்பதியான திருநாவாயைப் பற்றியது. அதில் முதற் பாட்டில் * வெறித்தண்மலர்ச் சோலைகள் சூழ் திருநாவாய், குறுக்கும் வகையுண்டு கொலோ கொடியேற்கே * என்றுள்ளது. இங்கு 'குறுகும் வகையுண்டு கொலோ' என்றிருக்க வேண்டும். குறுக்கு மென்றிருப்பது எதுகை நயத்திற்காகவென்று தமிழர் கருதுவர்கள். ஈட்டில் இவ்விடத்திலுள்ள ஸ்ரீஸூக்தி காணீர்—": குறுக்குமென்று அத்தேச பாஷை; எம்பெருமானர் திருவடித் தொழவெழுந்தருளா நிற்க எதிரே வருகிறுர்கள்சிலரை நோக்கி 'திருநாவாய் எத்தனையிடம் போரும்' என்று கேட்டருள, 'குறுக்கும்' என்ருர்களாய், அத்தைக்கேட்டு 'இப்பாஷையாலே யருளிச் செய்வதே ஆழ்வார்' என்று போர வித்தராயருளினர்" என்று.

ஆக இத்தனை சான்றுகளால் இப்பாசுரத்திலுணர்த்தப்படுபவர் குலசேகராழ்வாரென்பது நிஸ்ஸந்தேஹ விபர்யயம். இப்பாசுரத்தை விட்டு வேறொரு பாசுரத்தைக் குலசேகரர்க்கு ஆக்கவேண்டில் ஸ்ரீ ராமாயணத்தை ஸ்ரீபாகவதமாக்கி உபந்யஸிப்பது போலாகுமத்தனை வேறோராழ்வார் இங்குப் புகவும்முடியாது....(170.)

## 171. கீழ்வானம்வெள்ளென்று–நம்மாழ்வார்.

கீழ்வானம்வெள்ளென்று எருமைசிறுவீடு *
மேய்வான்பரந்தனகாண் மிக்குள்ளபிள்ளைகளும் *
போவான்போகின்ருரைப் போகாமல்காத்து * உன்னைக்
கூவுவான்வந்துநின்ரேம் * கோதுகலமுடைய
பாவாய்! எழுந்திராய் பாடிப்பறைகொண்டு *
மாவாய்பிளந்தானை மல்லரைமாட்டிய *
தேவாதிதேவனைச் சென்றுநாம்சேவித்தால் *
ஆவாவென்ருராய்ந் தருளேலோரெம்பாவாய். (8)

குலசேகராழ்வார்க்குஅடுத்த முந்தினவரான நம்மாழ்வாரை யுணர்த்தும்பாசுரமிது. இதில் 'கோதுகலமுடைய பாவாய்!' என்பது விளி. முன்னம் பாவாய்! என்று கொள்வோம். பாவையென்று பதுமைக்குப் பெயர்: இதை உவமையாகுபெயராகக் கொண்டு பதுமைபோன்றவளே! என்று பொருள் கொள்க. பொதுவாக ஸ்திரீகளைப் பாவையென வழங்குவதுண்டு. பெரிய திருமொழியில் * பண்டுகாமரானவாறும் பாவையர் வாயமுதமுண்டவாறும் * என்ற பாசுரம் காண்க. அத்திருமங்கையாழ்வார் தாய்பாசுரமாக அமைத்த திருவிடவெந்தைப் பதிகத்தில் "குவளையங்கண்ணி கொல்லியம்பாவை" என்று விசேஷித்துக் கூறுவதால் பாவையென வருமிடங்களிலெல்லாம் கொல்லியம்பாவையென்று கொள்வதும் தகும். அதாவது—கொல்லியெனும் பெயர்

பூண்டதான மலையின்கணுள்ள ஒரு பெண்பாற் பிரதிமையைக் கொல்லிப்பாவை யென்றும் கொல்லியம்பாவையென்றுங் கூறுவர். அம்மலையிலுள்ள தேவரையும் முனிவரையும் துன்புறுத்த வருகின்ற அசுரரும் அரக்கரும் இப்பதுமையின் சிரிப்பைக்கண்டு மயங்கி உயிர்துறப்பர்களாம். அசுரரும் அரக்கரும் அங்கு அணு கும்போது அவர்களது வாடை பட்டவுடன் இது தானே நகைசெய்யுமாறு யந்த்ர ப்ரதிஷ்டை செய்யப் பெற்றிருக்கின்றதாம். இது தேவ சிற்பியால் அமைக்கப்பட்ட அழகிற் சிறந்த பதுமை. "எல்லையில் நின்ற எழிலினுங் கற்பினும், கொல்லியம் பாவையைக் கூறினர் புலவர்" என்று பாடியுள்ளார் ஒரு கவிஞர். அளவுகடந்த அழகும் பாதிவ்ரத்யமுமுடையார்க்கு இதனை உவமை கூறுவரென்க.

இங்கு நம்மாழ்வாரைப் பாவாய்! என விளிப்பது அவருடைய அழகையும் பாதிவ்ரத்யத்தையும் பற்ற. ஆண்பிள்ளையான ஆழ்வார்க்கு என்ன அழகு வேண்டியிருக்கிறது? ஞானபக்தி விரக்திகள்தான் அழகு. பாதிவ்ரத்யமென்பது ஸ்த்ரீகளுக்குப்போலப் புருஷர்களுக்குமுண்டு. "உன்னையல்லால் யாவராலுமொன்றும் குறைவேண்டேன்" "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று உபாயோபேயங்களில் திடமான விரதங் கொண்டிருக்கைதான் பாதிவ்ரத்யம். இவ்விரண்டிலும் நம்மாழ்வார் தலைமை பெற்றவராதலால் பாவாய்! என்ற விளி இவர்க்கு நன்கு பொருந்தும். வேறு சில ஆழ்வார்களுக்கும், அல்லது எல்லா ஆழ்வார்களுக்கும் இது பொருந்துமேயென்றால் மறுப்போமல்லோம். வெறும் பாவாய்! என்னுது கோதுகலமுடைய பாவாய்! என்றது நம்மாழ்வார்க்கே அஸாதாரணமான விளியாகும். இதைச் சிறிது விவரிக்கிறேன். [கோதுகலமுடைய பாவாய்.] எம்பெருமானிடத்தில் ஆசையையுடைய (அல்லது) எம்பெருமானுடைய ஆசையைத் தன்னிடத்திலே கொண்டுள்ள என்று இருவகையாகவும் பொருள்படும். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் நம்மாழ்வாரை ருஷிம் ஜுஷாமஹே" என்கிற சுலோகத்தினால் உபச்லோகிக்கிறார்; அதில் க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வமிவோதிதம்'' என்பது நம்மாழ்வார்க்கு இட்ட விசேஷணம். க்ருஷ்ண குதூஹலமே நம்மாழ்வாராக வடிவெடுத்தது என்றார். க்ருஷ்ணத்ருஷ்ணா என்னும் பதம் 'க்ருஷ்ணே த்ருஷ்ணா' என்றும் 'க்ருஷ்ணஸ்ய த்ருஷ்ணா' என்றும் இருவகையாகவும் விக்ரஹம் பெற்று மேலே காட்டின பொருளைத் தாங்கி நிற்கும். கண்ணனிடத்தில் தாம் த்ருஷ்ணை கொண்டவர்; கண்ணனுடைய த்ருஷ்ணையைத் தம்மிடத்தே யுடையவர் என்கை. இதனால் தேறின பொருளை * கைம்மா துன்பொழித்தா யென்று கைதலைபூசல் விட்டே, மெய்ம்மாலா யொழிந்தேன் எம்பிரானுமென்மேலானே என்கிற பாசுரத்தினால் நம்மாழ்வார்தாமே வெளியிட்டருளினர். *ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம்; ஸ ச மம ப்ரிய: * என்கிறபடியே நானும் எம்பெருமானிடத்துக் குதூஹலங் கொண்டேன், அவனும் என்னிடத்துக் குதூஹலங் கொண்டான் என்றருளிச்செய்தவர் நம்மாழ்வார். திருவாய்மொழியில் தாய் பாசுரமாக வருமிடங்களில் * சூழ்வினையாட்டியேன் பாவையே * என்றும் என்பாவை போயினித்தண்பழனத் திருக்கோளூர்க்கே * என்றும் பலவிடங்களில் தம்மைப் பாவையாகச் சொல்லிக்கொண்டதும் பாவாய் என்ற விளிக்குப் பொருந்தும்.

எழுந்திராய் என்ற சொல்நயம் நன்கு நோக்கத்தக்கது. சயனித்திருப்பவரை யும் வீற்றிருப்பவரையு மன்றோ எழுந்திருக்கும்படி பிரார்த்திப்பது. ஆழ்வார்களில் சயனிப்பவர் யாருமிலர். நம்மாழ்வாரொருவர்தவிர மற்றையோரெல்லோரும் நிற்ப வர்கள். *பத்மாஸநோபவிஷ்டம்....ப்ரதமாசார்யம் பராங்குசம் வந்தே* என்றது காண்க.

[கீழ்வானம் வெள்ளென்று] கிழக்கு வெளுத்ததென்றபடி. "ப்ராசீ ஸந்த்யா காசித் அந்தர்நிசாயா:" [ஹயக்ரீவஸ்தோத்ரே] என்றபடி உள்ளிருளுக்குக் கீழ்த் திசை வெள்ளென்றதா யிருப்பவர் நம்மாழ்வார். *தஸ்மை நமோ வகுளபூஷண பாஸ்க ராய* என்ற ஸ்ரீமந்நாதமுனிகளின் ச்லோகரத்னத்தை யடியொற்றி ஆசார்ய ஹ்ருதயத்திலே "ஆதித்யராமதிவாகர அச்யுதபாநுக்களுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி சோஷியாத பிறவிக்கடல்வற்றி விகஸியாதபோதிற் கமலமலர்ந்தது வகுல பூஷண பாஸ்கரோதயத்திலே" என்றருளிச்செய்த சூர்ணை வியாக்கியானத்தோடும் இங்கே பொருத்தமாக அநுஸந்தேயம். [கீழ்வானம்] என்ற போதே மேல்வான மொன்று நினைவுக்குவரும். மேற்பட்டதான வானம் பரமாகாசமெனப்படும் நித்ய விபூதி. கீழ்வானமென்றது இந்த விபூதி. இது வெள்ளென்றது—"குருகூர்ச்சட கோபன் சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும் உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்" என்றும், *வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண் ணூடே* என்றும் பலச்ருதியாம்படி இருள்தருமா ஞாலமாயிருக்கையன்றிக்கே சுத்த ஸாத்விகமாயிற்று என்றபடி. இப்படியானது நம்மாழ்வார் திருவவதாரத்தினால். அன்றிக்கே, வானமென்பது மேகம்; மேல்வானம்—மேலேயிருந்துகொண்டு நீரைப் பொழியும் மேகம்; கீழ்வானம்—இம் மண்ணுலகிலிருந்துகொண்டு * தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்கிறபடியே பக்தாம்ருதமான அருளிச்செயலைப் பொழிந்த மேகம். நம்மாழ்வார் தாமே * வண்டமிழ்நூற்க நோற்றேன் அடியார்க்கு இன்பமாரியே* என்று தம்மை இன்ப வெள்ளத்தைப் பொழியும் மேகமாகச் சொல்லிக்கொண்டார்.

[எருமைசிறுவீடு மேய்வான் பரந்தனகாண்] எருமையாகச் சொல்லுகிறது ரஜோகுண தமோகுணப்ரசுரர்களை. வீடு—மோக்ஷம்; சிறுவீடு—கைவல்யமோக்ஷம்; பேரின்பத்தைவிட்டுச் சிற்றின்பமான இந்த ஆத்மாநுபவத்தை யாசைப்பட்டு இதை யநுபவிக்கச் செல்லுகின்ற ராஜஸ தாமஸர்களை [காண்] கடாக்ஷித்தருளவேணும். கைவல்யத்திற்குச் சிறுவீடு என்று பெயர் கொடுத்தவர் நம்மாழ்வார். திருவாய் மொழியில் (4—1—10) *குறுகமிகவுணர்வத்தொடு* என்ற பாசுரத்தில் "சிறுக நினை வதோர் பாசமுண்டாம்* என்றும், (4—9—10) *தெரிவரியவளவில்லாச் சிற்றின்பம்* என்றுமுள்ள விடங்களில் வியாக்கியானம் ஸேவிப்பது. நம்மாழ்வார் திருவவதரிப்ப தற்கு முன்பு கைவல்ய மோக்ஷநிஷ்டர்களே யிருந்தனர்.

[மிக்குள்ளபிள்ளைகளும் போவான் போகின்றாரைப் போகாமல்காத்து] மிக்குள்ள வென்றது மேம்பட்ட வென்றபடி. ஸ்ரீவசனபூஷணத்தில் "உண்டபோதொரு

வார்த்தையும் உண்ணுதபோதொரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே......" இத்யாதி சூர்ணையால் ஆழ்வார்கள் பதின்மரைக்காட்டிலும் மதுரகவிகளுக்கு ஏற்றம் சொல்லியிருக்கையாலே மிக்குள்ள பிள்ளைகளென்பதனால் இவர் விவக்ஷிதர்; இவர் வடதிசை யாத்திரையாகச் சென்றிருந்தாரென்றும், அங்கிருந்து தென்திசையை நோக்க, பெரிய நகரம் நெருப்புப்பற்றி யெரிவதுபோன்ற ஜ்யோதிஃபுஞ்ஜத்தைக்கண்டு வடநாட்டு யாத்திரையை நிறுத்திக்கொண்டு திரும்பிவந்து *செம்பொன்மாடத்திருக்குருகூரிலேவந்து நம்மாழ்வாரைஸேவித்து இங்கேயே நின்றாரென்றும் சரித்திரமுள்ளது. அஃது இங்கு ஸூசிதம். கோயில் அத்யயநோத்ஸவத்திலே ஆழ்வார்க ளெல்லாரும் தம்தம் ஸன்னிதிக்குப் புறப்பட்டருளுங் காலத்து நேரே போய்விடாமல் நம்மாழ்வார் ஸன்னிதி வாசலிலே வந்துநின்று மரிபாதை பெற்றுப் போகிற ப்ரத்யக்ஷ இதிஹாஸமும் ஸூசிதம்.

"போவான் போகின்றாரை" என்ற பிரயோகம் வெகு ஆச்சரியமானது; 'போவதற்காகப் போகிறவர்கள்' என்று சொல்லுவதுண்டோ? இல்லை. அப்படியிருக்க ஏன் சொல்லிற்று. "போகைதானே பிரயோஜனமாகப் போனார்களென்கை" என்பது பூருவர்களின் வியாக்கியானம். இத்தகைய பிரயோகம் முதன் முதலாக நம்மாழ்வார் திருவாக்கில்தான் வந்தது. திருவிருத்தத்தில் "போவான் வழிக்கொண்ட மேகங்களே!" என்றார். [உன்னைக் கூவுவான் வந்துநின்றேம்] 'கூவிக்கொள்ளும் காலமின்னங் குறுகாதோ' "என்னைக் கூவியருளாய் கண்ணனே" "கூவிக்கொள்ளாய் வந்தந்தோ" என்று பலகாலும் விரும்பினபடியே கூவுவான் வந்து நின்றோமென்கிறாள். [மாவாய்பிளந்த தேவாதிதேவனை] இப்போது ஆண்டாள் நோற்பதுபோல் நம்மாழ்வாரும் ஒரு திருவாய்மொழியில் நோன்புநோற்றார்; *வீற்றிருந்தேழுலகும்* என்ற திருவாய்மொழியில் "ஏற்ற நோற்றேற்கு" என்று முதலிலும் 'வண்டமிழ் நூற்க நோற்றேன்" என்று முடிவிலும் வருவது காண்க. அங்ஙனம் நோற்ற திருவாய் மொழியில் தேவாதிதேவனை அநுபவிக்கின்ற ஆழ்வார் மாவாய் பிளந்தானென்ற விசேஷணத்தையே முதற் பாட்டில் இட்டருளினர்; "வெம்மாபிளந்தான் தன்னை" என்றது காண்க. ப்ரதமப்ரபந்தத்தில் "இமையோர் தலைவா! என்றும்; சரமப்ரபந்தத்தில் "அயர்வறும்மரர்களதிபதி" என்றும் தேவாதி தேவனையே முந்துறமுன்னம் சேவித்தாராழ்வார்*.[சென்று நாம் சேவித்தால்] "வான நாயகனே!... அடியேன் தொழவந்தருளே" என்று தேவாதி தேவனை நீர் உம்மிடம் வருமாறு அழைத்தீர்; அங்ஙனமல்லாமல் அவனிடம் நாம் சென்று சேவிக்கலாம் வாரும் என்றழைக்கிறாள் போலும். [ஆவாவென்று] "ஆவாவென விரங்கார் அந்தோவலிதே கொல், மாவாய் பிளந்தார் மனம்" என்றும், "அடியேற்கு ஆவாவென்னாயே" என்றும் நீர் விரும்பினபடியே மாவாய்பிளந்த பெருமான் உமக்கு ஆவாவென்பன் என்று காட்டுகிறபடி. [ஆராய்ந்து] "ஆரென்னையாராய்வார்" என்ற உம்முடைய குறையும் தீரும் [அருள்] *மயர்வறமதிநலமருளினதைக் காட்டியபடி. நம்மாழ்வார்க்கு இத்தனை பொருத்தங்கள் இந்தப் பாசுரத்திலன்றி வேறு எந்தப் பாசுரத்திலுங் காண்பரிது. .... .... ... .... (171)

# 172. தூமணிமாடத்து—திருமழிசையாழ்வார்.

தூமணிமாடத்துச் சுற்றும்விளக்கெரிய * தூபங்கமழத் துயிலணைமேல்கண்வளரும் *
மாமான்மகளே! மணிக்கதவந்தாள்திறவாய்*மாமீர்! அவளையெழுப்பீரோ*உன்மகள்
[தான்
ஊமையோ அன்றிச்செவிடோ அனந்தலோ * ஏமப்பெருந்துயில்மந்திரப்பட்டாளோ*
மாமாயன்மாதவன்வைகுந்தனென்றென்று*நாமம்பலவும்நவின்றேலோரெம்பாவாய்.

நம்மாழ்வாருக்கு அடுத்த முந்தினவரான திருமழிசைப் பிரானை யுணர்த்தும் பாசுரமிது. இதில் மாமான் மகளே! என்ற விளி ஒருவகையான தேஹஸம்பந்தத்தில் நோக்குடையது. ஆண்டாளுக்கும் திருமழிசை யாழ்வார்க்கும் ஒரு வகையான தேஹ ஸம்பந்தமுண்டு: அதாவது—கோதாஸ்துதியில் "கமலாமிவான்யாம் கோதாம்" என்றும் "ஸந்தः பயோதி துஹிதுஸ் ஸஹஜாம் விதுஸ் த்வாம்" என்றும் அருளிச் செய்த படியே ஆண்டாள் ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மியாவள். "பார்க்கவீ லோகஜநநீ க்ஷீரஸாகரஸம்பவா" என்ற அமரகோசத்தின்படியும் இதிஹாஸ புராண வரலாற்றின் படியும் லக்ஷ்மி (ஆண்டாள்) ப்ருகு குலத்தில் தோன்றியவள். திருமழிசைப் பிரானும் ப்ருகு குலத்தில் தோன்றியவரென்பது சரித்திர ஸித்தம். இத்தகைய ஸமாந குலஸம்பந்தம் இங்கு நோக்கத்தக்கது. ரிஷி குலத்திலே பிறந்து பிரம்பன் குடியிலே யானார் அவர். ப்ராஹ்மண குலத்திலே பிறந்து கோபாலர் குலத்திலே யானாள் இவள். இதுவும் ஒற்றுமை நயம். ஆண்டாள் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினதாக ஸ்ரீவசனபூஷணம்.

[தூமணி மாடத்து] சிறந்த மாணிக்கக் குப்பியினுள்ளேயுள்ளது வெளியில் நிழலிட்டுத் தோன்றும். திருமழிசைப்பிரான் "உட்கிடந்தவண்ணமே புறம் பொசிந்து காட்டிடே" என்று வேண்டிக்கொண்டபடியே உள்ளிருந்த திருமால் அப்படியே வெளியிற் பொசிந்து காட்சி தந்தமையால் இவர் தூமணிமாட மென்னத் தகுதியுடையார். [சுற்றும் விளக்கெரிய] விளக்காவது ஞானவொளி. "சாக்கியங் கற்றோஞ் சமண்கற்றோம் சங்கரனாராக்கிய ஆகமநூல் ஆராய்ந்தோம்" என்றபடி இவ்வாழ்வார் ஸகல மதங்களிலும் புக்கு ஸர்வதோமுகமான ஞான விளக்கம் பெற்றவராதலால் சுற்றும் விளக்கெரிதல் இவர்க்கு அஸாதாரணம். "யானறிந்தவாறு—ஆரறிவார்" என்றும் "என் மதிக்கு விண்ணெல்லா முண்டோ விலை" என்றும் இவரது பாசுரங்களினாலும் இது ஸித்தம். [தூபம் கமழ] சிறந்த ஞானமிருந்தால் மாத்திரம் பயன்படாது; அது நன்கு பரிமளிக்கவேண்டும். எம்பெருமானையன்றி வேறொரு தெய்வத்தைத் தொழாதிருத்தலே ஞானத்திற்குப் பரிமளம். "மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்பது இவ்வாழ்வாருடைய திருவாக்காகும்.[ அன்றியும், தூபம் கமழ வென்றது புகை சூழ வென்றபடியாதலால் இவ்வாழ்வாருடைய சரித்திரத்தில் புகை சூழ்ந்த கதையுமுள்ளது. அதாவது, ஆகாச மார்க்கத்தில் வ்ருஷபாரூடராய்ச் சென்று கொண்டிருந்த பார்வதிபதி (திருமழிசையில்) இவரை யணுகி ஸம்பாஷித்தபோது விவாதம்

விளைய, பரமசிவர் தமது நெற்றியிலுள்ள நெருப்புக்கண்ணைத் திறந்து விட்டுப் பொறியும் புகையும் சூழும்படி செய்ய, ஆழ்வார் தமது வலத்திருவடியின் பெருவிரலி லுள்ளதொரு கண்ணைத் திறந்து விட்டு அதினின்றும் பெருந்தீயைக் கிளப்பிவிட்டுப் புகை சூழச் செய்தாரென்பது. அது இங்குத் தூபங் கமழ வென்பதனால் நினைவூட்டப் படுகிறது.

[துயிலணை மேல் கண்வளரும்] இவ்வாழ்வாருடைய திருக்கண் செல்வது சயனத்திருக்கோலமான எம்பெருமான்களின்மீதுதான். கச்சி வெஃகாவிலும் திருக் குடந்தையிலுமே பெரும்பாலும் இவர் காலம் கழித்தது. சயனத்திருப்பதிகளையே ஒரு கோர்வையாக வெடுத்துப் பாசுரம் பாடினவரும் இவ்வாழ்வார்; "நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள் நாகத்தணையரங்கம் பேர் அன்பில்—நாகத்தணைப் பாற்கடல் கிடக்கு மாதி நெடுமால், அணைப்பார் கருத்தனவான்" என்றது காண்க. [துயிலணை மேல் கண்வளரும் மாமானுடைய மகளே!] மகள் என்றதனால் விதேயத்வம் சொன்னபடி. மகள் சொற்படி தந்தை கேட்பதும் தந்தை சொற் படி மகள் கேட் பதும் இயல்பு. மாமான் என்றது மஹா மஹான் என்றபடி. துயிலணை மேல் கண் வளரும் மாமான் யதோக்தகாரி யெம்பெருமான்; அப்பெருமாள் இவ்வாழ்வார் சொற்படி கேட்டவர்; 'கணிகண்ணன் போகின்றான்—நீயு முன்றன் பைந்நாகப் பாய் சுருட்டிக்கொள்' என்றபோது அப்படியே சுருட்டிக் கொண்டு புறப்பட்டார்; "உன்றன் பைந்நாகப்பாய் விரித்துக்கொள்" என்றபோதும் அப்படியே. இனி, துயிலணைமேற் கண்வளரும் மாமான்—ஆராவமுதன்; அப்பெருமாளும் "எழுந் திருந்து பேசுவாழி கேசனே" என்ற இவ்வாழ்வாரது வேண்டுகோளின்படி எழுந் திருந்தவர் என்பது ப்ரஸித்தம். *[மாமீர் அவளை யெழுப்பீரோ?] இவ்வாழ்வார்க்கு நல்லபோதத்தை யுண்டாக்கியருளின பேயாழ்வாரை மாமீரென்கிறது.

[உன் மகள் தான் ஊமையோ] வாய்திறவாமலே ஹஸ்தசேஷ்டை முதலிய வற்றால் காரியம் செய்வது ஊமைகளின் பணி. இவ்வாழ்வாரும் யாத்திரை யடைவில் பெரும்புலியூரென்னும் கிராமத்தில் ஒரு வேதியன் வீட்டுவாசல் திண்ணையில் சிறிது பொழுது எழுந்தருளியிருக்க அங்கு வேதமோதிக்கொண்டிருந்த அந்தணர்கள் நீறுபூத்த நெருப்புப்போலுள்ள ஆழ்வாருடைய மஹிமையைத் தெரிந்துகொள் ளாமல் அவரைக் கீழ்ச்சாதியராகவெண்ணி வேதாத்யயனம் அவருடைய காதிற் படலாகாது என்று கருதி ஓதுதல் தவிர்ந்திருக்க, அக்குறிப்பை யறிந்த ஆழ்வார் அவ்விடத்தை விட்டுத் தூரத்திற்சென்று வேறோரகத்து மேடையில் வீற்றிருக் கையில் அந்த வேதியர்கள் மீண்டும் வேதமோதத் தொடங்கி, விட்ட வாக்கியம் தோன்றாது மயங்கி, இது இவரிடத்தில் பட்ட அபசாரத்தின் பலனென்று தெளிந்து அனைவரு மோடிவந்து திருவடிகளில் விழுந்து வணங்கி 'விட்டவேத வாக்கியத்தை நினைவூட்ட வேணுமென்று ப்ரார்த்திக்க ஆழ்வார் திருவுள்ள மிரங்கி, வேதவாக்கியத்தைத் தம் வாக்கினால் உச்சரியாமலே அங்கு வீதியில் உலர்த்தி யிருந்த நெற்குவியலிலிருந்து கறுப்பு நெற்களையெடுத்துக் கையுகிராலே இடந்துபோட, அப்பொருளுள்ள வேதவாக்கியம் அவர்கட்குத் தோன்றிற்று; அதாவது—"க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நகநிர்ப்பிந்நம்" என்பது. உடனே அவர்கள்

ப்ரதக்ஷிண ப்ரணாமாதிகளால் இவரை உபசரித்து க்ருதார்த்தராயினர் என்பது சரித்திர வரலாறு. இங்ஙனமாக வாய்திறவாமலே, இங்கிதத்தினால் காட்டினதுபற்றி ஊமையோ என்றது. சொன்ன சொற்களைச் செவியேற்காதவர் செவிடர்; அந்தச் செவிடும் இவரது சரிதையில் ப்ரஸித்தம்: முன்சொன்ன பெரும்புலியூரில் அந்தணரடிகள் யாகஞ் செய்துகொண்டிருந்த விடத்தில் இவ்வாழ்வாரை எழுந்தருள்வித்துக் கொண்டு போய்ச் சில மஹான்கள் இவர்க்கு அக்ர பூஜை செய்விக்க, அப்போது அங்கிருந்த பல சிசுபாலஜ்ஞாதிகள் எண்ணிறந்த வசைமொழிகளை வர்ஷிக்க, அவற்றை இவ்வாழ்வார் செவியேற்காதிருந்தனர் என்ற வரலாறு காண்க.

[அனந்தலோ] தூக்கமோ? என்றபடி. பரமைகாந்திகட்குத் தூக்கமாவது பாஹ்ய விஷயங்களிற் சிறிதும் நெஞ்சு செல்லாதிருக்கப் பெறுதலே. "உன்னைத் தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது') என்றும் "தொழிலெனக்குத் தொல்லைமால் தன்னுமமேத்தப் பொழுதெனக்கு மற்றதுவே போதும்" என்று மருளிச் செய்யு மிவ்வாழ்வார்க்கு இந்த நிலைமையே அனந்தலாகும். [மந்திரப் பட்டாளோ] மற்றையாழ்வார்களுக்கு ஆசார்ய ஸமாச்ரயணமும் மந்த்ரோபதேசமும் ஆனது தெரியாது. இவர் பேயாழ்வாரிடத்தில் மந்திரப்பட்டது ப்ரஸித்தம். இதை இங்குத் தெரிவித்திருப்பது முக்கியமான சான்று.

[மாமாயன்] இவ்வாழ்வார் திருச்சந்த விருத்தத்தில் "மாயமென்ன மாயமே" என்றும், "மாயமாய மாக்கினாய் உன்மாயமுற்று மாயமே" என்றும் பலகாலும் எம்பெருமானது மாமாயங்களைப் பேசினவர். [மாதவன்] "மாதவனை ஏத்தாதார் ஈனவரே" என்றவர் இவ்வாழ்வார். [வைகுந்தன்] "வைகுந்தச் செல்வனார் சேவடிமேல் பாட்டு' என்றவர் இவ்வாழ்வாரே. வைகுந்தனது சேவடிமேல் தாம் பாசுரம் பாடினவராகச் சொல்லிக்கொண்டார். ஆகவே, மாமாயன், மாதவன், வைகுந்தனென்ற திருநாமங்கள் இவ்வாழ்வார்க்குப் பரமபோக்யங்களென்பது ஸூசிதம். (172)

## 173. நோற்றுச்சுவர்க்கம் --- பேயாழ்வார்.

நோற்றுச்சுவர்க்கம்புகுகின்றவம்மனாய்! *
மாற்றமும்தாராரோவாசல்திறவாதார் *
நாற்றத்துழாய்முடிநாராயணன் *
நம்மால்போற்றப்பறைதரும்புண்ணியனால் * பண்டொருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்தகும்பகரணனும் *
தோற்றுமுனக்கேபெருந்துயில்தான்தந்தானோ *
ஆற்றவனந்தலுடையாய்! அருங்கலமே *
தேற்றமாய்வந்துதிறவேலோரெம்பாவாய். (10)

திருமழிசை யாழ்வாருக்கு அடுத்த மூந்தினவரான பேயாழ்வாரை யுணர்த்தும் பாசுரமிது. ஓடித்திரியும் யோகிகளாய் ஒருவரோடு ஒருவர் சேராமல் ஸஞ்சரித்துக் கொண்டிருந்த பொய்கையார் பூதத்தார் பேயார் இம் மூவரையும் ஒன்று சேர்த்து அநுபவிக்கக் கருதிய எம்பெருமான் ஒரு பெருமழையை வியாஜமாக்கித் திருக்கோவ

லிடைகழியில் சேர்த்து நெருக்கி யநுபவித்தானென்பது வரலாற்றின் சுருக்கம். இப் பேயாழ்வாரைப் பற்றித் திருவரங்கத்தமுதனார் நூற்றந்தாதியில் அருளிச்செய்யு மிடத்து "மன்னிய பேரிருள் மாண்டபின் கோவலுள் மாமலராள் தன்னொடு மாயனைக் கண்டமை காட்டும் தமிழ்த்தலைவன்" என்றார். பொய்கையாரும் பூதத்தாரும் இருவிளக்கேற்றியிருளையகற்ற, இவ்வாழ்வார், "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தொடங்கிப் பலாநுபவம் செய்தருளினார். அவ்வர்த்தமே யிங்கு முதலடியிற் பொலியும். நோற்று—மற்றையிரண்டு ஆழ்வார்களும் விளக்கேற்றுகை யாகிற உபாயாநுஷ்டானஞ் செய்ய என்றபடி. சுவர்க்கமாவது ஆனந்தாநுபவம். "யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ் த்வயா விநா" என்று ஸ்ரீராமா யணத்தில் பிராட்டி அருளிச்செய்ததுங் காண்க.

"வாசல் திறவாதார்" என்றது பேயாழ்வார்க்கு மிகவும் பொருத்தமான லிங்கம். திருக்கோவலிடைகழியில் பொய்கையார் முன்னே புகுந்து தாளிட்டுக் கொண்டார்; பிறகு பூதத்தார் வந்து சேர அவர்க்கு அப்பொய்கையார் வாசல் திறந்தார். பிறகு வந்து சேர்ந்த பேயார்க்குப் பூதத்தார் வாசல் திறந்தார். இப்பேயார்க்குப் பிறகு ஒருவரும் வந்து புகாமையினால் வாசல் திறக்கவேண்டிற்றில்லை. ஆகவே வாசல் திறவாதார் என்றது பேயாழ்வார்க்கு மிகப்பொருத்தமாக அமைந்த குறிப்பு [நூற்றத்துழாய்முடி நாராயணன்] இவ்வாழ்வாருடைய பாசுரங்கள் திருத்துழாய் மயமா கவேயிருக்கும். *திருக்கண்டேனுக்கு அடுத்த பாசுரம் "பொன்தோய்வரை மார்பில் பூந்துழாய்" என்பது. அதற்கடுத்த பாசுரம் "மலராள் தனத்துள்ளான் தண்டுழாய் மார்வன்" என்பது. முடிவுபாசுரத்திலும் "தண்டுழாய்த் தார் வாழ் வரைமார்பன்" என்றார். இடையிலும் பல பாசுரங்கள் காண்க. ஒன்பதாவது பாசுரத்தில் [நாமம் பலசொல்லி—யென்பதில்] நாராயணனையும் திருத்துழாயையும் கண்ணனையும் சேர்த்துப் பாடினார் பேயார். இதுவும் ஒரு சிறந்த பொருத்தம். "நாமம் பல சொல்லி நாராயணாவென்று, நாம் அங்கையால் தொழுதும் நன்னெஞ்சே வா—மருவி மண்ணுலகமுண்டுமிழ்ந்த வண்டறையும் தண்டுழாய்க் கண்ணனையே காண்க நங்கண்" என்றார். "காண்காணென விரும்பும் கண்கள்" என்று ஒரு கொடிப் பொழுதும் கண்மூடி யிருக்கமாட்டாமையைச் சொல்லிக்கொண்ட நீர் கும்பகர்ணனுக் கும் மேலாக இன்னமும் துயில் கொள்ளல் தகுதியோ என்கிறாள் பண்டொருநா ளென்று தொடங்கி.

கும்பகரனன் பேயாழ்வார்க்குத் தோற்றதைப்பற்றின விவரனம்;—கும்பகரண னென்று மூல ஸ்ரீஸூக்தியே யொழிய கும்பகர்ண னென்றில்லை. கும்பத்தைக் காரணமாக [ஜன்ம பூமியாக] வுடையவர் அகஸ்த்யர்; "அகஸ்த்யஃ கும்ப ஸம்பவஃ" கூற்றத்தின் வாய் வீழ்ந்த என்றது யமனுடைய திசையாகிய தக்ஷிண திக்குக்குத் தலைவரான என்றபடி. " தக்ஷிணா திக் க்ருதா யேந சரண்யா புண்யகர்மணா " என்ற ஸ்ரீராமாயணம் காண்க. ஆகஸ்த்யமென்று ப்ரஸித்தமான தமிழ்ப் பாஷைக்கு ப்ரவர்த்தகரான அம்முனிவர் பேயாழ்வார்க்குத் தோற்றா ரென்றது அவரிலும் மிக்க தமிழ் வல்லவரென்றபடி. இராமாநுச நூற்றந்தாதியில் இவ்வாழ்வாரை ப்ரஸ்தா விக்கிற * மன்னிய பேரிருள் மாண்டபின் * என்கிற பாசுரத்தில் இவர் " தமிழ்த் தலைவன் " என்றே வ்யபதேசிக்கப்பட்டிருப்பது காண்க.

இப்பாட்டில் நட்ட நடுவில் இராமபிரானுடைய திவ்ய சரித்திரமொன்றை ஆண்டாள் அமைத்தது பேயாழ்வாருடைய திருவந்தாதியில் நட்டநடுவில் "அவனே— இலங்காபுரமெரித்தானெய்து" என்றும் "எய்ததுவும் தென்னிலங்கைக் கோன்வீழ" என்றும் அருளிச்செய்தமைக்கு நன்கு ஒக்கும். [அருங்கலமே] எம்பெருமானது திருவருளை மிக அருமையாகப் பெற்ற ஸத்பாத்ரமே! என்றபடி. பாசுரம் தொடங்கும் போதே "திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன்" என்று ஆனந்தமாகத் தொடங்கப்பெற்ற பகவத் பரமக்ருபா பாத்ரபூதர் மற்றொரு ஆழ்வாரில்லையே. [தேற்றமாய் வந்துதிற] உம்முடைய திருநாமமோ பேயார்; பேய்த்தனமாக வாராமல் தேறி வந்து திறவும் என்கிறாள் போலும். .... .... ... .... (173)

## 174. கற்றுக்கறவை — பூதத்தாழ்வார்.

கற்றுக்கறவைக் கணங்கள்பலகறந்து *
செற்றார்திறலழியச் சென்றுசெருச்செய்யும் *
குற்றமொன்றில்லாத கோவலர்தம்பொற்கொடியே *
புற்றரவல்குற் புனமயிலேபோதராய் *
சுற்றத்துத்தோழிமா ரெல்லாரும்வந்து * நின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன்பேர்பாட *
சிற்றாதேபேசாதே செல்வப்பெண்டாட்டி * நீ
எற்றுக்குறங்கும் பொருளேலோரெம்பாவாய். (11)

பேயாழ்வார்க்கு அடுத்த முந்தினவரான பூதத்தாழ்வாரை யுணர்த்துவது இப்பாட்டு. இதில் * குற்றமொன்றில்லாத கோவலர்தம் பொற்கொடியே! * என்ற விளியானது பூதத்தாழ்வாரை இப்பாசுரத்திற்கு விஷய பூதராக நிஸ்ஸந்தேஹமாய் நிலைநாட்டுகின்றது. எங்ஙனேயென்னில்; கீழ்ப்பாசுரமும் இப்பாசுரமும் மேற் பாசுரமும் பேயார் பூதத்தார் பொய்கையார் என்ற முறையில் முதலாழ்வார்களை யுணர்த்துவனவென்பது தெரிவித்த விஷயம். இவ்வாழ்வார்கள் மூவரும் திருக் கோவலூரில் ஒன்று சேரப் பெற்றவர்களென்பதை ஆண்டாள் இப்பாட்டில் மிகவும் ஸ்பஷ்டமாகவே காட்டிவிட்டாள். கோவலர் என்னுஞ் சொல் இடையர்களைச் சொல்லுமதாகையாலே இந்நூலில் பல பாட்டுகளில் இச்சொல் இருக்கலாம்; ஆனால் இந்தப் பாசுரமொன்றில்தானுள்ளது. கோபாலர் என்ற வடசொல் கோவலர் என்று திரிந்ததாகக் கொள்வது உள்ளதே. திருக்கோவலூரைக் கோவல் என்று திவ்வியப் பிரபந்தம் பலவிடங்களில் நிர்தேசிக்கின்றது; கோவலர் என்றது கோவலூரைச் சேர்ந்தவர்களென்று எளிதாகப் பொருள் பெறுகின்றது. இதனால் முதலாழ்வார்கள் மூவரும் கொள்ளப்படுகிறார்கள். இவர்களேயன்றோ கோவலூரைச் சேர்ந்தவர்கள். இவர்களுக்குக் குற்றமொன்றில்லாத என்னும் விசேஷணம் மிகவும் ரஸமாகப் பொருந்துகின்றது. மற்றுள்ள ஆழ்வார்களுக்கெல்லாம் யோநிஜத்வமாகிற ஒரு குற்றமுள்ளது. இம்மூவரும் அயோநிஜர்களென்பது ப்ரஸித்தமாகையாலே குற்ற

மொன்றில்லாதவர்களாயினர். இவர்களுக்குள்ளே பொற்கொடியாக விளங்குபவர் பூதத்தாழ்வார். எங்ஙனேயென்னில், இவ்வாழ்வார்தாம் தமது (இரண்டாம்) திருவந்தாதியில் "கோல்தேடியோடுங் கொழுந்ததேபோன்றதே மால்தேடியோடும் மனம்" என்றருளிச் செய்தார். கொள்கொம்பைத் தேடியோடுவது கொடியாதலால் அப்படிப்பட்ட கொடியாக இவ்வாழ்வாரே தம்மைக் கூறிக்கொண்டார்.

ஆக, கோவலர்தம் பொற்கொடியே! என்ற விளி-திருக்கோவலூரில் ஒன்று சேர்ந்த ஆழ்வார்கள் மூவருள் கொடியென்று வ்யபதேசிக்கப்பெற்ற பூதத்தாழ்வாரே! என்கிற பொருளை ஸ்பஷ்டமாகத் தந்ததாயிற்று. கற்றுக்கறவைக் கணங்கள் பலகறந்தவர் முதலாழ்வார் மூவருமாவர். எங்ஙனேயென்னில்; கன்று + கறவை, கற்றுக்கறவை. கன்றாகிய கறவையென்றபடி. காமதேனுக்களான இவ்வாழ்வார்களிடமிருந்து பால்போல் வெளிவரும் ஸ்ரீஸூக்தியே கறவையெனக் கொள்ளத் தக்கது. கணம் என்கிற வடசொல் சிறிய அளவைச் சொல்லுமது. மற்றையாழ்வார்கள் பெரிய பெரிய பாசுரங்களை யளித்தார்கள். முதலாழ்வார்கள் அங்ஙனன்றிக்கே வெண்பாவாகிய மிகச் சிறிய பாசுரங்களை யளித்தார்கள். பொய்கையாழ்வாரருளிய திருவந்தாதி கறவைக் கணம்; பூதத்தாழ்வார் திருவந்தாதியும் சேர்ந்து கறவைக் கணங்கள்; பேயாழ்வார் திருவந்தாதியும் சேர்ந்து கறவைக் கணங்கள் பல. க்ரமேண ஏகவசந த்விவசந பஹுவசநங்கள் இணங்கின அழகு காண்க.

செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும்=தேசமெங்கும் திரிந்து பகவத் விரோதிகளை நிரஸித்து எங்கும் புனிதமாக்கவேணுமென்கிற அர்த்தத்தை "எண்டிசையும் பேர்த்தகரம் நான்குடையான் பேரோதிப் பேதைகாள்! தீர்த்தகரராமின் திரிந்து" என்ற பாசுரத்தினால் வெளியிட்டவர் பூதத்தாழ்வாரே. "புற்றரவல்குல்" என்பது இடையழகை வருணிப்பதாகும். ஸ்வாபதேசத்தில் இடையழகாவது பக்தியின் பெருமை. ஞானம் பக்தி விரக்தி என்ற மூன்றில் பக்தியானது இடைப்பட்டதாதலால் இடையழகென்பது பக்தியின் அழகேயாகும். இவ்வாழ்வார் தம்முடைய திருவந்தாதியை * அன்பே தகளியா * என்று அன்பிலே தொடங்கி, முடிக்குமிடத்தும் "என்றனளவன்றால் யானுடையவன்பு" என்று முடித்தார். இதனால் இவரது இடையழகு நன்கு வெளிப்பட்டதாயிற்று. அன்பிலே தொடங்கி அன்பிலே தலைக்கட்டினவர் இவரேயாவர். புனமயிலே! என்றவிளியும் இவர்க்கு அழகாகப்பொருந்தும். பொழிலிடத்தேவாழும் மயில்; இவ்வாழ்வார் தோன்றிய தலமோ திருக்கடல்மல்லை; அதனைப்பாடின கலியன் "கடிபொழில்சூழ் கடன்மல்லை" என்றே பன்முறையும் பாடினர். மயில் மேகத்தைக் காண்பதிலே மிக்க குதூஹலமுடைத்தாதலால் மேகம் நீர்பருக வருமிடமான கடற்கரையிலே மயில்கள் மகிழ்ந்து நிற்கும். இவ்வாழ்வார் நின்றவிடமும் கடற்கரையிலேயாம். [சுற்றத்துத் தோழிமாரித்யாதி] இவர்க்குப் பொய்கையாரும் பேயாரும் சுற்றத்தவர்கள்; மற்றையாழ்வார்கள் தோழிமார். [முகில்வண்ணன் பேர்பாட] "உலகேழும் முற்றும் விழுங்கும் முகில்வண்ணன் பூம்பாடகத்துளிருந்தானை ஏத்துமென்னெஞ்சு" என்ற (94.) இவர் பாசுரம் காண்க. புனமயில் முகில்வண்ணனைத் தானே பாடும். ... ... ... (174)

# 175. கனைத்திளங்கன்று—பொய்கையாழ்வார்

கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி *
நினைத்துமுலைவழியே நின்றுபால்சோர *
நனைத்தில்லம்சேறாக்கும் நற்செல்வன் தங்காய் *
பனித்தலைவீழ நின்வாசற்கடைபற்றி *
சினத்தினால் தென்னிலங்கைக்கோமானைச்செற்ற *
மனத்துக்கினியானைப் பாடவும்நீவாய்திறவாய் *
இனித்தானெழுந்திராய் ஈதென்னபேருறக்கம் *
அனைத்தில்லத்தாரும் அறிந்தேலோரெம்பாவாய். (12)

பூதத்தாழ்வாருக்கு அடுத்து முந்தினவரான பொய்கை யாழ்வாரை யுணர்த்தும் பாசுரமிது. தங்காய்! என்ற விளி இவர்க்கு நன்கு பொருந்தும். உலகில் தங்கையென்று ஸ்ரீ மஹாலக்ஷ்மியையும் தமக்கையென்று மூதேவியையும் வழங்குவர்கள். 'சேட்டை தம்மடியகத்து' என்ற திருமாலைப் பாசுரத்தில், தமக்கைக்கு வாசகமான ஜ்யேஷ்டா என்ற சொல்லால் மூதேவியைக் குறித்தமை காண்க. ஸ்ரீ மஹாலக்ஷ்மி தாமரை மலரிற் பிறந்தவள். 'வனச மலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே' என்கிறபடியே பொய்கையாழ்வாரும் தாமரைப்பூவில் தோன்றியவர். இந்த வொற்றுமைநயம்பற்றித் தங்காய்! என விளிக்கத் தகுதியுடையார் இவ்வாழ்வார். "நனைத்தில்லஞ் சேறாக்கும்" என்ற விசேடணமும் இவர்க்கு வெகு நேர்த்தியாகப் பொருந்தும். ராவணவதாநந்தரம் திருவயோத்திக்கு மீண்டு எழுந்தருளா நின்ற பெருமாளை நோக்கி பரத்வாஜ மஹர்ஷி "பங்க திக்தஸ்து ஜடிலோ பரதஸ் த்வாம் ப்ரதீக்ஷதே" என்றார். இங்கு பரதாழ்வான் சேறு பூசப் பெற்றிருப்பதாகச் சொல்லப்பட்டதன் கருத்து யாது? இரவும் பகலும் நிச்சலும் அழுதழுது நனைத்தில்லம் சேறாக்கினன் என்பர். "வண்பொன்னிப் பேராறு போல் வருங் கண்ண நீர்கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம் சேறு செய் தொண்டர்" என்றார் குலசேகரப் பெருமாளும். அவ்வண்ணமாகவே பொய்கையாழ்வாரும் "பழுதே பல பகலும் போயினவென்று அஞ்சியழுதேன்" என்று தாமே பேசினபடியே அழுதவராதலால் நனைத்தில்லஞ் சேறாக்கினரென்க. அன்றியும் இவரது இல்லமான பொய்கை சேறாகவேயுளது. இதை நாளைக்கும் ப்ரத்யக்ஷமாகக் காணலாம்.

[கனைத்து] முதன் முதலாகப் பேசத் தொடங்கும்போது கனைப்பது இயல்பு. பொய்கையார்க்கு முன்னம் பேசினவர்கள் யாருமில்லை. இவரே முதன் முதலாகப் பேசத் தொடங்கினவரென்பது இவ்வினையெச்சத்தினால் தோற்றுவிக்கப்படும். அங்கியான நம்மாழ்வார்க்கு அங்கமான விவர் கனைத்தபடி. [இளங்கற்றெருமை] எருமையென்றால் மஹிஷீ; லக்ஷித லக்ஷணாக்ரமத்தால் தேவ தேவ திவ்ய மஹிஷீ என்றவாறு. எம்பெருமானுக்கு திவ்ய மஹிஷியான பிராட்டியை யொப்பவர் இவ்வாழ்வார் என்பது ஸூசனை - எதனாலே யென்னில்; அவளைப் போலே இவரும் தாமரை மலரிற்

பிறந்ததனுல். "இளங் கன்றுகளையுடைய" என்று விசேஷணமிட்டதனுல், மற்றை யாழ்வார்களனைவரும் இவர்க்கு வத்ஸ ஸ்தாநீயர்களாய் இவர் மாத்ரு ஸ்தாநீயர் என்று காட்டினபடி. ஆழ்வார்களுள் முதல்வரிறேயிவர். [கன்றுக்கிரங்கி] இவர் ஸ்ரீ ஸூக்தி யருளிச் செய்யத் தொடங்கினது கன்றுகளான நம்போல்வார் பக்கலி லுள்ள பரம க்ருபையா லென்கை. "வையத்தடியவர்கள் வாழ" என்றன்றோ இவருடைய திவ்யப் பிரபந்தத்திற்குத் தனியன் தோன்றியது.

[நினைத்து முலைவழியே நின்று பால்சோர] பகவத் குணங்களை நினைத்தவாறே அந்த நினைவு தானே ஊற்றாகப் பால் போன்ற ஸ்ரீஸூக்திகள் பெருகப் புக்கன என்றபடி. [பனித்தலைவீழ நின்வாசல் கடைபற்றி] இவர் பொய்கையில் தோன்றினவ ராதலால் இவரது வாசற்கடையைப் பற்றுவார்க்குப் பனித்தலை வீழ ப்ராப்தமே யாகுமிறே. முதலாழ்வார்கள் மூவரும் பனித்தலைவீழத் திருக்கோவலூர் வாசற்கடை பற்றின கதையும் நன்கு ஸூசிதமாகிறது. [சினத்தினு லித்யாதி] இது ஸ்ரீராமகுண கீர்த்தனம். மஹர்ஷிகளின் ஞானக் கண்ணுக்கும் இலக்காகாத வொரு ஸ்ரீராம சரிதம் இவ்வாழ்வாருடைய அகக்கண்ணுக்கு இலக்கானமை "பூமேய் மாதவத்தோன் தாள்பணிந்த வாளரக்கன் நீண்முடியைப், பாதமத்தா லெண்ணினுன் பண்பு." என்ற இவரது பாசுரத்திற் பொலியும். அடியேனுடைய திவ்யார்த்த தீபிகையில் விரிவு காண்க. அதில் "நாமே யறிகிற்போம் நன்னெஞ்சே!" என்றதற்குப் பொருந்த "மனத்துக் கினியானை" என்றது. [இனித்தானெழுந்திராய்] "பழுதே பல பகலும் போயினவென்றஞ்சி யழுதேன்" என்கிற பாசுரம் பேசினபிறகுங்கூட உறங்க லாமோ? என்கை. முமுக்ஷுப்படியில் "பழுதே பல பகலும் போயினவென்று இழந்த நாளைக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை" என்ற ஸ்ரீஸூக்தியும் இங்கு அநுஸந்தேயம். [அனைத்தில்லத்தாரு மறிந்து] "அறியுமுலகெல்லாம் யானேயு மல்லேன்" என்ற இவ்வாழ்வார் பாசுரம் இங்கு நினைவுக்குவராம லிருக்குமோ?

இப்பாசுரத்தோடு ஆண்டாளுக்கு முந்தின ஆழ்வார்களை யெல்லாம் உணர்த்தி யாயிற்று. "ஆழ்வார்கள் பன்னிருவர்" என்றுமுள்ள ஸம்ப்ரதாயப் படிக்கு ஸ்ரீமதுர கவிகளும் ஆண்டாளும் ஆழ்வார் கோஷ்டியில் சேர்ந்தவர்களாதலால் இவ் விருவரையு முணர்த்துவதும் இப்பாட்டிலேயே அறியக் கிடக்கின்றது. எங்ஙனே யென்னில்; நற்செல்வன் தங்காய்! என்றது நற்செல்வன் தங்கையே! என்று பொருள்படுதலால் நற்செல்வன்தன்னுடைய கையாக இருப்பவரே! என்றபடி யாகும். இங்கு நற்செல்வ னென்பது நம்மாழ்வாரை, அவர் திருவாய்மொழி அருளிச் செய்கையில் மதுரகவிகள் அவருடைய கையின் ஸ்தாநீயராயிருந்து பட்டோலை கொண்டாராதலால் இந்த விளி மதுரகவிகட்குப் பொருந்தும்.

இனி நற்செல்வனென்று எம்பெருமானுரைச் சொல்லிற்றாகி அவருடைய தங்கையென்று ஆண்டாளையுஞ் சொல்லக் குறையில்லை. "கோதற்ற ஞானத் திருப்பாவை பாடியபாவை தங்கை" என்றும், "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" என்று முள்ளவை காண்க. ஆண்டாள் தன்னைத்தானே உணர்த்திக் கொள்ளுகை பொருந்துமோவென்று விரஸமாக வினவுவார்க்கு நாம் விடையளிக்க வல்லோமல்லோம். சொற்சுவை அமைந்திருக்கு மழகை அநுபவித்துப் போருகிறோ மத்தனை. .... .... .... ... (175)

# 176. புள்ளின்வாய்-தொண்டரடிப்பொடியாழ்வார்

புள்ளின் வாய் கீண்டானைப் பொல்லாவரக்கனை *
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடிப்போய் *
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார் *
வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று *
புள்ளுஞ்சிலம்பினகாண் போதரிக்கண்ணினாய்! *
குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே *
பள்ளிக்கிடத்தியோ பாவாய்! நீ நன்னாளால் *
கள்ளந்தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய் (13)

இது ஆண்டாளுக்கு அடுத்த தொண்டரடிப்பொடி யாழ்வாரை யுணர்த்தும் பாசுரம். [போது அரிக் கண்ணினாய்!] புஷ்பங்களை ஹரிப்பதிலேயே த்ருஷ்டியைச் செலுத்துபவரே! என்றபடி. புஷ்ப கைங்கரிய பரரிறே இவ்வாழ்வார். "துளபத் தொண்டாய தொல்சீர்த் தொண்டரடிப்பொடி" "தொடையொத்த துளவமுங் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி" என்றன்றோ இவர் சொல்லிற்று. பாவாய்! என்ற விளியும் இவர்க்கு நன்கு பொருந்தும். கீழே எட்டாம் பாட்டில் பாவாய்! என்ற விடத்து விவரணம் காண்க. பதிவ்ரதா சிரோ மணியைப் பாவையென்பது. இவ்வாழ்வார் அரங்கனொருவனுக்கே வாழ்க்கைப்பட்டு வேறொரு திருப்பதி யெம்பெருமானை நெஞ்சிலும் நினையாதவராதலால் இவரிடத்தில் கற்புச் சிறப்பு குறிக்கொள்ளத்தக்கது. திருவேங்கடமுடையா னெதிரே ஒருவர் "பதின்மர் பாடும் பெருமாள்!" என்று ஏத்த, அதைக்கேட்ட பெரிய கேள்விஜீயர், 'சோழியன் கெடுத்தான் காணும்: அந்த ஏற்றம் எம்பெருமாளுக்கில்லையே; நம்பெருமாளொருவர்க்கே' என்றார் என்ற ஐதிஹ்யமும் இங்கு நினைக்கத்தக்கது. [சோழியர் - புரச்சூடரான தொண்டரடிப்பொடிகள்.

புள்ளின்வாய் கீண்டானையென்று தொடங்கிக் கண்ணபிரானுடையவும் இராமபிரானுடையவும் கீர்த்திமை பாடினபடி சொல்லுகிறது. இவ்வாழ்வார் திருமாலையின் முடிவில் 'வள வெழுந்தவளமாட மதுரைமா நகரந்தன்னுள், கவளமால் யானை கொன்ற கண்ணனை யரங்கமாலை' என்று கண்ணபிரானுடைய கீர்த்திமையையும், திருப்பள்ளி யெழுச்சியில் 'மாமுனி வேள்வியைக் காத்து அவபிரதமாட்டிய வடுதிறலயோத்தி யெம்மரசே யரங்கத்தம்மா?' என்று இராமபிரானுடைய கீர்த்தியையும் பாடினமையுணர்க. அன்றியும், திருமாலையில் "சிலையினாலிலங்கைசெற்ற தேவனே தேவனாவான்—கற்றினம் மேய்த்தவெந்தை கழலிணை பணிமினீரே" என்று ஸ்ரீராமக்ருஷ்ணர்களிருவரையும் ஸமமாகப் பாடினதும் இப்பாட்டின் முதலிரண்டடிகளுக்கு இணங்கும்.

[பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார்] தொண்டரடிப்பொடி யாழ்வார் திருப்பள்ளியெழுச்சியில் * இரவியர்மணி நெடுந்தேரொடுமிவரோ * அந்தரத்தம

ரர்கள் கூட்டங்களிவையோ * என்னுமிரண்டு பாசுரங்களினுல் பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கபடியைப் பேசினவராதலால் அதை ப்ரத்யபிஜ்ஞாபனம் பண்ணுகிறபடி. [வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று] * சுடரொளிபரந்தன சூழ்திசையெல்லாம் துன்னியதாரகை மின்னொளிசுருங்கிப், படரொளி பசுத்தனன் பனிமதியிவனோ * என்று வானச்சுடர்க்கதிகளைச் சொல்லி யெழுப்பினவரும் இவ்வாழ்வாரே. [பள்ளிக்கிடத்தியோ] சயனப்பெருமாளொருவர் பக்கலிலே யீடுபட்டுக் கிடக்கிறீரென்கை. "அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே" என்று பலகாலும் பள்ளியைப்பேசிக் கொண்டு கிடக்கிறீரென்றுமாம்.

[நன்னுளால்] "மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னுளால்" என்ற திருவாக்கிலேயே இச்சொல்லும் வருகின்றது. தொண்டரடிப்பொடிகள் திருவவதரித்தது மார்கழித் திங்களேயாதலால் நன்னுளென்னத் தட்டுண்டோ? [கள்ளந் தவிர்ந்து] 'சூதனுய்க் கள்வனுகி' என்றும் 'கள்ளமேகாதல் செய்து' 'கள்ளத்தேனுனுந் தொண்டாய்' என்றும் பலகாலும் தமது கள்ளத்தைப் பேசிக்கொண்டாரிவ்வாழ்வார். இவரது சரிதையிலும் பொன்வட்டில் விஷயமான கள்ளம் அடிபட்டுக் கிடக்கிறது. அது தவிர்ந்து பகவத் பாகவத கோஷ்டியில் கலந்த படியை ஈற்றடி தெரிவிக்கின்றது. பெரியாழ்வார் போலவே இவ்வாழ்வாரும் பெரும்பாலும் பூம்பொழில்வாஸமுடையவராதலால் அவ்விடத்து அடையாளமாகப் புள்ளும் சிலம்பினகாண் என்பது இப்பாட்டிலும் புகுந்தது. [குள்ளக் குளிரவித்யாதி] நீராட்டம் முதலிய நித்ய கர்மாநுஷ்டானங்களையும் தவிர்ந்து சிலகாலம் பள்ளிக்கிடந்தமை இவ்வாழ்வாரது சரிதையிற் காணத் தக்கது. *குளித்துமூன் றனலையோம்புமித்யாதியுங் காண்க. .... (176)

## 177. உங்கள்புழைக்கடை—திருப்பாணுழ்வார்

உங்கள் புழைக்கடைத் தோட்டத்துவாவியுள் *
செங்கழுநீர்வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய்கூம்பினகாண் *
செங்கல்பொடிக்கூறை வெண்பல்தவத்தவர் *
தங்கள்திருக்கோயில் சங்கிடுவான்போகின்ருர் *
எங்களைமுன்னம் எழுப்புவான்வாய்பேசும் *
நங்காய்! எழுந்திராய்! நாணுதாய்! நாவுடையாய் *
சங்கொடுசக்கரமேந்தும்தடக்கையன் *
பங்கயக்கண்ணுனைப் பாடேலோரெம்பாவாய். (14)

தொண்டரடிப்பொடிகளுக்கு அடுத்தவரான திருப்பாணுழ்வாரை யுணர்த்தும் பாசுரமிது. இதில் நங்காய்! நாணுதாய்! நாவுடையாய்! என்ற மூன்று விளிகளும் திருப்பாணுழ்வாரைத் திடப்படுத்துமவை. எங்ஙனேயென்னில்; புருஷர்களில் சிறந்தவர்களை நம்பி என்றும், ஸ்த்ரீகளில் சிறந்தவர்களை நங்கை யென்றும் வழங்குவர். நம்பி—பூர்ணர்; நங்கை—பூர்ணை. குணபூர்த்தியுடைமை சொல்லப்படுகிறது. பக்தர்களுக்கிருக்கவேண்டிய குணங்களிற் சிறந்தது பாரதந்திரியம். மற்றையாழ்வார்களும் இக்குணவிசேஷத்தை நன்கறிந்தவர்களே யாயினும் இதை அனுட்டா

னத்தில் காட்டினவர் இத்திருப்பாணாழ்வா ரொருவரேயாவர். இவர் தம்மிடத்துக் கொடிய அபசாரம்புரிந்த லோகஸாரங்க மஹாமுனிகள் அரங்கேசனது கட்டளையினால் ஓடிவந்து 'என்தோளின் மீது ஏறிக்கொள்ளும்' என்ன; அங்ஙனம் செய்வது தம் இயல்வுக்குச் சிறிதும் தகாதென்று தெரிந்திருந்தும், அத்யந்த பாரதந்திரிய ஸ்வரூபத்தை நினைத்து அதற்கு உடன்பட்டதே இவ்வாழ்வார்க்குத் தனிச்சிறப்பான குணபூர்த்தியாம். [நாணாதாய்!] நாண்—அஹங்காரம்; செருக்கு; அதில்லாதவர் இவ்வாழ்வார்; அந்தணர் தலைவரான அந்த லோகஸாரங்க முனியின் தோளின்மீது ஏறியிருக்கச் செய்தேயும் சிறிதும் செருக்குக் கொள்ளாமல் 'அடியார்க்கு என்னை யாட்படுத்த விமலன்'' என்று சொல்லி, அவருடைய தோளின்மீதிருந்ததும் அவர்க்கு ஆட்பட்டபடியே யொழியத் தாம் பெருமைபெற்றபடியன்று என்று விளக்கினவராதலால் சிறிதும் செருக்குக் கொள்ளாதவர். [நாவுடையாய்!] நாக்கையுடையவர் என்பது பொருள். நாக்கு யாருக்கில்லை? எல்லார்க்குமுள்ளதே. *நாவினுள் நின்று மலரும் ஞானக்கலைகள்* என்ற திருவாய்மொழியின்படியே ஞானக்கலைகள் மலரப்பெற்ற நாக்கையுடையவரே! என்றவாறு. "பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தும் பழமறையின் பொருளென்று பரவுமின்கள்'' என்னும்படி ஸகலார்த்தங்களையும் பத்துப் பாட்டிலே யடக்கியருளிச் செய்யவல்லவரான இவரே நாவுடையர். ஆக விளிகள் மூன்றும் இவர்க்கே பொருந்துவனவாயின. இனி பாட்டினடியே தொடங்கி இவ்வாழ்வார் தமக்கே ஒவ்வோரக்ஷரமும் பொருந்துமென்பதை விவரிக்கின்றேன்.

[உங்கள் புழைக்கடைத் தோட்டத்து] இவ்வாழ்வார் தமது சாதிநிலைமைக்கு ஏற்ப வாழ்ந்தவிடத்தைத் தெரிவிக்கின்ற வாக்கியமிது. புழைக்கடைத் தோட்டத்தில் தானே இவர் வாழ்ந்தது. [வாவி] கோயிலில் திருமஞ்சனக் காவேரியருகே இவர் வாழ்ந்தபடியால் அதைக் காட்டுகிறது வாவியென்று. வாவி—நீர்நிலை. [செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பின] ஒருவாய் மலர, மற்றொருவாய் மூடினபடியைச் சொன்னவிதனால். இவரை அதிக்ஷேபித்த லோகஸாரங்க முனியின் வாய் அட்டஹாஸஞ்செய்து மலர, 'ஐயோ! அபசாரமாயிற்றே!' என்று வாயை மூடிக்கொண்டு இவர் உள்ளே பதறியோடிச்சென்ற கதையை ஸ்பஷ்டமாகக் காட்டினபடி. [செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்] காஷாயாம்பரதாரியான ஸந்ந்யாஸியைச் சொல்லுகிற வாக்கியமிது. திருப்பாவையில் ஸந்ந்யாஸிப்ரஸ்தாவம் இப்பாட்டில் தவிர வேறுபாட்டில் கிடையாது; ஆழ்வார்களில் திருப்பாணாழ்வார் தவிர வேறொருவர் கதையில் ஸந்ந்யாஸி ப்ரஸ்தாவம் கிடையாது. அடுத்த வாக்கியமும் காணீர் [தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்] லோகஸாரங்கமுனியானவர் ஸ்ரீரங்க ஸந்நிதியைத் தம்முடையதேயாகவும், பாண்பெருமாள் அங்குப் புகத்தகாதவரென்றும் நினைத்திருந்த நினைவு தொலைந்து தங்கள் திருக்கோயிலிலே [சங்கிடுவான்] சங்கு—ஸங்கம்; பலரறியக் கொண்டு சேர்ப்பதற்காக [தோளிலே தூக்கிக்கொண்டு] போகின்றபடியைப் பாருங்களென்கை.

[எங்களை முன்னமெழுப்புவான் வாய்பேசும் நங்காய்!] என்பதில் ஓர் அழகிய பொருள் தோனிக்கும். எழுப்புகையாவது எழச்செய்கை, தூக்கிக்கொள்ளுகை.

எங்களை யென்றது பாகவதர்களை யென்றபடி. பாண்பெருமாளே! உம்முடைய முதற் பாசுரத்தில் "அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்" என்ற சொல்நயத்தை நோக்குங்கால் பாகவதர்களை நீர் தோளில் தூக்கிக் கொண்டாடுபவர்போலத் தெரிகின்றது; உமது கதையோ அப்படியில்லை. மஹாபாகவதர் தோளில் நீர்தாமேறியிருந்ததாக வுள்ளது; வாய்பேசுமத்தனையேயோ? என்று விநோதமாகக் கேட்பது போலுள்ளதன்றோ. [சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையனைப்பாட; பங்கயக்கண்ணனைப்பாட.] எம்பெருமான் சங்கசக்ரபாணியென்பதையும் திருக்கண்ணழகுடையானென்பதையும் பெரும்பாலும் ஆழ்வார்களெல்லாரும் பாடியிருந்தாலும், திருப்பாணாழ்வார் *கையினார் சுரிசங்கனலாழியர்* என்றும் *கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாயகண்கள்* என்றும் பாடினமைக்கு ஏகதேசமேயாம் அவையெல்லாம். .... ... ... (177)

## 178. எல்லேயிளங்கிளியே—திருமங்கையாழ்வார்

எல்லே! இளங்கிளியே! இன்னமுறங்குதியோ? *
சில்லென்றழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன் *
வல்லையுன்கட்டுரைகள் பண்டேயுன்வாயறிதும் *
வல்லீர்கள்நீங்களே நானேதானாயிடுக *
ஒல்லைநீபோதாய் உனக்கென்னவேறுடையை *
எல்லாரும்போந்தாரோபோந்தார் போந்தெண்ணிக்கொள் *
வல்லானைகொன்றானை மாற்றாரைமாற்றழிக்க
வல்லானை * மாயனைப் பாடேலோ ரெம்பாவாய். (15)

திருப்பாணாழ்வார்க்கு அடுத்தவராய் ஸர்வகநிஷ்டரான திருமங்கையாழ்வாரையுணர்த்துகின்றதிப்பாசுரம். பரஸ்பர ஸம்பாஷணையாக வைத்துப் பாடின பாசுரம் இது. இங்ஙனே ஸம்பாஷணையாக வைத்துப் பாடினவர் திருமங்கையாழ்வார். பெரியதிருமொழியில் (11-5) *மானமருமென்னோக்கிப் பதிகம் பூர்த்தியாக [நிகமனப் பாசுரமுட்பட] இருதோழிகளின் ஸம்பாஷணையாகவன்றோ அமைந்துள்ளது. இதுவொரு ஸாதாரணமான அடையாளமென்க. [எல்லே இளங்கிளியே'] திருமங்கையாழ்வார் தம்மைக் கிளியாகச் சொல்லிக்கொண்டவிடங்கள் பல *கள்வன் கொற்பதிகத்தில் [தாய்ப்பாசுரமானதில்] * அவன்பின் கெண்டையொண்கண் மிளிரக் கிளிபோல் மிழற்றி நடந்து* என்றும், திருநெடுந்தாண்டகத்தில் *மென்கிளிபோல் மிக மிழற்றுமென் பேதையே* என்றும் சொன்னவை காண்க. இதில் மிக்கதொரு விசேஷமுண்டு. "சொன்னதைச் சொல்லுமாங் கிளிப்பிள்ளை" என்ற வசனம் ப்ரஸித்தம். நம்மாழ்வார் சுருங்கச்சொன்னதை யெல்லாம் விரியச்சொல்லுங்கிளி—திருமங்கையாழ்வார். "பராங்குசமுனியும்—பரகாலகவியும்" என்றதொரு பெரிய வியாஸத்திலே இதை மிக விரித்துள்ளேனாதலால் அங்குக் கண்டுகொள்வது.

[ஸ்ரீராமாநுஜன் செ. 197] [இன்னமுறங்குதியோ?] *பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே* என்று பாகவதகோஷ்டீ ஸம்ச்லேஷத்தையே பெரும்பேறாக வெளியிட்டநீர் இத்திரளில் அந்வயியாதே இன்னமும் உறங்கலாமோ? என்றார்கள். (அதற்குத் திருமங்கையாழ்வாருடைய விடை.)

சில்லென்றழையேன்மின் நங்கைமீர் = *கயல் நெடுங்கண் துயில் மறந்தாள்* *உறக்கமுந்தானில்லை* என்று தாய்ப்பாசுரத்தாலும், * ஓரிரவுமுறங்கேன் *உறங்கா திருப்பேன்* என்று மகள் பாசுரத்தாலும் ஒரு கணப்பொழுதும் உறக்கமின்மையை வெளியிட்டுக்கொண்ட நம்மை "இன்ன முறங்குதியோ?* என்பதே! என்று வெறுப்புக்கொண்டு 'நான் வெறுக்கும்படி பேசாதீர்கள்' என்றார். இந்த வார்த்தையில் தோழீமீர்! என்னுதே நங்கைமீர் என்று பெரியவார்த்தை சொன்னதனால் வெறுப்புக் கொண்ட கோதை [வல்லை, உன்கட்டுரைகள் பண்டேயுன்வாயறிதும்] என்றாள். திருமங்கையாழ்வாரே! நீர் மிக வல்லீர்; கடுமையாகப் பேசுவதில் நீர் மிக வல்லீரென்பதை நீர் அவதரிப்பதற்கு முன்பே நானறிந்தவள் காணும். [வல்லை] ஆசுகவி, சித்ரகவி, மதுரகவி, விஸ்தாரகவி என்னும் நால்வகைக் கவிகளும் பாடி சதுஷ்கவி ப்ரதானரென்று விருதுபெற்றீர். [உன் கட்டுரைகள்] *வாசிவல்லீரிந்தளூரீர்! வாழ்ந்தேபோம் நீரே* என்று இத்தனை கடுமையாகச் சொன்னதை நினைப்பது. பெரிய திருமொழி 4—9—4 = இங்கே நம்முடைய திவ்யார்த்ததீபிகை காண்மின்; "[வாழ்ந்தேபோம் நீரே] உம்முடைய உடம்பு உம்மையாசைப்பட்டவர்களுக்காக ஏற்பட்டதென்று நினைத்திருந்தோம்; அப்படியன்றாகில் உம்முடம்பை நீரே கண்டுகொண்டு நீரே தொட்டுக்கொண்டு நீரேகட்டிக்கொண்டு நீரே மோந்துகொண்டு நீரே வாழ்ந்துபோம்."

இப்படி கோதை கூறினதற்குக் கலியன் விடுத்தவிடை [வல்லீர்கள் நீங்களே] *கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கைதன்னைக் கிழங்கோடும், அள்ளிப்பறித் திட்டு அவன் மார்பிலெறிந்து என்னழலைத் தீர்வேனே* (நாச்சியார் திருமொழி 13-8) என்று அஸதஸ்யமாகக் கூறின உன்வார்த்தை வன்மையுடைத்தா? என்வார்த்தை வன்மையுடைத்தா? என்பதை உலகமறியாதா? என்றவாறு. இங்ஙனம் சொன்னவுடனே தாமே தம்முடைய இயல்வை நினைத்தார் *மற்றெல்லாம் பேசிலும் நின்திருவெட்டெழுத்துங்கற்று—நான் உற்றதும் உன்னடியார்க்கடிமை*என்றுகூறின நாம் இங்ஙனே ஸ்பர்த்தித்துக் கூறலாகாதென்று துணிந்து [நானே தானாயிடுக] என்றார். உங்களோடேகிலாய்த்து வார்த்தை சொல்லுகை ஸ்வரூபத்திற்குச் சேராது என்று அநுஸந்தித்தவாறு. நம்மாழ்வார் முதலானாரும் பாகவதசேஷத்வத்தை யருளிச்செய்திருந்தாலும் அவர்கள் "இது திருமந்திரத்தில் ஸித்திக்கிற பொருள்" என்று தெரிவிக்கவில்லை. திருமங்கையாழ்வாரொருவரே "நின் திருவெட்டெழுத்துங் கற்று நான் உற்றது உன்னடியார்க்கடிமை"! என்றருளிச் செய்தவராதலால் இதில் இவர்க்குள்ள சிறப்பு அறியத்தக்கது.

உனக்கென்ன வேறுடையை = இது திருமங்கையாழ்வாரை நோக்கிக் கோதை கூறுவது. சிறிய திருமடலும் பெரிய திருமடலுமாக இரண்டு திவ்வியப்பிரபந்தங்களை யருளிச்செய்து "பெருந்தெருவே ஊராரிகழிலும் மடலூராதொழியேன் நான்" என்று எம்பெருமானை அச்சமுறுத்திக் காரியங்கொள்ளப்பார்த்தது இவ்வாழ்வார்க்கு

அஸாதாரணமாதலால் இதையிட்டே *உனக்கென்ன வேறுடையை* என்கிறது. நம்மாழ்வார் *மாசறுசோதியில் "குதிரியாய் மடலூர்துமே" என்றும் "யாம் மடலூர்ந்தும்" என்றும் இரண்டு துண்டுப் பேச்சுகள் பேசினாரத்தனை. இவ்வாழ்வார் அதைப் பிரபலப்படுத்தினவரென்பது அறியத்தக்கது. [எல்லாரும் போந்தாரோ? போந்தார்] இவ்வாழ்வாரொருவர்தவிர மற்றையாழ்வார்களனைவரும் முன்னமே அவதரித்தாயிற்று என்று ஸ்பஷ்டமாகக் காட்டினபடி.

[வல்லானை கொன்றானை] கண்ணபிரான் குவலயாபீட மதயானையைக் கொன்ற சரிதையைப் பாடுவதில் இவ்வாழ்வார்க்கு மிகுந்த வுத்ஸாஹம். "பவளவாயாளென்மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே" என்று [பரகால நாயகி] பாடுகிற படியைக் கூறுகின்ற திருத்தாயார் "கவள யானை கொம்பொசித்த கண்ணனென்னும்" என்று வல்லானை கொன்ற கதையைப் பாடுகிற படியையே பகர்ந்தாள். [மாற்றாரைமாற்றழிக்க வல்லான்] இது திருமங்கையாழ்வாருடைய வீரத்தைக் காட்டுகின்றது. "அங்கமலத் தடவயல் சூழாலி நாடன்" என்கிற காழிச்சீராம விண்ணகர நிகமனப் பாசுரத்தில் "அரட்டமுக்கி—அடையார் சீயம்—கொற்றவேற் பரகாலன்" என்றருளிச் செய்துள்ள திருநாமங்களை விவரித்தபடி. [மாயன்] கண்ணபிரானுடைய மாயச் செயல்களுக்குக் குறைந்தன வல்லவே திருமங்கையாழ்வாருடையவை. நீர்மேல் நடப்பான், நிழலிலொதுங்குவான், தோலாவழக்கன், தாளூதுவான் முதலானோரைத் துணைகொண்டு இவ்வாழ்வார் செய்த மாயச் செயல்கள் ப்ரஸித்தமேயன்றோ. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * ஜிதபாஹ்ய ஜிநாதிமணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணாந் விததே பரகாலகவி ;* என்கிற ச்லோகரத்னத்தினால் அநுஸந்தித்த மாயச் செயல்களைச் சிந்திப்பது. (178)



## ஸதக்ரந்தப்ரகாசன ஸபையின் புநருத்தாரம்.

நமது ஸ்ரீராமாநுஜன் பத்திரிகை ஸத்க்ரந்த ப்ரகாசக ஸபையின் மூலமாக வெளிவருகின்றதென்பது அன்பர்களுக்குத் தெரிந்ததே. இந்த ஸபை 20 ஆண்டுகட்கு முன் சென்னையில் ஸ்தாபிக்கப்பட்டு இதன் மூலமாகப் பல புத்தகங்களும் வெளியிடப்பட்டன. இடையில் சிலவாண்டுகள் இந்த ஸபை நித்திரையிலிருந்தது. இப்போது இது புநருத்தாரமடைந்து வருகிறது. அடுத்த ஸஞ்சிகையில் இதன் விவரம் வெளிவரும். (பத்ராதிபர்.)

# 179. ஸ்ரீரங்கநாத பாதுகா ப்ரேக்ஷணோபந்யாஸம்

## தேவப்பெருமாள் ஸன்னிதி கஜேந்திராழ்வானைப்பற்றி

ஸ்ரீமதாண்டவன் நியமனம் பெற்றுப் புநருத்தாரமடைந்து இரண்டொரு வருஷமாக நடைபெற்று வருகின்ற 'ஸ்ரீரங்கநாத பாதுகா' என்னும் மாதாந்தப் பத்திரிகை அடியேனுக்கு மாதந்தோறும் கிடைத்து வருகின்றது. இதில் ஆண்டவன் தாமே நேராக எழுதியருளும் வியாஸம் ஏதேனுமிருந்தால் அதை யடியேன் ஆவலோடு வாசித்துப் பார்ப்பேன். பத்ரிகா பூரணார்த்தமாக மற்றையோரெழுதும் நீரஸவியா யாஸங்களில் கண் செல்லாது. "ஆச்ரமச் செய்திகள்" என்ற மகுடத்துடன் வெளி வரும் செய்திகளை மிகவும் ருசித்து வாசிப்பதுண்டு. நேற்று கிடைத்த பாதுகா பத்திரிகையை வாசிக்கத் தொடங்கும்போது (மார்கழிமாத ஸஞ்சிகையில் 19-11-65 தேதிக்கெதிராக) ''காஞ்சியில் ஸ்ரீவரதன் ஸந்நிதியில் யானைக்கு வடகலைத் திருமண் சாற்றிவிடப்பட்டுள்ளதாக ஸ்ரீமுகம் கிடைத்தது'' என்றுள்ள வாக்கியம் வாசிக்க நேர்ந்தது. யாரெழுதிய ஸ்ரீமுகம் யாருக்குக் கிடைத்ததாக இங்குத் தெரிவிக்கப்படு கின்றதென்று விளங்கவில்லை. ஸ்ரீமுகம் என்கிற உயர்ந்த வார்த்தையை ஸாதாரண மான கடிதங்களுக்கு உபயோகிப்பதில்லை யென்பதை ஸ்ரீவைஷ்ணவப் பெரியார்கள் உணர்வர்கள். ஸ்ரீமதாண்டவனுக்கு யாராவது கடிதமெழுதியிருந்து அதைத் தெரி விப்பதாயிருந்தால் "ஸ்ரீமுகம் கிடைத்தது" என்று வெளியிட ப்ரஸக்தியில்லை. ஆண்ட வனுக்கு ஸ்ரீமுகம் அருள் செய்யும்படியான அதிகாரிகள் காஞ்சீபுரம் தேவஸ்தானத்தில் யாருமில்லை. ஆகவே, காஞ்சீபுரத்திலிருந்து ஆண்டவனுக்குச் செய்தி கிடைத்த தாகவும் அதை வெளியிட்டதாகவும் அர்த்தங்கொள்ள ப்ரமேயமில்லையாயிற்று. ஆண்டவனுக்கு ஸ்ரீமுகம் அருள் செய்யக்கூடிய உத்தமாதிகாரிகள் இருக்கின்றார் களெனினும் அந்த மஹாஸ்வாமிகள் 'வரதன் ஸன்னிதி யானைக்கு வடகலைத் திருமண் சாற்றிவிடப்பட்டது' என்று ஆண்டவனுக்கு ஸ்ரீமுகம் அநுக்ரஹிக்க ப்ரஸக்தியில்லை. முடிவாக என்ன அர்த்தமாகிறதென்றால், பாதுகா பத்திரிகையை நிர்வஹிக்குமதிகாரி களுக்கு ஆண்டவன் ஸ்ரீமுகம் அருள் செய்ததாகவும் அது வெளியிடப்பட்டதாகவும் அர்த்தமாகிறது. வேறுவிதமாக அர்த்தமாவதற்கு ஔசித்யமுண்டெனில்அருளலாம்.

ஸ்ரீமுகம் அநுக்ரஹித்தவர் யாராகவாவது இருக்கட்டும். அந்த விஷயத்தைத் தாங்கி வெளிவந்திருப்பது ஆண்டவன் பத்திரிகை என்பது நிஸ்ஸந்தேஹம். இதில் ''யானைக்கு வடகலைத் திருமண் சாற்றிவிடப்பட்டது'' என்கிற வாசகத்தில் விவேகி களோடு அவிவேகிகளோடு வாசியற யாரும் சிறிது விமர்சம் செய்யலாம். ஆண்டவன் ஆங்காங்கு ஸன்னிதிகளில் மங்களாசாஸனம் செய்தருள வெழுந்தருளும் செய்திகளும் பத்திரிகையில் வெளி வருவதுண்டே; ''ஆண்டவன் வடகலைத் திருமண் சாற்றிக் கொண்டு மங்களாசாஸனம் செய்தருள எழுந்தருளியாச்சுது'' என்று எழுதப்படுவ துண்டோ? 'மைஸூரில் ஆண்டவன் ஸ்ரீபரகால மடத்திற்கெழுந்தருளி ஸ்ரீபரகால ஸ்வாமியை ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்தருளியாச்சுது' என்று வெளியிட்டபோதும் ''ஆண்டவன் வடகலைத் திருமண் சாற்றிக்கொண்டு, வடகலைத் திருமண் சாற்றிக் கொண்டிருக்கிற ஸ்ரீபரகால ஸ்வாமியை நமஸ்கரித்தாச்சுது'' என்று வெளியிட்டிருக்க வில்லையே. தேவப் பெருமாள்ஸன்னிதி சென்ற நூற்றாண்டிலேயே வெளித்தோற்றத் தில் வடகலையாக்கப்பட்டதென்பதும், முழுதும் தென்கலையாயிருந்தகாலம் இப்போது

யாருக்குமே தெரியாதென்பதும் உண்மை. நிகழும் நூற்றுண்டில் (கி. பி. நூ. 20ல்) தேவப் பெருமாள் ஸன்னிதியானையை யாவரும் வடகலை நாமமிட்டதாகப் பார்த்திருக்கின்றூர்களேயொழிய வேறுவிதமாகப் பார்த்திருக்கவுமில்லையே. இப்படியிருக்க, "ஸ்ரீமதாண்டவனுல் தேவப்பெருமாள்ஸன்னிதிக்கு யானை ஸமர்ப்பிக்கப்பட்டது" என்றெழுதினுல் போதாதா? திருவெவ்வுளூர் ஸன்னிதிக்கோ திருவஹீந்திரபுரம் ஸன்னிதிக்கோ யானை ஸமர்ப்பிக்கப்பட்டிருந்தால் வடகலைத் திருமண் சாற்றி ஸமர்ப்பிக்கப்பட்டதென்று எழுதியிருப்பர்களா? ப்ரஸ்தாவ ஸஞ்சிகையிலேயே 18-11-65 தேதிக்கு எதிராக ஒரு யானைக்குட்டி விஷயம் வெளிவந்துள்ளது. அதாவது, மைஸூர்முதலமைச்சர் ஆண்டவனுக்கு ஒரு யானைக்குட்டியை இனுமாக அளித்தாரென்றும் அதை ஸ்ரீமதாண்டவன் அமுதனுக்கென்று திருவுள்ளம் பற்றியாயிற்றென்றும் கண்டிருக்கிறது. "வடகலை நாமம் சாற்றி அமுதனுக்குவிடத் திருவுள்ளம் பற்றியாயிற்று" என்றெழுதினுர்களோ? இல்லை. ஏன் அப்படி யெழுதவில்லையென்று கேட்டால் 'அங்கு யானைத் திருமணைப்பற்றி விவாதமொன்றுமில்லாமையால் அப்படி யெழுதவேண்டிய அவசியமில்லை' என்று விடை கூறுவர்கள். இதனுல் தேவப்பெருமாள் ஸன்னிதி யானைத் திருமணைப்பற்றி விவாதமுண்டென்றும், அதைப் பாதுகையின் வாசகர்கள் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியமென்றும் ஸ்ரீமதாண்டவனே உத்போதனம் பண்ணியருளினபடியாயிற்று. இல்லையேல் "வடகலைத் திருமண் சாற்றி விடப்பட்டது" என்கிற வாசகம் அசட்டுத்தனம் பொருந்தியதாகவன்றே ஆகும். திருவரங்கம், திருவேங்கடம், திருவல்லிக்கேணி, ஸ்ரீபெரும்பூதூர் போன்ற திவ்ய ஸ்தலங்களுக்கு யானை ஸமர்ப்பித்து அது வடகலைநாமத்தோடு விடப்பட்டிருந்தால் அஃது அதிசயமான விஷயமேயாகும். அதைப்பற்றி யெழுத நேரும்போது இங்ஙனே யெழுதினுல் அது உண்மையில் அதிசயிக்கத்தக்கதாயிருக்கும். தேவப்பெருமாள் ஸன்னிதியானையின் திருமணைப்பற்றின உண்மை வெளிவரவேணுமென்பதே ஆண்டவனுடைய திருவுள்ளமாதலால் அவ்வுண்மை வரலாறு இங்கு ஸப்ரமாணமாகவும் ஸஸாக்ஷிகமாகவும் மூதலிக்கப்படுகிறது.

> பரம ஸாத்விகரான ஸ்ரீமதாண்டவன் இத்தகைய விஷயங்களில் தாமாகத் திருவுள்ளத்தைச் செலுத்துகிறவரேயல்லர். தற்காலம் காஞ்சீபுரத்தில் யானைத் திருமண் விஷயமான வ்யவஹாரம் நீதி மன்றத்தில் தொடரவேண்டியிருப்பதால் காஞ்சீபுரத்திலுள்ள சில விஷமிகள் ஆண்டவனுக்கு "ஸ்வாமி பத்ரிகையில் இவ்வண்ணமாக வெளி வந்தால் எங்களுக்கு மிகவும் ஸாதகமாகும்; ஆதலால் "வடகலைத் திருமணைச்சாற்றி யானை விடப்பட்டது" என்று சுவாமியின் பத்திரிகையில் பிரசுரித்தே ஆகவேணும்" என்று தெரிவித்ததனுல் அவர்களுடைய த்ருப்திக்காக இங்ஙனே வெளியிட்டாயிற்று என்பது உண்மை. வ்யவஹாரம் எவ்விதமான முடிவை யடைந்தாலும் நமக்கு விசாரமில்லை. அதில் எமக்கு வெற்றிகிடைக்கவே வேண்டாம். இதுபற்றிய உண்மை உலகுக்குத் தெரிந்தால் போதுமென்று இவ்வளவே கொண்டு இது எழுதலாகிறது.

தேவப் பெருமாள் ஸன்னிதியில் இருநூறு வருஷ காலமாகப் பலவகைப்பட்ட க்ரிமினல் ஸிவில் வியவஹாரங்கள் தோன்றிவிட்டன. எங்ஙனெந்த வகைகளிலென்றுல், (1) ஆழ்வாராசாரியர்களின் திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனம். (2) விசேஷித்து நம்மாழ்வார் மணவாளமாமுனிகளின் திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனம். (3) திவ்யப்

பிரபந்த ஸேவை. (4) ஸ்தோத்ரபாட கோஷ்டி. (5) தீர்த்தமிராசுகள். (6) தர்ம கர்த்த மிராசு. (7) வேதகோஷ்டி ஸ்ரீசடகோப மரியாதை......இங்ஙனே பலவகைப் பட்ட வியாஜ்யங்களில் திருமண்காப்பு வியவஹாரமும் ஒன்று. (இடையில் ஒரு சிறு விண்ணப்பம்.) சென்ற வருஷத்தில் (அதாவது 1964 குரோதி வருஷத்தில்) நமது ஸ்ரீராமாநுஜனுக்குப் பதினொருண்டு நிறைவு மலர் வெளியிடப்பட்டுள்ளது [நெ. 191, 192.] அதில் "ஸ்ரீதேவராஜ ஸ்வாமி தேவஸ்தானமும் தாதாசார்ய குடும்பமும்" என்கிற வியாஸம் 14 பக்கம் வெளியிடப்பட்டுள்ளது. அதற்கு ஆங்கில மொழிபெயர்ப்பும் கூடவே வெளி வந்துள்ளது. அதில் நீதி மன்றத் தீர்ப்புகளை வரிவரியாக உதா ஹரித்தே பல உண்மைகள் வெளியிடப்பட்டிருப்பதால் இப்போது பிஷ்டபேஷணம் செய்ய விரும்புகின்றிலேன். அதிலிருந்து பிரகிருதம் மிக முக்கியமான ஒரு விஷயம் மட்டும் எடுத்துக்காட்டுகிறேன். இந்த தேவஸ்தானத்தில் பல வருஷகாலமாக அதர்க்கணச் செயல்கள் பலபலவும் செய்துகொண்டிருந்த ஒரு வகுப்பினர்மேல் முதல் தடவை தொடுத்த ஸ்கீம் ஸூட் (A. S No 212 of 1909) சென்னை ஹைகோர்ட்டில் 1912-ஆம் வருஷத்தில் முடிவு பெற்றபோது மிஸ்டர் ஜஸ்டிஸ் அப்துல் ரஹீம் and ஸுந்தரமையர் ஆகிய இரு ஜட்ஜ்களும் சேர்ந்து எழுதிய (24-4-1912 தேதியுள்ள) ஜட்ஜ்மெண்டில் பதினோராவது பேஜில் இரண்டாவதுபேராவில் எழுதியிருப்பதாவது.

"We are, however, of opinion that, having regard to the past management of the temple, it is desirableo to provide some authority to supervise the administration by the trustees. Several members of the Thengalai community hold offices in the temple, and the Thengalai, as a body, have important interests connected with it. It has been decided that the invocation before the recitation of the Prabandham or Thirvoimozhi in the temple should be addressed to the Thengalai Saint, Manavala Mahamuni- The Thengalais possess the right to the Adhyapakam office. These rights led to long litigation between the Thengalai and Vadagalai communities (see Krishnaswami Thathachariar V. Krishnamachar I. L. R., 5 Madras 313). There is a shrine of Manavalamahamuni within the precints of the temple as a shrine of Nathamuni,...................... The Thengalai own the right to a good proportion of the Tirtham offices. Many of the Namams in the temple are Thengalai namams. The Thengalais have also the right of Asirvadam and a Thengalai is entitled to [the office of Mulji Dhrmakarta. All these have led to constant disputes and litigation between the communities and it is complained with reason that the fact that all the trustees are Vadagalais has tended to impede the vindication of the rights of the Thengala is and the Thengalai office holders. ... ... ... ...

It is also urged tnat the Thathachary Dharmakartas have repeatedly attempted to introduce innovations contrary to the interests of the Thengalais. They attempted to introduce an idol of Thathachar but the attempt failed. ... ... ...

We have therefore considered it desirable, in appointing a Board of Supervision, to provide that one of the members of the Board should be a Thengalai gentleman not holding any office in the temple". ... ... ... ... ...

## ஆங்கிலத்தின் நேரான மொழிபெயர்ப்பு

"தென்கலையாருக்கு அனேக முக்கியமான பாத்யதைகள் ஷை தேவஸ்தானத்தில் இருக்கின்றன. திருவாய்மொழி முதலிய பிரபந்தங்கள் தொடங்கும்போது தென்கலை யாசார்யராகிய மணவாள மாமுனிகளின் தனியனைச் சொல்லியே எப்போதும்

தொடங்கவேண்டியதென்று கோர்ட்டுகளில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அத்யாபக ஆபிஸ் தென்கலையார்களுடையதே. தேவஸ்தானத்திற்குள்ளேயே தென்கலை ஆசார்யர்களான மணவாள மாமுனிகளின் ஸன்னிதியும் நம்மாழ்வார் மதுரகவி நாதமுனிகளின் ஸன்னிதியும் இருக்கின்றன. தீர்த்த மிராசு பாத்யதைகளில் ஒரு பெரும்பாகம் தென்கலையார்களுடையதே. மேற்படி தேவஸ்தானத்தில் அனேகம் திருமண்காப்புகள் தென்கலைத் திருமணாக உள்ளன. அனேக தென்கலையாருக்கு ஆசீர்வாத பாத்யதைகளும் உண்டு. மல்ஜிதர்மகர்த்ருத்வம் ஒரு தென்கலை ஸம்ப்ரதாயஸ்தரையே சேர்ந்தது. தென்கலையாருக்கு இவ்வளவு பாத்யதைகள் ஷை தேவஸ்தானத்தில் இருப்பதாலும் தர்மகர்த்தாக்கள் எல்லாரும் வடகலையாயிருப்பதாலும் தென்கலையார்கள் தங்களுடைய பாத்யதைகளைச் சரிவர அனுபவிக்கமுடியாமல் இருக்கும்படி தடை செய்யப்படுகிறார்கள் என்று தகுந்த காரணத்துடன் நிரூபணத்துடன் குறை கூறப்படுகிறது. இது அனேக கிளர்ச்சிகளுக்கும் கோர்ட்டு விவகாரங்களுக்கும் இடம் தந்திருக்கிறது. தென்கலையார்களின் பாத்யதைகளுக்கு விரோதமாக அனேக புதிய ஆசாரங்களை வடகலை தாதாசாரிய தர்மகர்த்தாக்கள் நுழைக்க அடிக்கடி முயற்சி செய்கிறார்களென்று வற்புறுத்தப்படுகிறது. ஒரு தாதாசார்ய விக்ரஹத்தை புதிய தாய் கோவிலில் ஸ்தாபிக்கச்செய்த முயற்சி பலிக்கவில்லை. இக்காரணங்களைக் கொண்டு தாதாசார்ய தர்மகர்த்தாக்களுக்குமேல் நாங்கள் ஏற்படுத்தவிருக்கும் Board of Supervision-ல் ஒரு தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர் இருக்கவேண்டுமென்று கருதிஅப்படியே தீர்மானிக்கிறோம்.'' [இது மேற்படி ஜட்ஜ்மெண்டுக்குச் சரியான மொழி பெயர்ப்பு.] இதில் **"மேற்படி தேவஸ்தானத்தில் அனேகம் தென்கலைத் திருமண் காப்புகள் உள்ளன"** என்கிற வாக்கியம் முக்கியமாக கவனிக்கத் தக்கது.

திருக்குடந்தை, திருவிண்ணகர், தேரழுந்தூர், புள்ளம்பூதங்குடி, திருவயிந்திரபுரம் முதலான சில திவ்யதேசங்கள் தேவப்பெருமாள்ஸன்னிதி வடகலையாக்கப்பட்டதற்குப் பிறகே வடகலையாக்கப்பட்டிருந்தாலும் அத்தலங்களில் தென்கலையார்கள் மலிந்திராமல் மெலிந்திருந்ததனால் அத்தலங்களில் லோபம் செய்யப்பட்ட தென்கலைத் திருமண்காப்புகளை [சிலவற்றைக்கூட] ரக்ஷித்துக் கொள்ளமுடியாமல் போயிற்று. அத்தகைய அஜாக்கிரதை தேவப்பெருமாள்ஸன்னிதியில் ஏற்படவில்லை. தர்மகர்த்தாக்களாக வைக்கப்பட்டு தர்மஹர்த்தாக்களாக ஆனவர்கள் 1842ஆம்வூ முதலாகச் செய்யத்தொடங்கின அதர்க்கணச்செயல்கள் ஒவ்வொன்றும் அப்போதைக்கப்போது நீதிமன்றங்களில் ஆக்ஷேபிக்கப்பட்டு, பெரும்பாலும் நீதி நன்னெறிக்கு வெற்றி விளைந்திருக்கின்றது, விளைந்துகொண்டும் வருகின்றது. சிலவற்றில் தோல்வியும் விளைவதுண்டு. வேதத்தில் **"தேவாஸுராஸ் ஸம்யத்தா ஆஸந்"** என்று வருமிடங்களில் **"தே தேவா விஜயமுபயந்த:"** என்றும் வரும்; "தே தேவா: பராஜிக்யாநா:" என்றும் "கநீயாம்ஸோ தேவா ஆஸந் ஜ்யாயாம்ஸோஸுரா:" என்றும் வரும். தேவர்கள் வெற்றி பெற்றதாக ஓதப்படுமிடங்களில் வேதபாராயணஸ்வாமிகள் குரலை உரத்தி ஓதுவார்கள். தோல்விபெற்றதாக ஓதப்படுமிடங்கள் வந்தாலோ 'வேதபாராயணம் நிறுத்தப்பட்டுவிட்டதா என்ன'? என்று கேட்கவேண்டும்படியாக அனைவரும் க்ருதஸங்கேதர்கள் போலக் குரலை மிகமிகத் தாழ்த்திவிடுவர்கள். வேறு என்ன செய்யக் கூடும்? தேவர்களுக்கும் சில ஸமயங்களில் தோல்வியுண்டென்று தெரிந்து கொள்வதற்காக இதனை இங்கு உதாஹரித்தவித்தனை.

ப்ரக்ருதமான திருமண்காப்பு விஷயத்தில் ஸப்ரமாணமாகத் தெரிவிப்பது கேளீர். இந்த தேவஸ்தானத்தில் பழைய தர்மஹர்த்தாக்களால் பலபல விஷமச்செயல்கள் செய்ய ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் ஸன்னிதியில் புராதனமாயிருந்த தென்கலைத்திரு

மண் காப்புகளுக்கும் அவத்யம் விளையத்தொடங்க, அப்போது தென்கலையார்கள் முறையிட்டுக் கொண்டதன்பேரில் கோர்ட்டு மனிதர்களே நேரில்வந்து, தென்கலைத் திருமண்களுக்கு லிஸ்டு எடுத்தார்கள். அப்போது பல திருமண்காப்புகள் மாற்றப் பட்டுப் போயிற்றென்றும், மற்ற பலவிடங்களில் பழையபடியே யிருந்ததென்றும் கண்டு மாற்றப்பட்ட தென்கலைத் திருமண்காப்புகளுக்கும், மாற்றப்படாத தென் கலைத்திருமண்காப்புகளுக்கும் ஜாபிதா எடுக்கப்பட்டது. மற்ற திவ்யதேசங்களிற் போலவே இந்த தேவஸ்தானத்திலும் புராதனமாக தென்கலைத் திருமண்காப்புகளே திகழ்ந்து வந்தனவென்பது ரிகார்டுகளினால் தேறியிருக்கின்றது. அந்தரிகார்டு களெல்லாம் ஸ்கீம்ஸூட்டில் தாக்கல் செய்யப்பட்டபடியினால்தான் கனம் ஜட்ஜு கள் "மேற்படி தேவஸ்தானத்தில் அனேகம் தென்கலைத்திருமண் காப்புகள் இருக் கின்றன" என்றும் தென்கலையார்களின் பாத்யதைகளுக்கு விரோதமாக அனேக புதிய ஆசாரங்களை வடகலைதாதாசாரி தர்மஹர்த்தாக்கள் நுழைக்க அடிக்கடி முயற்சி செய்கிறார்கள்" என்றும் எழுதியுள்ளார்கள். [இந்த ஜட்ஜ்மெண்டு கீழே பக்கம் 83-ல் அச்சிடப்பட்டிருப்பது காண்க.] பெருமாளுக்கு தினப்படியாக உபயோகப் பட்டுவருகிற கடதீபத்திலும் தீர்த்தக்குடங்கள் மூன்றிலும் தென்கலைத் திருமண் காப்பு தீர்மானம். இப்போது இவை உபயோகத்தில் கொள்ளப்படாமல் மூலையில் அமுக்கப்பட்டிருக்கின்றன. மணிகளில் பெரிய திருமணியுமிப்படியே. அதிகாரிகள் வந்து பார்வையிட நேர்ந்தால் உள்ளே உறங்குமிவை எடுத்துக்காட்டப்பட்டே தீரும். இது நிற்க. கோர்ட்டு மூலமாகத் தென்கலைத் திருமண்காப்புகள் பல இந்த தேவஸ்தானத்தில் ரக்ஷைபெற்றிருக்கின்றனவென்பது அபலபிக்க முடியாதது.

தேவப்பெருமாளுடைய வைகாசித் திருநாளுக்கு [ப்ரஹ்மோத்ஸவத்திற்கு] வாராத ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்தியாவில் இருக்கமாட்டார்கள். பெருமாள் நித்தியம் இரண்டு வேளையும் எழுந்தருளி யலங்கரிக்கும் கங்கைகொண்டான் மண்டபத்தை ஸேவியாதவர்களுமிரார்கள். அங்குத் திகழும் கல்கட்டிடமான தென்கலைத் திருமண் காப்பு ஸர்க்காரால் ரக்ஷிக்கப்பட்டு நாளைக்கும் பிரகாசிக்கின்றது. இதற்கு லோபம் விளைக்க முடியாதென்று முடிவு செய்துகொண்ட பழைய தர்மஹர்த்தாக்கள் தங்கள் சாய்காலில் அதில் சுண்ணாம்பைக் கனக்கப்பூசி ஸ்பஷ்டமாகத் தெரியவொண்ணாதபடி செய்து த்ருப்தி யடைந்து வந்தார்கள். அவர்கள் பல்லைப் பிடுங்கின பாம்பு போலான பின்பு 25 வருஷகாலமாக தடஸ்தர்களாய் விளங்கிவரும் நியாயாலய டிரஸ்டிகள் [எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்] அந்தத் திருமண் காப்புக்கு வர்ணகலாப பரிஷ்காரம் செய் வித்து ஜ்வலிக்கச் செய்துள்ளார்கள். இதை இன்றும் என்றும் ஸேவிக்கலாம்.

ஸன்னிதிக்குள்ளே நூற்றுக்கால் மண்டபத்தில் கருங்கல் கூர்மமொன்றுண்டு. அதில் தென்கலைத் திருமண் தீர்ப்புபெற்றது. மேலே நான்கு கருடாழ்வார்களுக்கும் இப்படியே. இதைப்பற்றின கதை ஒரு ராமாயணம். அந்த மண்டபத்திலுள்ள பிம்பங்களின் முகங்களையெல்லாம் பாருங்கள். கல்லுளியால் எவ்வளவு வேலைத் திறங்களென்று பார்க்க. த்வஜஸ்தம்பம் தாண்டித் தொண்டரடிப்பொடி யென் றொரு திருவாசல். அது கடந்ததும் திருவபிஷேக மண்டபம். அதன் கொடுங்கையில் பெரிய காரைக் கட்டிடமான தென்கலைத் திருமண்காப்பு நியாயாதிகாரிகளால் ஸம்ர க்ஷிதமாகி இற்றைக்கும் விளங்குகின்றது. திருப்புட் குழியப்பா என்கிற பெரியார் தர்மஹர்த்தாவாக எழுந்தருளி யிருந்தகாலத்திலே மேற்படி திருமண் காப்பை லோபிக் கச்செய்ய முயன்று அதை யிடித்து விட்டு வடகலைநாமம் போட்டு வைத்தார். இதை ஸர்க்கார் அறிந்து "அபிஷேகமண்டபக்கொடுங்கையில் தென்கலைத்திருமண்காப்பு

இடிக்கப்பட்டதாகத் தெரிகிறது; அதை இந்த தாகீது கண்ட 24 மணி நேரத்திற்குள் புதுப்பிக்கவேண்டியது'' என்று கட்டளையிட அப்படியே புதுப்பித்தார் அப்போது தர்மஹர்த்தாவாயிருந்த அவரே. கோர்ட்டு அமீனா வந்து பார்வையிட்டு ''கட்டளைப்படி அபிஷேகமண்டபக்கொடுங்கைத் தென்கலைநாமம் பழையபடியே புதுப்பிக்கப்பட்டது'' என்று எழுதிக்கொண்டு போய்விட்டார். திருப்புட்குழி ஸ்வாமி தார்க்கிகராகையாலே ''அயோக வ்யவச்சேதமேயொழிய அந்யயோக வ்யவச்சேதமில்லை, தென்கலைத்திருமணோடு வடகலைத்திருமணும் இருக்கலாம், அதையும் போட்டு வைக்கலாம்'' என்று தமது சிஷ்யர்களிடம் சொல்லி, ஏற்கெனவே ஸர்க்காருத்தரவின்படி அமைத்த தென்கலைத்திருமண் காப்பை ஒரு பக்கமாக ஒதுக்கிக்கட்டி நேர்ப்பார்வையில் வடகலைத்திருமணைக்கட்டி வைத்தார். இப்போதும் இரண்டும் திகழ்வதைக் காணலாம். உயர்ந்த காரைக்கட்டிடம், வர்ணகலாபமும் பெற்றிருக்கிறது. ''இங்கே எதற்காக இந்தத் தென்கலைத்திருமண் காப்பு இவ்வளவு ஒழுங்காக்த் திகழ்கின்றது?'' என்று வயோவ்ருத்தரான ஒருவடகலை ஸ்வாமியைக் கேட்டால் அவர் இவ்விஷயங்களையெல்லாம் பாடமொப்பிப்பது போல் விளங்கச் சொல்லுவர்.

இதற்கு அடுத்தபடியாக, தாயார்ஸன்னிதிக்கு மேலண்டை பக்கமாகவுள்ள சிறிய திருமுற்றத்தில் 5. 6 அடி உயரமுள்ள ஒரு கருங்கல். இது குத்துக்கல் என வழங்கப்படும். இதிலும் திருவாழி திருச்சங்குடன் தென்கலைத்திருமண்காப்பு தீர்ப்பு பெற்றது. பத்துவருடங்களுக்கு முன்பு அடியேனெழுதி வெளியிட்டுள்ள ''வரதன் ஸன்னிதி வரலாறு'' என்னும் நூலில் பக்கம் 40-க்கு அடுத்தபடியாக இந்தத் திருமண் காப்புகளுக்கு ஆப்டோன் ப்ளாக்கெடுத்து அச்சிட்டிருப்பதை ஸ்ரீமதாண்டவன் பூர்வாச்ரமத்தில் கடாக்ஷித்தருளியாயிற்று. உகந்தருளியுமாயிற்று. எல்லாவுண்மைகளும் திருவுள்ளத்தில் பட்டேயிருந்தாலும் பாசி படருவது வியப்பன்று.

திருமண்காப்பு வியவஹாரம் பிரபலமானது, யானையின் திருமணைப்பற்றிப் பிரபலமான சர்ச்சைகள் நடந்திருக்கின்றன; நடந்தும் வருகின்றன. சின்னகாஞ்சீபுரத்தில் ஆனைகட்டித்தெருவென்று ஒரு வீதி வழங்கப்பட்டு வருகின்றதே; இதற்கு என்ன நிமித்தமென்று பெரியார்களைக் கேட்டால் அவர்கள் பழங்கதை சொல்லுவர்கள். கோவில் யானையொன்று தென்கலைத் திருமணோடு வாழ்ந்த காலத்தில் திருமண்தெரியாதபடி முகப்பட்டையிட்டு மறைப்பது. நீராட்டினபிறகு திருமண் காப்பு சாற்றுமலே இருந்துவிடச் செய்வது. புறப்பாடு காலங்களில் தழைகள் மட்டைகள் கொண்டுவரப் போகவிடுவது ......இப்படியே சேஷ்டைகள் செய்து கொண்டிருந்தார்கள் தர்மஹர்த்தாக்கள். ஒரு சமயம் 'இது கோவில் யானையன்று, எங்களுடைய ஸொந்தயானை' என்று சொல்லி வேறு வீதியில் கட்டிவைத்திருந்தார்கள். அதனாலே அந்த வீதி ஆனைகட்டிவீதியென்று பேர் பெற்றது. அப்போது அந்த யானைக்குக் கோவில் படித்தனம் கிடையாது; தழைகளை மேயவிட்டுக்கொண்டும் வெளியூர்த் திருநாள்களுக்குப் போகவிட்டு வருமானம் பெறுவித்துக்கொண்டும் ஜீவிகை நடத்தி வந்தார்கள். இத்தகைய கதைகள் பன்னியுரைக்குங்கால் பாரதமாம்.

வைசாகோத்ஸவத்தில் ஐந்தாநாளிரவு யாளிவாஹனம் ஸேவிக்கிறீர்களல்லவா? அந்த யாளிக்கும் அதன் துதிக்கையிலுள்ள குட்டியானைக்கும் தென்கலைத்திருமண் தீர்மானம். இதை நாளைக்கும் ஸேவித்து வருகிறீர்கள். தாதாசாரியர்கள் தர்மஹர்த்தாக்களாயிருந்த வரையில் அந்தயாளிவாஹனப் புறப்பாடுஉத்ஸவத்தை இரவு 12 மணிக்குமேல் நடத்துவர்கள். அதில் திருமண்காப்பை தனிப்பட லோஹத்தினால் கனக்கச் செய்வித்தன்றோ ஸர்க்கார் பொருந்தவைத் திருக்கிறார்கள், அதன்மேல்

புஷ்பஸரங்களைத் தொங்கவிட்டு மறைப்பர்கள். இப்படியாக நடந்த சில் விஷமங்கள் அப்பப்ப ! "பொய்யாவுன்னைப் 'புறம்பல பேசுவ புத்தகத்துக்குள கேட்டேன்" என்று எசோதைப்பிராட்டி சொல்லும்படியேயாயின. இவ்வளவும் மத்யஸ்தர்களான பிராமாணிகர்கள் மனத்தை நடுநிலையில் வைத்து விமர்சிப்பர்களேயானல், சாகுந்தல நாடகத்தில் துஷ்யந்த மஹாராஜன் முன்னிலையில் ஓர் அம்மை சொல்லுகிறளே, (பிராகிருத பாஷை) "எக்கக்கமெவ்வ சரிதே பணுமி கிம் எக்களக்கஸ்ஸ" என்று ; அதே கதைதான். இந்த அழகுக்கு "ஸ்ரீதேவராஜஸ்வாமி தேவஸ்தானம் வடகலை" என்று சாக்கால் எழுதிவைக்கிறுர்கள்.

## —உபஸம்ஹாரமும் இந்த வியாஸத்தின் ஸாராம்சமும்—

1842 ஆண்டில் இந்த தேவஸ்தானத்தின் நிர்வாஹம் தாதாசாரிகளிடம் வந்தது. அதற்குமுன் பலவாண்டுகள் அரசாங்கம் நேராகவே நிர்வஹித்து வந்தது. திருமண் காப்பு மாறுபாடு விஷயத்தில் முதன்முதலாக 1823-ல் ஒரு கிளர்ச்சி ஏற்பட்டது. அப்போது அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டிருந்த நரஹரிராயரென்பவர் கோவிலின் பழைய ஆசாரத்தைக் காப்பாற்றத் திருமண்காப்பு லிஸ்டு ஒன்று தயாரித்தார். அதன்படி கோவிலிலுள்ள எல்லாத் திருமண்காப்புகளும் தென்கலையே யென்று தேறியுள்ளது. அதன் முடிவில் 'உயிர் யானைகள் தென்கலை' என்று குறிப்பிட்டுள்ளது. அப்போது தாதாசார்களில் தலைவராயிருந்த குமாரதாதாசாரிய ரென்பவர் அந்த லிஸ்டில் கையெழுத்திட்டிருக்கிறுர். பிறகு 1827ல் ராமசாமி மேஸ்திரியென்னும் ஒரு ஹுஜூர் ஸூபரண்டாண்டு கலெக்டருக்கு அனுப்பிய ரிபோர்ட்டிலும் 'உயிர்யானைகள் தென்கலை' என்று குறிப்பிட்டிருக்கிறுர். பின்னிட்டு நடந்த வியாஜ்ஜியங்களில் இந்த ரிகார்டுகளை கல்பிதமென்று வாதாடின தாதாசாரிகள் ஹைகோர்ட்டு வரையிற் சென்று இவை 'நம்பத்தகுந்த ரிகார்டுகளே' யென்று ஸ்தாபித்து வைத்திருக்கிறுர்கள். இவர்கள் தேவஸ்தானத்தில் தர்மஹர்த்தாக்களாக நன்கு அமர்ந்தபிறகே திருமண்காப்பில் அதிக விஷமங்கள் செய்திருக்கிறுர்கள். முதன்முதலாக யானைத் திருமணைத்தான் மாற்றத் தொடங்கினுர்கள். (O. S. No. 14 and 15 of 1850) தாவா அப்போதிருந்த உயர்கோர்ட்டு (Sudda Adalat Court) வரையில் சென்று 1858-ல் வியவஹாரம் முடிந்த பிறகு தென்கலையேயென்கிற டிக்கிரி நிறைவேற்றப்பட்டது. முதல் நிறைவேற்றல் யானைக்கேயாயிற்று. அப்போதுதான் யானைகட்டி விதிக்கதையுண்டாயிற்று, அந்த யானை முடிந்த பின்பு பல வருஷங்கள் கோவிலில் யானையை வைத்துக்கொள்ளவேயில்லை. கோவில் பொக்கிஷமும் கணக்கும் இவர்களது கையை விட்டு நெகிழ நெகிழ எந்த சூழ்ச்சியும் செய்யமுடியாமல் போய்விட்டது. 1940-ல் திருவாங்கூர் மஹாராஜாவின் நன்கொடையாக ஒரு யானையை வரவழைத்தார்கள். அது தென்கலையாகவே யிருக்கவேண்டுமென்று எண்டோமெண்டு போர்டுக்கு மனு கொடுக்க, வந்த யானை கோவிலுக்குள் நுழையாமல் வெளியிலேயே சில மாதங்களிருந்தது. அப்போது தாதாசாரிகள் தங்களுடைய செல்வாக்கை உபயோகித்து திருவாங்கூர் மஹாராஜாவிடமிருந்து யானை வடகலைநாமத்தோடு இருக்க வேண்டுமென்கிற நிபந்தனையுடன் தானளித்ததாகக் கடிதம் வரவழைத்தார்கள். அதனல் எண்டோமெண்டு கோர்ட்டு இந்த சர்ச்சையில் விலகிற்று. அதேபோல் இப்போது ஆண்டவன் ஸ்ரீமுகம் பெற்றுவிட்டார்கள். இந்த ஸ்ரீமுகம் அகிஞ்சித்கரமாகாமல் கிஞ்சித்கரமாகிறதென்றே வைத்துக்கொள்வோம். இதனல், இந்த வகுப்பினர் 150 ஆண்டுகளாகச் செய்துவரும் திருமண் விஷமம் மிக விளங்குமேயல்லது சிறிதும் மறையாதன்றே. ... ... ... (179)

## —முக்கியமான விஞ்ஞாபனம்—

நெடுநாளாக அடியேனுக்குண்டாயிருக்கின்ற விசிகித்ஸை யொன்றை இந்த யானைத்திருமண் ஸந்தர்ப்பத்திலும் ஸவிநயம் விஜ்ஞாபிக்கிறேன். தேசிக ஸம்ப்ர தாயமென்றும் தேசிகதர்சனமென்றும் தேசிகன் தேசிகன் தேசிகன் தேசிகனென்றும் உருப்போடுகின்றவர்கள் தேசிகனுக்கு ஸர்வாத்மநா அநபிமதமென்று விளங்க நின்ற புண்ட்ரத்தையும் அர்த்தங்களையும் ஆதரிப்பது என்ன அபிப்ராயத்தினுலோ தெரியவில்லையே. திருவரங்கம் பெரிய கோயிலில் உள் தேசிகனை உள்ளேயொடுக்கி உத்தரவீதியுண்டா. சித்திரைவீதியுண்டா. அடையவளைந்தானுண்டா என்று தேடித் தேடிக் கோவில் கட்டுவது எதற்காக? அவருகந்த திருமண்காப்பை எதற்குநாம் வெறுக்கவேணுமென்று ஒரு விவேகிக்கும் தோன்றவில்லையே. இதனில் மிக்கோர் வியப்புண்டே? புண்ட்ரவிஷயம் கிடக்கட்டும்; அர்த்த விஷயங்களிலும் அனர்த்த மாகவன்றே கிடக்கிறது. ப்ரஸங்காத் அதனையும் விளக்குகின்றேன் அடுத்த வுபந் யாஸங்களாலே.

## 180. குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்ய வுரை

ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுரு பக்தரான ஓர் ஆசிரியர் பரமபக்தி பரீவாஹ ரூப மான வொரு சுலோகம் பணித்தார்—

> "குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்யசிஷ்யே
> ஜநா பக்திஹீநா யதீந்த்ராப்ரியாஸ் ஸ்யுః,
> யதீந்த்ராப்ரியா விஷ்ணுகாருண்யதூராః
> குதோ முக்திவார்த்தா ஹி தாத்ருக்விதாநாம்."

என்னுமிதுவே அந்த சுலோகரத்னம். இஃது உண்மையான தேசிக பக்தர்களுக்கு நித்யமும் முச்சந்தியும் அநுஸந்தேயமானது. இந்த சுலோகத்தின் பொருள் யாதெனில், வாதிஹம்ஸாம்புதாசார்யரென்று ப்ரஸித்தரான கிடாம்பியப்புள்ளாரு டைய திருவடியான ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுருவினிடத்தில் பக்தியில்லாதவர்கள் எம்பெருமானுர்க்கு விலக்காவர்கள்; அப்படிப்பட்டவர்கள் எம்பெருமானுடைய திருவருளுக்கு விலக்காவர்கள்; அன்னவர்கள் மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து கொண்டே யிருக்கவேணுமேயல்லது மோக்ஷம்பெற ப்ரஸக்தியேயில்லை—என்பதாம். ஒரு ஆசார்யரிடத்தில் ஒருவர் பக்திகொண்டிருப்பதை எங்ஙனம் தெரிந்து கொள்வ தென்றுல், அந்த ஆசாரியருடைய ஸ்ரீஸூக்திகளின் உண்மைப் பொருள்களை உள்ள படி யறிந்து அவற்றைப் பிழையற ப்ரவசனம் செய்வதும் அதன்படியே அனுட்டிப் பதுமாயிருந்தால் அதுதான் பக்தி லக்ஷணமாகும். வேறுவிதமாக பக்தியைக் காட் டிக்கொள்ள என்ன வழியுள்ளது? ஒருவழியுமில்லை. நிகமாந்த மஹாகுருவோ ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மஹாநிதிகளான மஹாக்ரந்தங்களை யருளிச் செய்த பெரு வள்ளல். அந்த மஹாக்ரந்தங்களில் அவ்வாசிரியர் பலபல மஹார்த்தங்களை உபபத்தி களுடன் நிலைநாட்டியுள்ளார். ஒவ்வோர் அர்த்தத்தையும் ஸந்தேஹ விபர்யயங் களுக்கு இடமில்லாதபடி நிறுவியுள்ளார். அத்தகைய அர்த்தங்களைப் பேணுதே அவற்றுக்கு மாறுன அர்த்தங்களை ப்ரவசனஞ் செய்துகொண்டு 'நாமே தேசிகபக்தர்'

என்றால் பொருந்தாதன்றோ? எம்பெருமானுரையே தஞ்சமாகக் கொண்டவராய், "நிர்விஷ்டம் யதிஸார்வபௌமவசஸாம் ஆவ்ருத்திபிர் யௌவநம்" என்றும் "யதி ப்ரவரபாரதீரஸபரேண நீதம் வய:" என்றும் "ஏரணி கீர்த்தி யிராமானுச முனியின் னுரைசேர் சீரணி சிந்தையினோம்" என்று மிருப்பவரான ஸ்வாமி ஸ்ரீபாஷ்யகார ஸூக்தி விருத்தமாக ஓரக்ஷரமும் அருளிச்செய்யகில்லாராதலால் ஸ்வாமி ஸ்ரீஸூக் திக்கு மாறான அர்த்தங்களை ப்ரவசனம் செய்யுமவர்கள் பகவத் ராமாநுஜ பக்தர் களாவதற்கும் வழியில்லையாயிற்று. ஆக இப்படிப்பட்டவர்கள் யாவரோ அவர்களே "குதோ முக்திவார்த்தா ஹி தாத்ருக்விதாநாம்" என்றதற்கு லக்ஷ்யமாகத்தக்கவர்கள் என்றதாயிற்று.

இனி, ஸ்வாமி நிகமாந்த மஹாகுரு நிஷ்கர்ஷித்தருளின அர்த்த விசேஷங்களை ஒவ்வொன்றாக உபபாதிப்போம். அவற்றை ஆதரிப்பவர்கள் யாவர்? அநாதரிப்பவர் களும் மறுப்பவர்களும் யாவர்? என்பதை விவேகிகள் நிர்ணயித்துக்கொள்வது. தாங்களாகச் சில அர்த்தங்களைக் கற்பனை செய்து வைத்துக்கொண்டு 'அவை ஸ்வாமி ஸ்ரீஸூக்தியோடு ஸம்பந்தமற்றவை' என்று நன்கு அறிந்து வைத்தும் அந்த விப ரீதார்த்தங்களையே பரம்பரையாக ப்ரவசனம் செய்துகொண்டு வருவதும் 'நாமே ஸ்வாமி பக்தர்' என்று பறை சாற்றிக்கொள்வதும் யுக்தமாகுமாவென்பதை தடஸ் தர்கள் பரிசீலனை பண்ணுவதற்காகவே இந்த வ்யாக்க்யாநோபக்ரமம். இதில் ஒரு பத்து பன்னிரண்டு உபந்யாஸங்கள் க்ரமேண அவதரிக்கும். பெரிய பிராட்டியாரு டைய திருநக்ஷத்ரமாகிய உத்தரபல்குநீ நக்ஷத்திரத்தில் இந்த வியாக்கியானம் தொடங் கப்படுவதனால் முந்துறமுன்னம் பெரியபிராட்டியாரைப்பற்றி ஸ்வாமி நிஷ்கர்ஷித் தருளின வகைகளை நிரூபிக்கப்புகுகின்றேன். ... ... (180)

# 181. பிராட்டியின் ஜகத்காரணத்வே நிகமாந்தகுரு நிஷ்கர்ஷம்

ஜகத்காரணத்வம் மோக்ஷப்ரதத்வம் விபுத்வம் ஆகிய இவற்றைப் பிராட்டியிடத் தில் தனிப்பட நிரூபிக்கும் விஷயத்தில் வேதாந்தமஹாகுரு சிறிதும் இறங்கவில்லை. இதை க்ரமேண எளிதாக நெஞ்சில் பதியவைக்கிறேன். யாதவாப்யுதயமென்னும் மஹாகாவ்யம் ஸ்வாமி பணித்தது; இதில் பன்னிரண்டாவது ஸர்க்கம் ருக்மிணிப் பிராட்டி விஷயமானது. அதில் 1, 2 ச்லோகங்களினால் ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ் மியே ருக்மிணிப் பிராட்டியாகத் திருவவதரித்ததாய்ச் சொல்லப்பட்டது. உடனே மூன்றாவது சுலோகம்—

" சிகண்டகம் நிஷ்ப்ரதிமம் ச்ருதீநாம் ச்ருங்கார லீலோபம விச்வக்ருத்யம்
அதீயதே தந்மிதுநம் ஸ்வபாவாத் அந்யோந்ய ஜீவாது மநந்ய போக்யம் "

என்பதாகவுள்ளது. இதற்கு மேலுள்ள சுலோகங்களெல்லாம் ருக்மிணிப்பிராட் டியை மாத்திரமே நோக்கியவை. முதலிரண்டு ச்லோகங்களும் அப்படிப்பட்டவை. இடையில் மூன்றாவதான ச்லோகமொன்று மாத்திரம் மிதுநம் என்கிற நிர்தேசத்தை யுட்கொண்டு தோன்றியுள்ளது. இந்த ச்லோகத்தில் * ச்ருங்கார லீலோபம விச்வக்ருத் யம் * என்பதற்கு வியாக்கியான மென்னவென்றால், "ச்ருங்கார லீலாவத் அநாயாஸ ஸாத்ய-விநோதரூப-ஜகத் ஸ்ருஷ்டிஸம்ஹாராதிக்ருத்யம்" என்பதேயாம். இப்படிப்பட்ட க்ருத்யத்தைப் பிராட்டியினிடத்தில் தனியாக இட்டுப் பேசுவதற்குத் திருவுள்ள

மில்லாமையினுலேயே ஸ்வாமி மிதுநம் என்கிற பதத்தைப் பிரயோகித்து இடையிலே இந்தவொரு சுலோகத்தை விலக்ஷணமாக அமைத்தார். முன்னும் பின்னும் பிராட்டியை மாத்திரமே குறித்து ச்லோகங்களை யருளிச்செய்து போருகிறவர் இவ்வொரு ச்லோகத்தில் மிதுநம் என்று இருவரையும் சேர்த்தருளிச் செய்ததை உற்றுநோக்கினுல் ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதிகளில் பிராட்டிக்குத் தனிப்பட்ட அந்வயமில்லையென்று ஸ்வாமி நிச்சயித்திருப்பது திடமாக விளங்கும். ஸ்ரீஸ்துதியிலும் *யத்ஸங்கல்பாத் பவதி கமலே! யத்ர தேஹிந்யமீஷாம் ஜந்மஸ்தேமப்ரலயரசநா ஜங்கமாஜங்கமாநாம்; தத் கல்யாணம் கிமபி யமிநாம் ஏகலக்ஷ்யம் ஸமாதௌ பூர்ணம் தேஜ꞉ ஸ்புரதி பவதீபாத லாக்ஷாரஸாங்கம்* என்கிற இவ்வொரு ச்லோகமே போதும் பிராட்டி விஷயத்தில் ஸ்வாமி திருவுள்ளத்தை உள்ளபடியுணர. பிராட்டியை ஸ்துதிக்க இழிந்தவர் பிராட்டியினிடத்துள்ளதை யன்றோ பேசவேண்டும். * ஜங்கமாஜங்கமாநாம் ஜன்ம ஸ்தேம ப்ரலயரசநாம் இந்திரே! த்வம் கரோஷி* என்று ச்லோகமியற்ற அருமையில்லையே. இப்படிச் சொன்னுலன்றோ பிராட்டியின் ஸ்துதியாகும். உண்மையில் இவளிடத்திலில்லாததை இருப்பதாக வைத்து எங்ஙனே கவிபண்ணுவர்? கூரத்தாழ்வான் முதலான பூர்வாசார்யர்கள் *ஆபவர்க்கிகபதம் ஸர்வஞ்ச குர்வந் ஹரி꞉, யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தே* இத்யாதியாக அருளிச்செய்ததைப் பின்பற்றியேதான் ஸ்வாமி தாமுமருளிச் செய்து போருகிறுர்.

ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்திலும் பரிபூர்ணப்ரஹ்மாநுபவாதிகாரத்தில் "ஈச்வரனுக்குச் சத்ரசாமராதிகளைப்போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ—மோக்ஷப்ரதத்வ — ஸர்வாதாரத்வ — ஸர்வநியந்த்ருத்வ — ஸர்வசேஷித்வ — ஸர்வசரீரித்வ—ஸர்வசப்தவாச்யத்வ— ஸர்வவேதவேத்யத்வ—ஸர்வலோகசரண்யத்வ—ஸர்வபலப்ரதத்வ—லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதிநியதங்கள்" என்றருளிச் செய்யப்பட்டது. இந்த மஹாவாக்கியத்தில் ஜகத்காரணத்வத்தை முந்துறச்சொல்லி முடிவில் லக்ஷ்மீ ஸஹாயத்வத்தைச் சொல்லியிருக்கையாலே, லக்ஷ்மியினிடத்தில் லக்ஷ்மீஸஹாயத்வம் எப்படி அஸம்பாவிதமோ அப்படியே ஜகத்காரணத்வமும் அவளுக்கு அஸம்பாவிதமென்றும் இவையெல்லாம் பரப்ரஹ்மத்திற்கே பொருந்துமென்றும் காட்டப்பட்டதாயிற்று. இப்படி யருளிச்செய்ததும் ஸ்ரீபாஷ்யத்தில் * விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே * என்றவிடத்து ச்ருதப்ரகாசிகையில் "ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வே ஹி ராஜ்ஞ꞉ ச்சத்ரசாமரவத் ப்ரஹ்மண꞉ அஸாதாரண சிஹ்நம்." என்றருளிச் செய்திருப்பதைப் பின்பற்றியதே. முனிவாஹந போகத்தில் ஆதி என்றவிடத்தும் இப்படியே தானுள்ளது. ந்யாயஸித்தாஞ்ஜந ஜீவபரிச்சேதத்திலு மிப்படியேதான். ... (181)

## 182. பிராட்டியின் மோக்ஷப்ரதத்வே நிகமாந்தகுரு நிஷ்கர்ஷம்

பிராட்டியின் மோக்ஷப்ரதத்வவிஷயத்தில். ஸ்வாமியின் சில்லரை ரஹஸ்யங்களை முன்னம் ஸேவித்தால் நல்ல தெளிவு உண்டாகும், ரஹஸ்யரத்நாவளியில்

"ஸ்ரீமாஞன நாராயணனெருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்...ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்".

என்றருளிச் செய்து இதை ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்தில் தாமே விவரித்தருளினுர். உண்மையில் விவரணுபேக்ஷையேயில்லாத வாக்யமன்றோவிது. இப்படி நிஸ்ஸந்தேஹமாக வருளிச்செய்தவிடங்கள் ஒன்றிரண்டல்ல;

பலபல விடங்களுண்டு. சதுச்ச்லோகியில் மூன்றுவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷுணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றருளிச் செய்ததொன்று போதுமே. எம்பெருமான்தான் மோக்ஷமளிப்பவன்; அதனைப் பெறுவிப்பவளாக மாத்திரம் பிராட்டி இராநின்றுள்" என்பது இந்த ஸம்ஸ்க்ருத ஸ்ரீஸூக்தியின் பொருள். அதற்குமேலுள்ள ஸ்ரீஸூக்திகளும் பிராட்டிக்கு உபாயத்வமில்லையென்பதையே நிலைநாட்டுவன. "அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே" என்கிற ஸ்வாமியின் காரிகையானது கண்ணாடிபோல் விளங்கவும் விளக்கவும் காணலாம்.

இவ்விஷயத்தில் நிகமனம்—பிராட்டிக்குப் புருஷகாரக்ருத்யம் தவிர, தனியே மோக்ஷப்ரதத்வ முண்டென்பதை வேதாந்த மஹாகுரு நெஞ்சாலும் நினைத்தவரல்லர். சதுச்ச்லோகி பாஷ்யத்தில் "ஸலக்ஷ்மீகஸ்ய ஸாம்ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்டிதம்" என்றருளிச் செய்திருப்பதைக் காணவேண்டும். இதற்கு என்ன பொருள் தெரியுமோ? எவ்விதமான பெருமை சொல்லவேணுமானாலும் தனிப்படச் சொல்லாதீர்கள்; பிராட்டியோடு கூடிய பெருமானுக்குச் சொல்லுங்களென்கை. "இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை" என்று பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படியிலருளிச் செய்தபடியே ஸலக்ஷ்மீகனுன ஸர்வேச்வரனுக்கே ஸாம்ராஜ்யம் ஸுஸங்கதமாம் என்று தலைக்கட்டினபடி. ... ... ... (182)

### 183. பிராட்டியின் விபுத்வே நிகமாந்தகுரு நிஷ்கர்ஷம்

இனி பிராட்டிக்கு விபுத்வமா அணுத்வமா? என்கிற விசாரத்தில் வேதாந்த மஹாகுருவின் திருவுள்ளத்தைப் ப்ராமாணிகரான ரங்கராமாநுஜ ஸ்வாமி கண்டறிந்தார். நியாயஸித்தாஞ்ஜநத்தில் ஜீவபரிச்சேதத்தின் தொடக்கத்தில் "அத ஜீவ:; அல்பபரிமாணத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வம்; சேஷத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வம்; இத்யாதி தல்லக்ஷணம்" என்றருளிச் செய்தார் ஸ்வாமி. ஜீவாத்மாவுக்குச் சொன்ன இந்த லக்ஷணமானது பிராட்டியிடத்திலும் ஸமந்வயமடைகின்ற தென்பதில் ஐயமில்லை. இவ்விடத்தில் வ்யாக்யாந கர்த்தாவான ரங்கராமாநுஜ ஸ்வாமி இந்த ஜீவலக்ஷணத்திற்குப் பிராட்டியை லக்ஷ்யமாகாதபடி செய்துவிடலாமென்று பார்த்தார்; அதாவது, பிராட்டியையும் ஈச்வர கோடியிலேயாக்கி அவளுக்கு சேஷித்வமுள்ளதேயொழிய சேஷத்வம் கிடையாதென்று சொல்லப் பார்த்தார். "லக்ஷ்ம்யா: சேஷத்வாபாவாத் நாதிவ்யாப்தி:" என்று எழுதியும் வைத்தார். உண்மையில் அவர் ப்ராமாணிகராகையாலே இதில் அவருடைய மனம் திருப்திகொள்ளவில்லை. அதனால் உடனே "லக்ஷ்ம்யா: ஜீவாந்தர்ப்பாவபக்ஷே து ந தோஷ:" [பிராட்டியை ஜீவகோடியில் சேர்ந்தவளாகக் கொள்ளில் விரோதமில்லை] என்று நிகமநம் செய்தார். பிராட்டிக்கு ஜீவகோடியில் அந்தர்ப்பாவபக்ஷம் ஹேயமாகில் இப்படி எழுத நெஞ்சிலும் நினையாரன்றோ. ஸகல பூர்வாசார்ய ஸித்தாந்தம் பிராட்டிக்கு ஜீவகோடியில் அந்தர்ப்பாவ பக்ஷமேயாம்" என்கிற கௌரவ ப்ரதிபத்தியாலன்றோ அந்த மஹான் அங்ஙனமெழுதிவைத்தார். ஸ்வாமியின் திவ்யஸூக்திக்கு வியாக்கியானமெழுதுகையில் அவர் இங்ஙனம் எழுதிவைக்கையாலே 'ஸ்வாமிக்கும் அபிமதமான பக்ஷமிது' என்று காட்டினவராயுமாயினர். ஆக இவ்வளவால் பிராட்டிக்கு அணுத்வமேயொழிய விபுத்வவாதப்ரஸக்திதானுமில்லை யென்றதாயிற்று. ... (183)

### 184. எம்பெருமானுடைய வ்யாப்தியில் நிகமாந்தகுரு நிஷ்கர்ஷம்

உபநிஷத்தானது "அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:" என்று ஸகலபதார்த்தங்களிலும் எம்பெருமான் உள்ளும் புறமும் வியாபித்திருப்ப

தாக ஓதியிருக்கின்றது. அணுவான பதார்த்தங்களில் உள்ளீடாக வ்யாப்தி ஸம்ப விக்கமாட்டாதென்று ஒருவாதம். அவயவியான பதார்த்தங்களுக்கே உள்வெளி என்று சொல்லக்கூடுமாதலாலும் நிரவயவமான அணு பதார்த்தங்களுக்கு 'உள்ளே வெளியே' என்று சொல்வதற்கு ப்ரஸக்தியில்லாமையாலும் அணு பதார்த்தங்களிலே எம்பெருமானுக்கு உள்ளுற வ்யாப்தி சொல்லவொண்ணுது என்கிருர்கள் பிறர். அன்றியும், ஒரு பொருளிலும் எம்பெருமானுக்குப் பரிஸமாப்யவர்த்தித்வம் [அதாவது-பரிபூர்ண வ்யாப்தி] கொள்ளவொண்ணுது. ஒரு பதார்த்தத்திலே அவனுக்குப் பரிபூர்ண வ்யாப்தியை அங்கிகரிக்குமளவில் [அதாவது பகவானுடைய ஸ்வரூபம் ஒன்றிலே பரிஸமாபித்து வர்த்திக்கிறதென்னில்] மற்ருெரு பதார்த்தத்தில் வியாபிக்க ப்ரஸக்தியில்லாமையாலே பரிஸமாப்ய வ்யாப்தியை அங்கிகரிக்கலாகாதென்றும் மற்ருெரு வாதமுள்ளது பிறரிடத்தில்.

அணுபதார்த்தங்ளிலும் அந்தர்வ்யாப்தி உண்டென்றும், ஒவ்வொரு பொருளிலும் பரிஸமாப்யவர்த்தித்வமும் பொருந்துமென்றும் ஸித்தாந்தம். சாரீரக மீமாம்ஸையில் (ப்ரஹ்ம ஸூத்ரத்தில்) "க்ருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயவத்வசப்தகோபோ வா" என்கிற பூர்வபக்ஷ ஸூத்ரத்தின்மேல் "ச்ருதேஸ் து சப்த மூலத்வாத்" என்கிற ஸித்தாந்தஸூத்ரம் அவதரித்துள்ளது. சாஸ்த்ரங்களினுல் தேறுகின்ற விஷயங்களில் குதர்க்க மூலகமான குசோத்யங்களைச் செய்யாமல் சாஸ்த்ரம் சொன்ன கட்டளையிலே இசையவேண்டுமென்று இந்த ஸூத்ரம் சிக்ஷிக்கின்றது. * அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஃ ஸ்திதஃ * என்று சுருதி ஸ்பஷ்டமாகச் சொல்லிவைத்தது வேதஞ்சொன்னதிருக்கட்டும். வேதார்த்த நிர்ணயகர்களான வேதாந்தமஹாகுருப்ரக்ருதிகள் நிஸ்ஸந்தேஹமாக அருளிச்செய்திருப்பது என்ன? என்றுபார்ப்போம்.

ஸ்ரீ பாஷ்யகாரருடையஸாக்ஷாத் திருவடியான திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவாய்மொழியில் (1—1—10) * பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன் * என்கிற பாசுரத்தின் ஆருயிரப்படியிலே இங்ஙனே யருளிச்செய்கிருர்: "அதி ஸூக்ஷ்மமாயிருந்த அசித் வஸ்துக்களிலும் வியாபித்து அவற்றினுள்ளே ப்ரகாசிக்கிற சித் வஸ்துக்களிலும் ஸ்தூலமான அண்டத்தில் வியாபித்தாற்போலே அநாயாஸத்தாலே அஸங்குசிதனுய்" என்று, தசோபநிஷத் பாஷ்யகாரரான 'ஸ்ரீரங்கராமாநுஜ ஸ்வாமி திருவாய்மொழிக்கு ஒன்பதினுயிரப்படியென்று ஸம்ஸ்க்ருத ப்ரதிபதார்த்த டீகை பணித்துள்ளார். [அச்சிட்டுமிருக்கிறது.] அதில் இப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் அவர் பணித்திருப்பதாவது—"ஏகைகஸ்மிந் ஜலபரமாணௌ அதிவிசால ப்ரஹ்மாண்ட இவ வ்யக்திஷு ஜாதிவத் பர்யாப்தவ்ருத்திஃ" என்று. இதன் பொருளாவது, வ்யக்திகளில் ஜாதியானது எப்படி பரிஸமாப்யவர்த்திக்கின்றதாக ஜாதிவாதிகளால் கொள்ளப்பட்டிருக்கின்றதோ அப்படி எம்பெருமான் ஒவ்வொரு ஜல பரமாணுவிலும் அதி விசாலமான ப்ரஹ்மாண்டத்திலிருப்பதுபோல (நெருக்குண்ணுமல்) நிறைந்திருக்கின்ருன் என்பதாம். இங்கு * பர்யாப்த வ்ருத்திஃ * என்று இம்மஹான் பணித்திருப்பது பூருவர்களின் ஸித்தாந்தத்தை நன்கு அடியொற்றியதாம். பரிஸமாப்ய வர்த்தமாநத்வமே சொல்லிற்று. ரங்கராமாநுஜஸ்வாமியின் ஸ்ரீஸூக்தியென்ருல் அது ஸ்வாமி ஸூக்தியோடொப்ப ஆதரணீயமன்ருே. நேராக ஸ்வாமி ஸூக்தியையே காட்டுகிறேன் நியாயஸித்தாஞ்ஜந—ஈச்வர பரிச்சேதத்தில் இவ் வாக்ஷேபத்தை யெடுத்துக்காட்டி "ச்ருதேஸ் து சப்தமூலத்வாத்" என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தையே தஞ்மசாகக்கொண்டு "யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவான்" [சாஸ்த்ரம் சொன்னபடி எம்பெருமான் எங்கும் பூர்ணனே] என்று தலைக்கட்டி யருளினுர். இந்த ஸித்தாஞ்ஜனத்தில் "சதஸ்ருஷு ச மூர்த்திஷு பரிபூர்ண ஏவ"

என்றருளிச் செய்துவிட்டு, உடனே "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் ந ஸ்யாதிதி சேத்" என்கிற ஸூக்தியுள்ளது. இந்த ஸூக்திக்கு உதயம் எப்படி? என்ப தொன்றையே விமர்சிக்கவேணும். * ஸர்வத்ராபி பூர்ண ஏவ * என்று ஸாதித்தவுடனே "வேறிடங்களிலுமிருக்கிற ஈச்வரன் ஒரேயிடத்தில் எப்படி பூர்ணனுயிருக்கமுடியும்?" என்று ஒருவன் ஆக்ஷேபிப்பதாக எழுதப்பட்டிருக்கிறதல்லவா! கீழ் வாக்கியத்தி லிருந்துதானே இந்த ஆக்ஷேபம் தோன்றவேண்டும், இப்படி ஆக்ஷேபிக்கவேண்டும்படி யான விஷயமே கீழ்வாக்கியத்தில் சொல்லி முடிக்கப்பட்டிருக்கிறதென்பது கைகொள் கனியாகும். "ஸர்வத்ராபி பூர்ண ஏவ" என்று ஸாதித்த ஸ்வாமியின் திருவுள்ளத்தில் "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் கதம் பவேத்?" என்று சங்கிப்பதற்கு உறுப்பான அர்த்தமே உறைந்துகிடந்ததென்பது தேறிவிட்டது. அந்த பூர்ணத்வந் தான் வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தி யென்பது. கடைசியாக இவ்விஷயத்தை முடிக்குமளவிலும் வேறொரு சப்தத்தையிட்டு முடிக்காமல் "யதாக்ரமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவாந்" என்று முதல் முதலிலெடுத்த பூர்ண சப்தத்தையேயிட்டு முடித் தார். இவ்விடத்தில் * க்ருத்ஸ்நப்ரஸக்திரித்யாதி பூர்வபக்ஷ ஸூத்ரத்தையும் * ச்ரு தேஸ்து சப்தமூலத்வாத் * என்கிற ஸித்தாந்த ஸூத்ரத்தையும் தஞ்சமாகக் கொண் டன்றோ விவாத விஷயம் உபஸம்ஹரிக்கப்பட்டது. லோக விஸஜாதீயமான அத்புத சக்திவாய்ந்த பரமபுருஷனிடத்திலே 'இது எப்படி ஸம்பவிக்கும்? அது எப்படி ஸம்ப விக்கும்? என்று சோத்யம் பண்ணலாகாது என்றன்றோ ஸூத்ரகாரர் முடித்திட்டது. அது தானே இங்கு ஸ்வாமியின் முடிவுக்குக் கைகொடுத்தது. அகடிதகடநாசக்தன் பக்கலிலே கூடாத தொன்றில்லையென்று சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. (184)

## 185. ஜாதிநாச விஷயத்தில் நிகமாந்த குருவின் நிர்ணயம்

"தத் கர்ம யந் ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே" என்கிற ப்ரமாணம் ஸர்வஸம்ப்ரதிபந்நம். மோக்ஷார்த்தமாக உபயோகப்படும் வித்யை எதுவோ அதுவே வித்யையாகும்; அப்படியல்லாதது செருப்புக்குத்தக் கற்ற கல்வி போன்றதேயாகும் என்று இதனால் சொல்லிற்று. ஜாதியினால் ஏற்றமும், ஆச்ரமத்தினால் உயர்வும், கல்வியினால் சிறப்பும், ஒழுக்கத்தினால் உத்கர்ஷமும் பக்திப் பெருஞ்செல்வமில்லாத போது சிறிதும் பயன்படாதென்பது தெளிவாயிற்று. இவ்வர்த்த விசேஷங்களை ஸகலாசார்ய ரஹஸ்யக்ரந்தங்களும் பரக்கப் பேசியுள்ளன. வர்ணாச்ரம வ்யவஸ் தையை மீறி இதர வர்ணத்தவர்களை உபசரிப்பதோ கௌரவிப்பதோ தகாது என்னு மபிஸந்தியினால் இவ்வர்த்தத்தில் வாத விவாதங்கள் வளர்ந்திருக்கின்றன. இக்காலத் தில் இதர வருணத்தவர்கள் யோக்யதை மிகுந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் திறத்திலே நாம் எங்ஙனம் நடந்துகொள்ளுகிறோமென்பது அனைவர்க்கும் அபரோ க்ஷம். நாமும் பிறரும் நடத்தையில் ஒரு வாசியின்றிக்கே யிருப்பது ப்ரத்யக்ஷ ஸித்தம்' ஆனால் இவ்வர்த்த விசேஷங்களை நம் பூருவர்கள் அவசியமாக எழுதிவைத்தது எதற் காகவென்றால், அவர்களுடைய காலத்திலும் பண்டைக் காலத்திலும் இருந்த லோகா தீத பரம விலக்ஷண பரமபக்த சிகாமணிகளைப் பற்றியே முக்கியமாக அருளிச் செய்த தாகும். இக் காலத்திலும் அப்படிப்பட்ட மஹா பாகவதோத்தமர்கள் * க்வசித் க்வசித் * என்றபடியே ஓரோ விடங்களிலே தோன்றுகை அஸம்பாவிதமன்று. அன்ன வர் திறத்திலே நாம் ப்ரதிபத்தி குன்றாமேயிருக்கவேணுமென்பதை சிக்ஷிப்பதும் பூருவர்களின் கருத்தாகும். ஆகவே ஈண்டு இதில் விசேஷித்துத் தெரிவிக்கஅவசிய மில்லையெனினும், சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷ ஸரணியில் நிகமாந்த மஹாகுருவின் திருவுள்ளம்மட்டும் இங்கு தெரிவிக்க வேண்டியதாகவுள்ளது.

ஜாதி ஆகமாபாயியே யொழிய நசிக்காமலிருக்கக் கூடியதன்று. இதை ஸ்வாமி அபயப்ரதாநஸாரத்தில் * நமஸ் தஸ்மை கஸ்மைசந பவது * என்று தொடங்கும் சுலோகத்தில் ''ஸுராதிசஸ்வைரக்ஷணகுபித சாபாயுதவதூ த்ருஷத்தாதுர்ஜாத ப்ரசமந பதாம்போஜரஜஸே'' என்பதனாலும், ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ''சிலாதேஃ ஸ்த்ரீத்வாதிஃ'' என்பதனாலும் விளக்கி யருளினார். ஸ்த்ரீஜாதிபோய் சிலாஜாதி ஏற்பட்டது முதலில்; பின்னை அந்த சிலாஜாதி போய் ஸ்த்ரீஜாதி ஏற்பட்டது, ஆகவே ஜாதி ஆகமாபாயியென்று வேதாந்த மஹா குருவின் திருவுள்ளமாக முடிந்தது, ... (185)

## 186. உபாயாந்தரங்களைப்பற்றி நிகமாந்தகுரு நிர்ணயம்

ப்ரபத்தியொழிந்த மற்றையுபாயங்களானவை உபாயாந்தரங்களெனப்படும், உபாஸநம் முதலானவற்றிலே ப்ரபந்நர்களான நமக்கு ப்ராப்தியில்லை யென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம், சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள அந்த உபாயாந்தரங்களை நாம் விடுகைக்கு ஹேது என்ன? என்கிற விசாரத்திலே, அவ்வுபாயாந்தரங்களை அறிகைக்கும் அநுஷ்டிக்கைக்கு மீடான ஜ்ஞான சக்திகளில்லாமையே ஹேதுவென்று நினைக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட ஜ்ஞாந சக்திகள் நம்போல்வார்க்கு இல்லையாகிலும் ஜ்ஞாநசக்தி புஷ்கலர்கள் [பூர்வாசார்ய ப்ரப்ருதிகள்] பலருண்டே; அவர்கள் அநுஷ்டித்ததுண்டோ? அநுஷ்டிக்கத்தகுமோ? என்னில்; தகாது. உபாயாந்தர பரித்யாகத்திற்கு ஜ்ஞான சக்திக ளில்லாமையே ஹேதுவன்று; எம்பெருமானுக்கு அத்யந்தம் பரதந்திரப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேராதென்னுமதுவே முக்க்யஹேதுவென்று ஸித்தாந்தம். அஜ்ஞானமும் அசக்தியுமடியாக விடுவதானால் ஜ்ஞானசக்திகளுண்டாகில் அவற்றைப் பரிக்ரஹிக்கவேண்டி வருமன்றோ; ஸ்வரூப விரோதியென்று விட்டாலன்றோ மறுவலிடாதொழிவது. ஆகவே ஸ்வரூபவிருத்தமென்னுமதுவே ப்ரதாநஹேது. இதை ஸ்வாமி ந்யாஸதிலகத்திலே வெகு சாதுர்யமாகக் காட்டியருளினார்; எங்ஙனே என்னில்; அதுதன்னிலுள்ள சுலோகமிது;—

> **" ஆர்த்தேஷு ஆசுபலா ததந்யவிஷயேபி உச்சிந்ந தேஹாந்தரா**
> **வஹ்ந்யாதேரநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ,**
> **ஸ்ரீரங்கேச்வர! யாவதாத்ம நியத த்வத் பாரதந்த்ர்யோசிதா**
> **த்வய்யேவ த்வதுபாயதீஃ அபிஹிதஸ்வோபாயபாவாஸ்து மே."**

இதில் ப்ரபத்திக்கு இட்டிருக்கிற விசேஷணங்களத்தனையும் பக்திவேஷ வ்யாவர்த்தகங்கள். விவரித்துக் காட்டுகிறேன் காண்மின்; [ஆர்த்தேஷு ஆசுபலா] பக்தியானது விளம்பித்துப் பலனளிக்கும்; ப்ரபத்தி அங்ஙனன்றிக்கே விரைவில் பலனளிக்கும்—ஆர்த்தப்ரபந்நர்திறத்தில். [ததந்யவிஷயேபி உச்சிந்ந தேஹாந்தரா] பக்தியானது தேஹாந்தர ஸம்பந்தத்தை யறுத்துத் தருவதில் நியதியுடையதன்று; ப்ரபத்தி நியமேந தேஹாந்தர ஸம்பந்தத்தை யறுத்துத் தரும். [வஹ்ந்யாதேஃ அநபேக்ஷணாத் தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ] பக்தியாகிற உபாயத்தின் அநுஷ்டானத்தில் அக்நிகார்யம் முதலியவை அபேக்ஷிதமாயிருக்கையாலே அது அதிக்ருதாதிகாரமாயிருக்கும். ப்ரபத்தியில் அவ்வபேக்ஷையில்லாமையாலே ஸத்யம் சொல்வதற்கு எப்படி ஸர்வரும் அதிகாரிகளோ அப்படியே ப்ரபத்தியிலும் ஸர்வரும் அதிகாரிகள். இனி இதற்கு அடுத்த விசேஷணமே ப்ரக்ருத விஷயத்திற்கு உற்றுநோக்கத்தக்கது. [யாவதாத்ம நியத த்வத் பாரதந்த்ர்யோசிதா] பக்தி ஸ்வரூபவிருத்தம். ப்ரபத்தி ஸ்வரூபாநுரூபம் என்கிறது. யாவதாத்மநியதமான அத்யந்த பாரதந்த்ர்யத்துக்கு ப்ரபத்தி உசிதமாயிருக்கு மென்றபோதே ப்ரபத்திப்ரதிகோடியான பக்தியானது அந்த பாரதந்த்ர்யத்திற்கு விருத்தமாயிருக்கு மென்னுமிடம் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்ட

தாயிற்றன்றே; ஆகவே வேதாந்த குருவின் திருவுள்ளமும் உபாயாந்தரம் ஸ்வரூப விருத்தமென்பதே யென்று தேறி நின்றது. * பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல் * என்ற செய்யுள் வேதாந்தவாசிரியருடையதாக இருந்தால் பக்தி முதலான உபாயாந்தரங்களில் பதி ஏன் கூடவில்லை? என்று கேட்கவேணும்.

## 187. பகவத்க்ருபையில் நிகமாந்த குருவின் நிர்ணயம்

பகவத்க்ருபையை நிர்ஹேதுகமென்று கொண்டால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வருமென்றும் வைஷம்யநைர்க்ருண்யாபத்தியைப் பரிஹரிக்கின்ற "வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்" என்கிற ப்ரஹ்ம ஸூத்ரம் விரோதிக்குமென்றும் சில வாதங்கள் கிளம்புவதுண்டு. உலகத்திலுள்ள ஸகல ப்ராணிகளிடத்திலும் எம்பெருமான் நிர்ஹேதுகமாகவே அருள்செய்வதாகக் கூறினால்தான் மேற்சொன்ன வாதங்களுக்கு ப்ரஸக்தியுண்டாகும். அப்படி யாரும் கொள்வதில்லை. அதிகாரி விசேஷங்களிடத்தில் நிர்ஹேதுகமாக அருள்செய்கிறானென்றே ஸகலாசார்யர்களுமருளிச் செய்வது. இக்கொள்கையில் வேதாந்தவாசிரியர் முன்னணியில் நிற்பவர். நிர்ஹேதுக க்ருபையைப்பற்றிப் பலவிடங்களிற் பேசுகிறார். சிலவிடங்கள் காட்டுகிறேன்.

பரமபத ஸோபாநத்தில்—" அஜ்ஞாத யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்ய புத்திமூல ஸுக்ருத விசேஷங்களை வியாஜமாகக்கொண்டு விசேஷ கடாக்ஷம் பண்ணி" என்றருளிச்செய்தார். இதில் "வ்யாஜமாகக்கொண்டு" என்றதையும் ஸஹியாமல் அவ்யாஜக்ருபையையும் அருளிச்செய்து போந்தார். அது எங்கே என்னில்; திருவாய்மொழியில் முதற்பத்தில் * பொருமா நீள்படையென்கிற பத்தாவது பதிகத்திற்கு ஆறாயிரப்படியிலில்லாத விஷயம் அவ்வாறாயிரப்படிக்குப் பிற்பட்ட வியாக்கியானங்களிலுள்ளது. அதாவது, இப்பதிகத்தினால் ஆழ்வார் எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபாப்ரபாவத்தை யநுபவிக்கிறாரென்று பட்டர் நிர்வஹித்தருளினதாகக் காட்டப்பட்டது. அந்த நிர்வாஹத்தையே ஸ்வாமி ஆதரித்து த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளியில் "ஆதாவித்தம் பரத்வா..." என்கிற ச்லோகத்தில் "அவ்யாஜோதார பாவாத்" என்றருளிச்செய்தார். நிர்ஹேதுகக்ருபா விசிஷ்டனுகையாலே என்றபடி. இவ்விடத்தில் இரண்டு விசேஷங்கள். (1) எம்பெருமானை நிர்ஹேதுகக்ருபாவானுகச் சொன்னது ஒன்று; (2) இவ்விஷயம் ஆறாயிரப்படியில் இல்லாமல் அதற்குப் பின் தோன்றிய வியாக்கியானங்களில் மட்டும் விளங்கா நிற்கவும் இதையே ஆதரித்துப் பரிக்ரஹித்தது மற்றொன்று.

" நிஷாதாநாம் நேதா கபி குலபதிः காபி சபரீ" என்கிற தயாசதக ச்லோக ரத்நத்தின் பொருளை உபந்யஸிக்கப்புக்கால் குஹப்பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜர் சபரி குசேலர் கூனி ஆய்ச்சியர் மாலாகாரர் என்னுமிவர்கள் இராமபிரானுடையவும் கண்ணபிரானுடையவும் நிர்ஹேதுக கருணைக்கு இலக்கானவர்கள் என்றல்லது வேறொன்று சொல்லப்போகாது. ஸ்தோத்ர க்ரந்தங்களில் பணிப்பது ப்ரசம்ஸைக பரமாதலால் அதுதன்னை சாஸ்த்ரார்த்தமாகக் கொள்ளவொண்ணுதென்று கூறமுன் வருவர்கள். முநிவாஹந போகமென்று பெயரிட்டு ரஹஸ்யக்ரந்தமாகப் பணித்த அமலனுதிபிரான் வியாக்கியானத்தின் உபக்ரம ஸ்ரீஸூக்தி இது காணீர்;—" காரண விசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத்கடாக்ஷத்தாலே அயத்நலப்தமாள........." என்று. இவ்விஷயத்தில் இவ்வளவேபோதும். ஒரு ஹேது வில்லாமல் எம்பெருமான் அருள் செய்யமாட்டானென்கிற வாதம் ஸ்ரீநிகமாந்த குரு கோஷ்டியில் விலை செல்லுமதன்று என்பதே ஸாரமான வார்த்தை. ... (187)

## 188. சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறென்பதில் நிகமாந்தகுரு நிர்ணயம்

பூர்வாசார்ய கோஷ்டியில் சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேரு? ஈச்வரலாபம் சேதனனுக்குப் பேரு? என்கிற விசாரம் தலைமைபெற்றிருக்கும். இந்த விசாரத்தின் முடிவை உள்ளபடி தெரிந்துகொண்டால் பல சிக்கல்கள் அறும். சாஸ்த்ரங்களை மேலெழப் பார்க்கும்போது 'ஈச்வரனை அடைவது சேதநனுக்குப் பேறு' என்பதாகவே தோற்றி நிற்கும். ஈச்வரனை ப்ராப்யனென்றும், சேதநனை ப்ராப்தாவென்றும் ஸ்பஷ்டமாகப் பலவிடங்களிலும் சொல்லியிருக்கையாலே 'ஈச்வரலாபம் சேதநனுக்குப் புருஷார்த்தம்' என்றே க்ரஹிக்கநேரும். பிறர் இப்படியே மதமாகக் கொண்டிருக்கிறார்கள். 'ஈச்வரனுக்குத்தான் சேதநலாபம் புருஷார்த்தம்'' என்பது ஸித்தாந்தஸாரம். வேதாந்தவாரியருடைய திருவுள்ளமும் சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்பதேயாம். இதனை அவர் கீதாபாஷ்யதாத்பர்ய சந்த்ரிகையில் வெகு அழகாகக் காட்டியுள்ளார். கீதையில் ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள *மந்மநா பவ* என்கிற ச்லோகத்தின் பாஷ்யத்திற்கு விவரணமெழுதுகையில்—" ஆச்ரித ஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே" என்றருளியிருக்கிறார்.

சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குப் பேறு என்றால் இவ்வர்த்தம் ஹ்ருதயத்தில் அவகாஹிப்பது சிரமமேயாகும். ஆனாலும் எளிதாக உணர்த்துகிறேன். சேதநன் முக்தனாகிப் பரமபதத்தில் சென்றபின் அங்கு என்ன கோஷிக்கிறானென்பதை நம் உபநிஷத்து தெரிவிக்கின்றது. [அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்] என்பது முக்தனுடைய முதல் வார்த்தை. 'பகவானுக்கு நான் அன்னமாகிறேன்' என்று ஒரு தடவைக்கு மூன்று தடவையாக இதில் சொல்லுகிறது. இதனால்; ஈச்வரனானவன் சேதநனைப்பெற்று அநுபவிக்க வேணுமென்று பெரும்பசி கொண்டிருந்தானென்றும், அப்பசி முக்தாத்மாவால் முதலில் தீருகிறதென்றும் ஸ்பஷ்டமாகிறது. இல்லையாகில், * அஹமந்நம் * என்று ஓதவேண்டியதில்லை யன்றோ.

" கஸ்தூரி கிடைப்பது மிகவும் அரிதாயிருக்கின்றது " என்று ஒருவன் சொன்னால் அவன் கஸ்தூரியைப் பெறுவதற்கு மிகவும் முயற்சி செய்பவன் என்பது எளிதாகத் தெரியவருமன்றோ. இதேபோல, எம்பெருமான் "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லபஃ" என்று கீதையில் சொல்லுகிறான். 'எனக்கு எல்லாம் கண்ணன்' என்றிருக்கிற மஹாத்மா எனக்குக் கிடைக்கவில்லையே யென்கிற வருத்தத்தையன்றோ இதில் காட்டுகிறான். எம்பெருமான்தான் அப்படிப்பட்ட சேதனனைப் பெறுதற்குப் பெருமுயற்சி செய்பவனென்பது இதனால் ஸ்பஷ்டமாக விளங்கும். இல்லையாகில் ஸுதுர்லபஃ என்பனோ?

ஒரு வஸ்துவைப் பெறுவதனால் ஆனந்தம் உண்டாவது எவனுக்கோ அவன்தான் பேறுபெறுபவன் என்பது நிர்விவாதமான விஷயம். சேதநனைப் பெறுவதனால் ஆநந்திப்பவன் எம்பெருமானென்பது தேறிவிட்டால் அவனே லாபமடைபவன் என்பதும் அநாயாஸமாகத் தேறிவிடுமன்றோ. ஆளவந்தார் "கதா ஹமைகாந்திக நித்ய கிங்கரஃ ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத ஜீவிதஃ" என்றார். இதில் ப்ரஹர்ஷயிஷ்யாமி என்கிற க்ரியாபதம் ஆச்சரியமாக அமைந்தது. உனக்குத் தொண்டு செய்து நான் எப்போது ஆநந்திக்கப்போகிறேனென்னாமல் 'நான் எப்போது உன்னை ஆநந்திப்பிக்கப்போகிறேன்' என்றார். ணிஜந்தப்ரயோகம் நோக்குக. இங்கு வியாக்யானத்தில்—" தன்னுடைய அநுவ்ருத்தியால் ஈச்வரனுக்குப் பிறக்கும் ஹர்ஷமேயிறே சேதநனுக்கு ப்ராப்யம் " என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்ததை ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஸ்வாமி அப்படியே மொழிபெயர்த்தார்—"[ப்ரஹர்ஷயிஷ்யாமி] த்வத்தாஸ பூதஸ்ய மே த்வத்ப்ரஹர்ஷ ஏவ ப்ரதாநம் ப்ரயோஜந மிதி பாவ:" என்று.

இவற்றுக்கெல்லாம் சிகரமாக விளங்குவது "நச பரம புருஷஸ் ஸத்ய ஸங்கல்ப:......" இத்தியாதியான ஸ்ரீபாஷ்ய ஸூக்தி. இதில் "பரமபுருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றது உயிரான ஸூக்தியன்றோ. இதையே வேதாந்தமஹாகுரு பலவிடங்களில் பலமுகமாக விவரித்தருளினாராயிற்று. "உபஸ்திதம் ஜ்ஞாநிநம்" என்னாமல் லப்த்வா என்றாரிறே.

ஞானங்களில் மேலெழுந்த ஞானமென்றும் ஆழ்ந்த ஞானமென்றும் இருவகை யுண்டு; அப்படியே விஷயங்களும் இருவகைப்பட்டிருக்கும். சேதநலாபம் பரம புருஷனுக்குப் பேறு என்னுமிவ்விஷயமும், பரகதஸ்வீகாரமே ப்ரசஸ்தமென்னும் அடுத்த விஷயமும் ஆழ்ந்த ஞானத்தினால் அறியத்தக்கவை. இவ்விஷயங்ளிகல் ஸ்மார்த்த மாத்வாதிகளுக்கு ப்ரவேச ப்ரஸக்தியே கிடையாது. இவற்றை ஆழ்ந்து அநுபவிக்க ஸ்ரீவைஷ்ணவர்களே இட்டுப் பிறந்தவர்கள். ஏனென்றால், இவை ரஹஸ்யங்களில் நுட்பமாகத் தேறுமவை. ரஹஸ்யாதிகாரிகள் எம்பெருமானார் திருவடி ஸம்பந்திகளான ஸ்ரீவைஷ்ணவர்களே யல்லது மற்றையோர்களல்லர். வேதாந்தவாசிரியர் குருபரம்பராஸாரத்தில் எம்பெருமானார் இன்னாரிடம் இன்னது அதிகரித்தாரென்பதைச் சொல்லுமிடத்து திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்களை அதிகரித்தாரென்னாமல் சிக்ஷித்தார் என்றார். அதிகரித்தா ரென்கிற சொல்லுக்கும் சிக்ஷித்தாரென்கிற சொல்லுக்கும் நெடுவாசியுண்டு. குளத்து நீரை அப்படியே யெடுத்துப்பருகுவதற்கும்வடிக்கட்டிப்பருகுவதற்கும் வாசியில்லையா? அங்ஙனம் வடிக்கட்டின அர்த்தங்களை எம்பெருமானாருடைய பரம்பரையிலே படிந்த வர்கள் ரஸிக்கத்தக்கவர்களேயொழிய இடையிலே வந்துபுகுந்த மற்றையார்க்கு இவற்றின் சுவை தெரியவிரகில்லை. இவற்றை அவர்கள் வெறுக்கிறார்களென்பதில் வியப்பில்லை. நாமே தேசிகபக்தர்களென்று பறை சாற்றுவதொன்றே வியப்பு. (188)

## 189. பரகதஸ்வீகாரத்தில் நிகமாந்தகுரு நிர்ணயம்

சேதநன் தான் எம்பெருமானைப் பற்றுவது ஸ்வகத ஸ்வீகாரமென்றும், எம் பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் வழங்கப்படு கின்றது, முறையே மர்க்கடகிசோர ந்யாயமென்றும் மார்ஜாரகிசோர ந்யாய மென்றும் வழங்குவர். நாம் அநுஸந்திக்கிற த்வய மந்த்ரத்தில் ப்ரபத்யே என்று நாம் அவனைப் பற்றுவதாகச் சொல்லப்படுகிறதேயொழிய அவன் நம்மைப் பற்றுவ தாக ஒரு மந்த்ரமும் தோன்றியிருக்கவில்லையே. ஆழ்வார்களும் * உன்னை நானடைந் தேன் * உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேன் * பற்றிலார் பற்ற நின்றானே * என்றிப் புடைகளிலே பணித்துள்ளார்களே யல்லது வேறு வகையாகப் பணித்திருக்கக் காண் கின்றிலோம். இப்படியிருக்க, பரகதஸ்வீகாரமென்று ஒன்றைப் பேசுவதும், "நாம் பற்றும் பற்று அவத்யகரம், அவன் பற்றும் பற்றே க்ஷேமங்கரம்" என்று கூறுவதும் அர்த்தமில்லாத வார்த்தைகள் என்று ஏசுவர் பிறர். இவர்கள் ஏசுகிற ரஸ்யரஹஸ் யார்த்தத்தைஸ்வாமி வேதாந்தமஹாகுரு நிலைநாட்டியிருக்கும் பரிசு காட்டப்படுகின்ற திங்கு. * அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத் துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி * என்னப்பட்ட பரமபுருஷன் கீதா சாஸ்த்ர மருளிச் செய்தது மஹாபாக்யம். அதற்கு நம்மிராமானுசன் பாஷ்ய மருளிச் செய் ததும் அதற்கு ஸ்வாமி தாத்பர்ய சந்த்ரிகை பணித்ததும் பேரின்பமான பரம பாக்யம். கீதையில் எட்டாவது அத்யாயத்தில் பதினான்காவது ச்லோகம்—" அநந்ய

சேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யசஃ, தஸ்யாஹம் ஸுலபஃ பார்த்த! நித்ய யுக்தஸ்ய யோகிநஃ'' என்பது.

''ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்'' என்று பகவான் தான் தனக்கு உயிர்நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியையும் பேறுபெறும் பரிசையும் இனியருளிச் செய்கிறான் (கண்ணபிரான்)—என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வியாக்கியானித் தருளியுள்ளார் பாஷ்யகாரர். இந்த சுலோகத்தின் கருத்து என்னவென்றால், அர்ஜுநா! எவன் இடைவிடாமல் எப்போதும் வேறொன்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனாய் என்னையே ஸ்மரிக்கிறானோ, என்னோடு நித்ய ஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம். இதில் (தஸ்யாஹம் ஸுலபஃ) 'அவனுக்கு நான் ஸுலபன்' என்கிற பகுதிக்கு பாஷ்யம் செய்தருளி யிருக்கின்ற வகையாவது, (அங்குள்ள ஸ்ரீஸூக்திகள்)

**''தஸ்ய நித்ய யுக்தஸ்ய—நித்யயோகம் காங்க்ஷமாணஸ்ய, யோகிநஃ. அஹம் ஸுலப: அஹமேவ ப்ராப்யஃ; ந மத்பாவ ஐச்வர்யாதிகஃ. ஸுப்ராபச் ச. தத்வியோகம் அஸஹமாநஃ அஹமேவ தம் வ்ருணே. மத்ப்ராப்த்யநுகுண உபாஸநவிபாகம் தத்விரோதி நிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்தஃ. * ய மேவைஷ வ்ருணுதே தேந லப்யஃ* இதிஹி ச்ரூயதே. வக்ஷ்யதி ச *தேஷாம் ஸததயுக்தாநாம்..... இதி.''** ஆக இவ்வளவும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகள். (இவற்றின் பொருளாவது—) என்னோடு எப்போதும் கூடியிருக்கவேணுமென்கிற விருப்ப முடையவனுக்கு அடையத் தகுந்தவன் நானேயாகிறேன். மிக எளிதாக அடையத் தகுந்தவனுமாகிறேன்நான். (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்க மாட்டாதவனும் (அவனைப் பிரிந்து தரித்திருக்க மாட்டாதவனாய்) நானே அவனை வரிக்கிறேன். என்னை யடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும், அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும், என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். * நாயமாத்மாச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலே மேலே பத்தாவது அத்யாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகின்றது—என்பதாம்.

இந்த கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியில் [தத்வியோக மஸஹமாநஃ அஹமேவ தம் வ்ருணே*] ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்கமாட்டாதவனாய் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்றவிதுதான் பரகத ஸ்வீகார மென்பது.

[*மத்ப்ராப்த்யநுகுண-உபாஸநவிபாகம் அஹமேவ ததாமீதி அர்த்தஃ*] இந்த வாக்கியமானது ஸ்வகத ஸ்வீகாரப்பற்றுசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில் விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையால் விளைவித்துக் கொள்ளுமது ஒன்றுமில்லை என்கிற ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தம் தெரிவிக்கப்பட்டது. இந்த இடத்தில் *நாயமாத்மா ச்ருதியையும் எடுத்துக்காட்டியருளின பாஷ்யகாரர், பரகத ஸ்வீகாரத்திற்கு அதுவே பிரமாணமென்று நிரூபிக்கிற முகத்தாலே பிறருடைய அசட்டு வாதங்களை அகற்றினாராயிற்று. இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி அருளிச்செய்துள்ள திவ்ய ஸூக்திகள் தேனே பாலே கன்னலே யமுதே யத்தனை; **''உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ யமேவேதி''** என்றருளிச் செய்திருப்பது ஆழ்ந்துநோக்கத்தக்கது. பாஷ்யகார

அருளிச்செய்ததில் * நாயமாத்மாச்ருதியானது ஜீவநாடியாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இந்த ச்ருதிக்குப் பிறர் எழுதியுள்ள அபார்த்தங்களுக்கு ஈஷத்தும் இடமில்லாதபடி செய்தருளியிருக்கிறார் ஸ்வாமி தாத்பர்ய சந்த்ரிகையில். சேதநன் தலையிலே ஒன்றையும் வைத்திடாமல் “அஹமேவ தம் வ்ருணே......அஹமேவ ததாமீத்யர்த்தஃ” என்று ஒவ்வொன்றையும் எம்பெருமான் தலையிலே யாக்கி பாஷ்யகாரர் அருளிச்செய்திருப்பதை அக்காலத்தில் சிலர் அதிவாதமென்று சொல்லிக் கொண்டிருந்தார்கள் போலும். அது ஸ்வாமி திருச்செவியில் விழுந்தபடியால் அதை ஸஹித்திருக்கமாட்டாமல் “உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாம் ஆஹ—யமேவேதி” என்று ப்ராமாணிகமான அவதாரிகையை இட்டருளினார். பரகதஸ்வீகாரமென்பது உபநிஷத்ஸித்தமான அர்த்தமாகையாலே அதிவாதமென்று நெஞ்சாலும் நினைக்கத்தகாததுஎன்று தேசிகன் வெட்டொன்று துண்டிரண்டாக அருளிச்செய்தாராயிற்று.

எம்பெருமானுக்குப் பெருமையாகச் சொல்லப்படுகின்ற எதையும் அதிவாதம் அதிவாதமென்றே பிறர் ஒதுக்குகின்றவர்களாகையாலே அவர்கள் வாக்கை அவலீலையாகக் கண்டித்தொழித்தார் ஸ்வாமி. இங்கு முக்கியமாகத் தேறினது என்னவென்றால், * நாயமாத்மா ச்ருதியில் * யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* என்றது பரகத ஸ்வீகாரந் தன்னையே யென்பதை பாஷ்யகாரரும் வேதாந்தகுருவும் ஸமகண்டமாக வெளியிட்டார்களென்பதேயாம்.

இங்கு ஸாரமாகத் தெரிவிக்கவேண்டியதிவ்வளவே; * த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே * என்றும் * புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே * என்றும் நாம்பற்றுகிறோமாகக் காட்டிக்கொண்டு திருவடிகளிலே விழுந்தாலும், ‘இது நாம் பற்றின பற்றன்று; எம்பெருமான் தானே பற்றுவித்தானத்தனை; அவன் நெடுநாளாகப் பண்ணிப் போந்த க்ருஷி பலித்ததத்தனை’ என்கிற அநுஸந்தானம் ஊடுருவச் செல்லவேணுமென்பதேயாம். இவ்வநுஸந்தானம் ஹார்த்தமாகவும் ஸத்யமாகவுமிருந்தால் பரகதஸ்வீகாரமென்பதைப் பழிக்கவும் ஸ்வகதஸ்வீகாரமென்று வாய்திறக்கவும் அவகாசமேயிராது உண்மையான தேசிகபக்தர்களுக்கு. (189)

## 190. ப்ரபத்தியின் அநுபாயத்வத்தில் நிகமாந்தகுரு நிஷ்கர்ஷம்

எம்பெருமான் நிர்ஹேதுகமாக அருள்செய்கிறானென்பது கொண்டு நாம் வாளா இருக்ககில்லோம். “நிஜகர்மாதிபக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ:” என்று கீதார்த்தஸங்க்ரஹத்திலே ஆளவந்தாரருளிச் செய்தபடியே முறைவழுவாது செய்யக்கடவோம். “ஸ்ரீபகவதாஜ்ஞயா பகவத் கைங்கர்ய ரூபம்” என்று ஸங்கல்பித்துக்கொண்டு சிலபல செய்யாநின்றோம். ஸதாசார்யனை ஆச்ரயித்து த்வயோச்சாரணாநுச்சாரணத்தாலே ப்ரபத்திஸித்தியும் பெறுகிறோம். அதுதனக்கு உபாயத்வமுண்டென்று சொல்லுமவர்களை முக்கியமாகக் கண்டிப்பவர் ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுருவேயாவர். மேலே உதாஹரித்த கீதார்த்தஸங்க்ரஹச்லோக வியாக்கியானத்தில் (ரக்ஷையில்) ஸ்வாமி யருளிச் செய்வது;—

“ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்திதர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயத்வ புத்திரபி ஸ்யாத் இதி பாவ:; அந்ததஸ் தைஸ் தைராராதிதோ பகவாநேவஹி ஸர்வத்ர உபாய:” என்று.

இந்த வொரு ஸ்ரீஸூக்திபோதும் இவ்விஷயத்தில் தெளிவுபெற. * உபபத்தேச்ச *

(3-2-1) *பலமத உபபத்தே:* (3-2-37). என்கிற ப்ரஹ்மஸூத்ரங்களின் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி விபுலமாக அருளிச்செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகளின் ஸாரமாகவே மேலே உதாஹரித்த கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷாஸூக்தி அமைந்தது.

ந்யாஸதசகத்தில் "ஸ்வாமிந்! ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம். ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யஸி மாம் ஸ்வயம்" என்னும் ச்லோகத்தில் ஒன்பதின்கால் ஸ்வசப்தப்ரயோகம் செய்தருளியுள்ளார் ஸ்வாமி; இதனால் சேதனனுடைய முயற்சி நாற்றம் வேரற அறுக்கப்படுகின்றமையையறிந்தால் உபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் வாய் திறக்க வழியில்லை. ஸாத்யோபாயமென்றால் யாரால் ஸாதிக்கப்படுமுபாயம்? என்று கேள்வி வரும்; சேதநனால் ஸாதிக்கப்படுவதாகச் சொல்லியாகவேணும். இச் சொல்லை ஒன்பது வாள்கள் கொண்டு கண்டிக்கின்றதன்றோ கீழே காட்டிய ஸ்வாமியின் சுலோகம்.

ப்ரபத்தியாவது என்ன? * த்வமேவோபாய பூதோ மே பவேதி ப்ரார்த்தநா மதி:, சரணாகதி:" என்று சாஸ்த்ரம் கூறுகின்றது. எம்பெருமானையே உபாயமாக அத்யவஸிக்குமதுவே ப்ரபத்தியென்பது. இத்தகையதான ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வபுத்தியை எங்ஙனம் ஸஹிக்கும்? ப்ரபத்தி யென்கிற வஸ்து தேறும்போதே அதன் அநுபாயத்வமும் தேறியே தீரும் என்று நியாயஸித்தாஞ்ஜநத்தில் ஸ்பஷ்டமாகவருளிச் செய்கிறார். (அதில் ஜீவபரிச்சேதத்தில்) "இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வ ஹேதுத்வதியம் ருந்தே கிம்புநஸ் ஸஹகாரிணம்". என்கிற சுலோகம் ஸித்தாஞ்ஜனமேயாகும். இந்த சுலோகத்தினால் ப்ரபத்தியின் அநுபாயத்வம் தர்மிக்ராஹக ப்ரமாணஸித்தம் என்று சிலாலிகிதமாக்கினபடி. *கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா என்கிற விசேஷணம் நிரர்த்தகமன்று. சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவரான வேதாந்தகுரு சாஸ்த்ரகதிவிருத்தமாக ப்ரபத்தி உபாயமென்று நெஞ்சாலும் நினைக்கமாட்டாரன்றோ.

சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமானால் அது உபாயமாக (ஸாதனமாக) இருந்து தீரும் என்பது பொதுவானவொரு கொள்கை. உபாயமாக மாட்டாததை சாஸ்த்ரம் எதற்காக விதிக்கும்? எப்போது விதி ஏற்படுகிறதோ அப்போது விதிக்கப்படுகின்றவதின் உபாயத்வமும் கூடவே ஸித்தமாகுமாதலால் சரம ச்லோகத்தில் *மாம் ஏகம் சரணம் வ்ரஜ* என்று விதிக்கப்படுகிற ப்ரபத்திக்கு உபாயத்வம் அநிவார்யம்—என்று பிறர் நினைக்கக்கூடியதுண்டு. இதனையும் ந்யாஸ திலகமென்கிற க்ரந்தத்தில் ஸ்வாமி தாமே எடுத்துக்காட்டி ஸமாதானமும் வகுத்துள்ளார். * ஹேதுர் வைதே விமர்சே * என்கிற சுலோகம் காண்க.

" ஹேதுர் வைதே விமர்சே பஜநவதிதரத் கிம்த்வநுஷ்டாநகாலே
வேத்யஸ் த்வத்ரூபபேதோ விவித:, இஹ ஸ்தூபாயதாங்யாநபேக்ஷா ".

இதன் கருத்தாவது—ப்ரபத்தியானது விதிக்கப்பட்டிருப்பதனால் உபாயமென்று சொல்லவேண்டியிருந்தாலும் இங்கு அப்படி கொள்ளவேண்டா; ஒவ்வொரு வித்யையிலும் எம்பெருமானுக்கு ஒவ்வொரு ரூபம் அறியக்கடவதாயிருக்கிற கணக்கிலே இந்த ப்ரபத்திவித்யையில் இதராநபேக்ஷ உபாயத்வம் (பிறிதொன்றை எதிர்பாராத உபாயவம்) அறியத்தக்க ரூபமாதலால்-என்று இந்த ச்லோகத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ரஹஸ்யார்த்தமிதுவே.

இங்கு மற்ருெரு முக்கிய விஷயம். ஸித்தோபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் உபாயம் இருவகைப்படும். எம்பெருமான் ஸித்தோபாயமாஞலும் ஸாத்யோபாயமாக ஒன்றை அங்கீகரித்தே யாகவேண்டுமென்பர் பிறர்; இதற்கு மீண்டுமறிவிக்கும் ஸமாதான மாவது—ஸாத்யோபாயமென்றல் “சேதநனுடைய முயற்சியால் ஸாத்யமான உபாயம்” என்று தானே பொருளாகும். உண்மையில் இது சேதநக்ருதியாலே ஸாத்யமானதா? என்று ஆராய்ந்தால் மேலெழுந்தரீதியில் அப்படிச் சொல்லலாமாயினும் *இசைவித் தென்னை யுன்தாளிணைக் கீழிருத்துமம்மானே* என்பதுபோன்ற பல பாசுரங்களைக் கண்டால் இது நம்முடைய முயற்சியால் ஸாத்யமன்றிக்கே ஸர்வேச்வரனுடைய க்ருஷி பலமாகவே விளையுமதாக உண்மைதெரிவதால் ஸாத்யோபாயமென்கிற வ்யபதேசமும் இதற்கு ஏலாது. இவ்விஷயம் “ஸ்வீகாரந்தானும் அவனலே வந்தது; ஸ்ருஷ்டி அவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்” என்ற பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திக்குச் சார்பாக நம் நிகமாந்தகுரு *நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:* என்று ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஒன்பதாவதான உபாய விபாகாதிகாரத்தின் முகப்பில் ஸாதித்துள்ள சுலோகம் வடிக்கட்டின சாஸ்த்ரார்த்தம். இதன் பொருளை விவரிக்க வேண்டுமோ? அக்ஷரலப்யமானபொருளை யாரும் மாறுபடுத்தமுடியாதன்றே. அவனைப் பெறுதற்கு அவனே உபாயமென்னுமிடம் உபநிஷத் ஸித்தம். பக்தி ப்ரபத்திகளானவை அவன் திருவுள்ளமுகக்கைக்காகவாமத்தனை. அந்த பக்தி ப்ரபத்திகள் அமைவது மஹத்தான ஸுக்ருதபரிபாகத்தினல்தான். அந்த ஸுக்ருதந்தானும் எலியெலும்பனன சேதநனடியாக விளைவதன்று; நிகில நிர்மாண நிபுணனன பரமபுருஷன்தானே அதற்கும் மூலகாரணமானவன்—என்பது இந்த ச்லோகத்தின் பொருள். இதில் *நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:* என்கிற நான்காம்பாதமானது நிகமாந்த மஹா குருவின் ஸித்தாந்த ஸர்வஸ்வமென்று கொள்ளக் கடவது. சேதனன் தலையிலே சிறு நாற்றத்தையும் ஸஹியாதே அறவே துடைத்தொழிக்கும் வார்த்தையன்றேவிது. ... (190)

## 191. ப்ரபல ஸந்தேஹவிஜ்ஞாபநோபந்யாஸம்

சில்லரை ரஹஸ்யங்களில் ஒன்ருன ரஹஸ்ய ரத்னாவளியில்—

“ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்”

என்று ஸகல பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளை யடியொற்றி அருளிச்செய்து, இதை ரஹஸ்ய ரத்நாவளீ ஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்திலே விளக்கமாக விவரித்தருளினர். உண்மையில் விவரணபேக்ஷயே யில்லாததன்றேவிது. ஸ்வாமி இப்படி நிஸ்ஸந்தேஹ மாக வருளிச்செய்த இடங்கள் ஒன்றிரண்டல்ல. “எம்பெருமான்தான் மோக்ஷமளிப் பவன்; அதனைப் பெறுவிப்பவளாகமட்டும் பிராட்டி நிற்கின்ருள்” என்பதைப் பலபல ஸம்ஸ்க்ருத த்ராவிட ஸ்ரீஸூக்திகளால் நிலைநாட்டினவர் நம் ஸ்வாமி. ரஹஸ்யத்ரய ஸாரத்தில் த்வயத்தின் பூர்வகண்டத்தில் (ஸ்ரீமத்) என்றவிடத்தில் பிராட்டிக்கு உபலக்ஷ

ணத்வமா? விசேஷணத்வமா? என்றொரு சர்ச்சையை வளர்த்திக்கொண்டு உபலக்ஷணத்வமென்று சிலர் சொல்லுவதாகவைத்து அதைக் கண்டித்து விசேஷணத்வமே யுக்தமென்று ஸ்தாபிக்கப்படுகிறது. அங்கு—"இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தே பற்றினது விடாதொழியில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:......என்கிற தசையாம்" இத்யாதி ஸம்பாவனைகளோடே தலைக்கட்டியிருக்கிறது. இந்த ஸம்பாவனைகள் உண்மையில் யாருக்குச் சேருகின்றனவென்பதை விவேகிகள் விமர்சிக்கவேணும். இங்குப் பிராட்டிக்கு விசேஷணத்வ மில்லையென்று ஒரு பூர்வாசார்யரும் உரைத்ததில்லை. மூமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தில் "இப்போதிவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள்—"(புருஷகாரமாக) என்கையாலே உபாயவஸ்து விசேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு இவளுக்கும் உபாயத்வத்தில் அந்வயம் சொல்லும் பக்ஷம் நிரஸ்தம்" என்றருளிச் செய்திருக்குமிடத்து பிராட்டிக்கு விசேஷணத்வத்தைக் கண்டோக்தியாகவே அருளிச்செய்திருப்பது காணலாம். இங்கு உபலக்ஷணத்வம் கொண்டாலும் விசேஷணத்வம் கொண்டாலும் வாசி சிறிதுமில்லையென்பதை சாஸ்த்ரமர்மஜ்ஞர்கள் உணருவர்கள். இதை நம்முடைய பல நூல்களில் விசதீகரித்திருக்கிறோம். ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு சாஸ்த்ரஜ்ஞர்கள் யாரும் வியாக்கியானமெழுதவில்லை. நவீனகாலத்தில் சிறந்த சாஸ்த்ரஜ்ஞரான ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகியசிங்கர் எழுதி வெளியிட்டுள்ள வியாக்கியானத்தில் உண்மை வெளிவந்துள்ளது. அந்த இஞ்சிமேட்டு ஸ்வாமி அடியேனுடைய க்ரந்தங்களைப் பூர்வாச்ரமத்திலும் உத்தராச்ரமத்திலும் பூர்த்தியாகக் கடாக்ஷித்தவராகையாலே நல்ல தெளிவுடன் எழுதியிருப்பதைக் காணீர் கேளீர். அந்த ஸ்வாமியின் பதிப்பில் இரண்டாவது ஸம்புடத்தில் (பக்கம் 29ல்) விசேஷணத்வ உபலக்ஷணத்வங்கள் ஜந்மாத்யதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் விவரிக்கப்பட்டிருப்பதாக எடுத்துக் காட்டிவிட்டு அதற்குமேல்

"இந்த உபலக்ஷணத்வத்தை ப்ரக்ருதத்தில் பிராட்டி விஷயத்திலே ஏகதேசிகளும் சொல்லுகிறார்களில்லை, சொல்லவும் முடியாது" என்றெழுதியுள்ளார்.

அடியேனுடைய நிருபணங்கள் அசைக்கமுடியாதவையாதலால் இப்படி யெழுதித் தீரவேண்டியதாயிற்று அவர்க்கு. ஆனாலும் தாம் வியாக்கியானம்செய்ய இழிந்தவராகையாலே மூலத்தைத் தாமே கண்டித்துவிட்டால் நன்றாயிராதே. ஒருவாறு பொருந்தவிடவேணுமென்று மிகவும் சிரமப்படுகிறார். உபலக்ஷணத்வ விசேஷணத்வங்களை இப்படிச் சொல்லலாமென்று ஒருவழியில் நுழைகிறார். எந்த வழியில் நுழைந்தாலும் "உய்யும் வகையில்லை தொண்டீர்" என்று நம்மாழ்வார் அருளிச்செய்தபடியல்லது வேறுண்டோ? நாம் கீழே உதாஹரித்த மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி *அல்பாக்ஷரமஸந்திக்தம் ஸாரவத்* என்றுப்போலன்றோ வுள்ளது. நீதிமன்றங்களில் பலபேர்கள் ஜட்ஜ் ஸ்தானம் வஹிப்பதுண்டே; "இவர் எழுதிவைத்த ஜட்ஜ்மெண்டு எங்குப் போனாலும் மாறாது" என்னும்படியான ஏற்றம் எல்லா ஜட்ஜ்களுக்கும் கிடைத்துவிடுமா? அப்படிப்பட்ட பாக்யசாலி யாரோ வொருவரன்றோ. அதுபோல மணவாளமாமுனிகள் ஸாதித்த நிஷ்கர்ஷமென்றால் "பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே" என்று எம் ஆண்டாளருளிச்செய்தபடியன்றோ விருப்பது. பிறர் வளவளவென்று எத்தனைபக்கம் எழுதிவைத்தாலும் விசதவாக் சிகாமணிகள் எழுதும் ஒருவரியின்கீழே அத்தனையும் வழவழவென்றாகுமென்பது அபிமானத்தால் சொல்லுவதன்றே. இதில் தோஷம் சொல்ல

நினைப்பவர்கள் "ஸித்தஸாதநம் தோஷ:" என்னலாமத்தனை போக்கி வேறென்றும் சொல்லப்போகாது. இது நிற்க.

"த்ருட பூர்வச்ருதோ மூர்க்க:......என்கிற தசையாம்" என்றவிடத்தில்—"இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச்செய்தே பற்றினது விடா தொழியில்" என்றிருக்கிறதல்லவா; இதில் இரண்டு ஸந்தேஹங்கள். (1) மத்யஸ்த த்ருஷ்டியாலே பிராமாணிகார்த்தங்கள் தோற்றியிருப்பதாகச் சொல்லப்படுகிற அர்த்தங்கள் எவை? (2) பற்றினது விடாமல் பிறர் பிடிவாதமாகச் சொல்லும் அர்த்தம் எது? ஆக இவ்விரண்டு கேள்விக்கும் விடை வெளிவருமா? இந்த யுகத்தில் வெளிவராதென்று நாம் சபதம் செய்திருக்கிறோம். "இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே" என்பதற்குக்கீழ் "வேரி மாறாத பூமேலிருப்பாள்—நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு—உன்திரு—திருவுக்குந் திரு—தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" இத்யாதிகளான ஆழ்வார் பாசுரங்களும் *ச்ரேயோ நஹ்யரவிந்த......சேஷசேஷாச நாதி......ஸ்வஸ்தி ஸ்ரீர் திசதாத்.....ஐச்வர்யமக்ஷரகதிம்* இத்யாதி ஆசார்ய ஸூக்திகளும், *லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேச:......ப்ரபத்யேத் நியத: ச்ரியம்......அலமேஷா பரித்ராதும்... ஆத்மவித்யா ச தேவி! த்வம்......இத்யாதிகளான பாஞ்சராத்ர புராணேதிஹாஸ ச்லோகங்களும் அடுக்கப்பட்டிருக்கின்றன. "இவள் புருஷகாரமாய்க்கொண்டு தஞ்சமாகிறாள்" இத்யாதிகளைத் தாமே யருளிச்செய்தபோது இந்தப் பிரமாணங்களெல்லாம் எங்கே புக்கொளித்தனவோ? "வேரிமாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே" என்று ஆழ்வார் ஸாதிக்கவில்லையென்று யார் சொன்னது? *ப்ரபத்யேத் நியத: ச்ரியம்* என்றதனாலே என்ன லாபம் கிடைத்துவிட்டதோ? எம்பெருமானாருடைய சரணாகதிகத்யத்தில் முந்துற முன்னம் "அசரண்ய சரண்யாம் அநந்யசரணச் சரணமஹம் ப்ரபத்யே" என்று அநுஷ்டானவாக்யமேயிருக்க இதைவிட்டு விதிவாக்யத்தைப் பிடித்துக்கொண்டதென்னே? தாம் போகிற வழிக்கு மிகவநுகூலமான இந்த சரணாகதிகத்ய ஸ்ரீஸூக்தியைவிட்டு "சேஷசேஷாசந" இத்யாதி ஸ்ரீஸூக்தியில் என்ன விசேஷமுள்ளதென்று அதை யுதாஹரித்தனரோ? இதெல்லாம் தேசிகவாக்யங்களன்று என்று மஹர்ஷி வாஸுதேவாசாரியர் ஸ்வாமி நிருபித்து முடித்திருக்கிறாரே அதுதான் உண்மையா?

"ஸ்ரீஸூக்த பாஷ்யத்திலே பெரிய ஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார்" என்றுள்ளது. என்ன அர்த்தம் அபேக்ஷிதமோ? அதை எப்படி உபபாதித்தாரோ? இஞ்சிமேட்டழகியசிங்கர் பெரிய வித்வான்; வியாக்கியானம் பண்ண இழிந்த அவராவது விவரிக்கவேண்டாமா? நஞ்சீயர் ஸாதித்த ஸ்ரீஸூக்த பாஷ்யமென்று ஒன்று அச்சில் வந்திருக்கிறதே, அதை அந்த ஸ்வாமி கடாக்ஷியாதவரல்லரே. அதில் உபபாதித்த அபேக்ஷிதார்த்தங்களில் சிலவற்றையாவது எடுத்துக் காட்டக்கூடாதா? பெரியஜீயரும் என்பதற்கு "நாராயணமுனி யென்கிற நஞ்சீயரும்" என்று பொருளுரைத்தார்; இதுதான் இங்கு அவசியமான விவரணம் போலும். அந்த நஞ்சீயர் என்ன உபபாதித்தாரென்பதை அடியோடு காட்டாமல் தாம் ஒரு அபூர்வமான ப்ரமாணம் காட்டுகிறார். அது என்னவென்னில்; "இங்கு *ஸ்வயம் வஸ்தூகுர்வந்......பத்மாயாஸ் தவச சரணௌ நச் சரணயந்* என்று பட்டர் ஸ்ரீலக்ஷ்மீ கல்யாணத்தில் நம்மாழ்வார் பாசுரத்திற்கு அர்த்தமாக அருளிச்செய்த ஸ்தோத்ரத்தின் ச்லோகாதிகளும் அநுஸந்தேயங்கள். இதில் பெருமாளுடையவும் பிராட்டியினுடையவும் திருவடிகளுக்கு உபாயத்வம் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டதிறே." என்றெழுதியுள்ளார் இஞ்சிமேட்டழகியசிங்கர். பிராட்டியை மட்டும் தனியே விளித்து உமது திருவடிகளை சரணமாகப் பற்றுகிறேன் என்று இட்ட சுலோகங்கள் பதினாயிரக்கணக்காக இல்லையா? சரணாகதிகத்ய சூர்ணையில் "சரணமஹம் ப்ரபத்யே" என்றிருப்பது ஒன்று போராதா உங்களுக்கு? ஸுப்ரஸித்தமானதை விட்டு அப்ரஸித்தமான தொன்றைத் தேடிப்பிடித்து ப்ரஸங்கிப்பது என்னே? காட்டுகிற

சுலோகங்கள்கிடக்க. "சரணம் ப்ரபத்யே" என்னப்பெறுகிற வ்யக்திகளுக்கெல்லாம் மோக்ஷப்ரதத்வம் வந்துவிட்டதாக எண்ணமோ? அவரவர்கள் தம் தம் ஆசாரியர்களுக்குச் செய்துகொள்ளும் தனியன்களுள் 'சரணம் ப்ரபத்யே' இல்லாத தனியன் தேடிப்பிடிக்க வேண்டியதாகவன்றே விருக்கும். இவர்களெல்லோரும் மோக்ஷப்ரதர்களாகும்போது பிராட்டிதானு மோக்ஷப்ரதையாக ஆகக்கூடாது?

இராமாநுச நூற்றந்தாதியில் "ஞானங்கனிந்த நலங்கொண்டு" என்கிற பாசுரத்தில் எம்பெருமானுடைய மோக்ஷப்ரதத்வத்தில் குறை கூறி எம்பெருமானுருடைய மோக்ஷப்ரதத்வத்தில் வெகு அதிசயம் விளக்கப்பட்டிருக்கிறது. ஸூஸ்பஷ்டமாக விளக்கப்பட்டிருக்கிறது. அதை யாராவது ஆக்ஷேபிப்பாருண்டோ? பிராட்டி மோக்ஷ மளிக்கிறுளென்றுல் இதில் என்ன ஆக்ஷேபமுண்டாம்? இதற்கொரு பாரதம் வேணுமா? மோக்ஷப்ரதாநத்திற்கு பிராட்டி புருஷகாரக்ருத்யம் செய்வதுண்டா இல்லையா? என்பது ஒரே கேள்வி. இல்லையென்று வாய்திறக்க முடியாது. அவள்தானே கொடுக்க சக்தையா யிருந்தால் கொடுக்கத் தடையென்ன? தண்டதரனிடத்தில் மன்றுடி நிற்பது எதற்காக? இவ்வொரு சிறு விஷயத்தை ஆராய்ந்து ஸந்தேஹ பரிஹாரம் செய்தருளவேணும். (191)

## 192. உபாயாநுஷ்டான விஷயகோபந்யாஸம்

இதையும் முன்னுபந்யாஸம் போலே பிரபல ஸந்தேஹ விஜ்ஞாபனமாகவே கொள்க. கீழே யுதாஹரித்த நிகமாந்த மஹாகுருவின் நிதியான ஸூக்திகளில் உபாயமென்று வாயாற்பேசுவதும் நெஞ்சால் நினைப்பதுங்கூட விருத்தமென்று முடிக்கப்பட்டுள்ளது. *த்வய்யேகஸ்மிந்நபி விஜஹதோ முக்தவத் ஸாதநத்வம்* என்றருளிய ஸ்வாமி எம்பெருமானைக்கூட உபாயமென்ன ஸஹியாதவராயிருக்க, இவரடியார்கள் வாக்கிலும் செய்கையிலும் உபாயாநுஷ்டானம் வீறுபெற்றிருப்பது நியாயமா?

பஞ்ச ஸம்ஸ்காரங்களுள் நான்காவதான மந்த்ரஸம்ஸ்காரத்தில் த்வயமென்கிற மந்த்ரரத்நமே மிகச் சிறந்தது. ஸமாச்ரிதனுன சிஷ்யனை அந்த மந்த்ரரத்நமே க்ருதக்ருத்யனுக்குகின்றதாகவும், இதனுலேயே ஸமாச்ரண நிஷ்பத்தி யென்றும் ஸ்வாமி திருவுள்ளம் பற்றி இதுதன்னை ஸ்ரீரஹஸ்யத்ரய ஸார—க்ருதக்ருத்யாதிகாரத்தில்—

> "அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப் போந்த நமக்கு அவஸரப்ரதிக்ஷையான பகவத் க்ருபையடியாக வுண்டான ஸதாசார்ய கடாக்ஷவிஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணுநுச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹஹேதுக் களை யெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல ஸர்வ சேஷியான ச்ரிய: பதி தன்பேருகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனுயிருவென்கை. இது *மாசுச:* என்கிற சரண்ய வாக்கியத்திலும் தீர்ந்த பொருள்."

என்றுள்ள வாக்கியங்களால் நிஸ்ஸந்தேஹவிபர்யயமாக விசதீகரித்தார். மேலே உதாஹரித்த வாக்கிய ராசியில் "த்வயோச்சாரணுநுச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம் பிறந்த பின்பு" என்றும் "சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் ஸாரமானவை. மந்த்ரஸம்ஸ்கார ஸமயத்தில் த்வய மென்னும் மந்த்ரத்தை ஆசார்யன் சொல்ல அதை சிஷ்யன் பின்சொல்லுவதுண்டே இதுதான் பரபத்த்யநுஷ்டானமென்று சொன்னதோடு நில்லாமல் இதற்குமேல் வேறென்று கிடையாதென்றும் ஸூவ்யக்தமாக அருளிச் செய்தார். இங்ஙனே தமிழில் அருளிச்செய்ததை சரணுகதிகத்ய பாஷ்யத்தின் முடிவில் ஸம்ஸ்க்ருதத்திலுமருளிச் செய்துள்ளனர்.

வித்வன் மணியான இஞ்சிமேட்டழகியசிங்கர் இங்கு வியாக்கியானம் செய்தருளியிருப்பது எங்ஙனேயென்னில்; "அடியாக - மூலமாக. உண்டான - ஐந்யமான. ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு - ப்ரபத்த்யநுஷ்டான முண்டான பிறகு."=இதுவேதான் எங்கும் வியாக்கியான பத்ததி. இதில், உண்டான என்பதற்கு (ஐந்யமான) என்று பொருள் விவரித்தது அபூர்வம். *குரௌவாதி ஹம்ஸாம்புதா சார்ய சிஷ்யோபந்யாஸத்தை இவ்வளவோடு நிறுத்திக்கொண்டேன். ... (192)

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# 193. மார்கழி ஸுதர்சன மாஹாத்ம்யோபந்யாஸம்

(13—1—1966 போகியன்று அச்சிட்டது.)

அடியேனெழுதிவரும் உபந்யாஸசதத்வயத்தில் சேஷித்துள்ள எட்டு உபந்யாஸங்களை ஸுதர்சனப்ரபாவ ப்ரபஞ்சனமாகவே யெழுதித் தலைக்கட்டும் படி பகவத்பாகவத நியமனம் பெற்றேன். ஸுதர்சனமென்பது ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம். அதன் அளவு கடந்த மாஹாத்மியங்களைப் பேசவுமெழுதவும் பாக்கியம் பெற்றேன். நேற்று மார்கழிமாதவெளியீடான (நெ. 217 உள்ள) ஸுதர்சனத்தில் "நாலூரானும் நல்வீடுபெறுக" என்ற மகுடத்தின்கீழ் வெளிவந்திருக்கும் நான்கு பக்கங்களிற் காணும் திவ்ய ஸ்ரீஸூக்திகளை ஆராவமுதமாகப் பருகி ஆனந்தித்து, அவ்வானந்த பரீவாஹமாகவே இதனை எழுதுகின்றேன். திரிகடுக நூலை இளமையிற் பாடஞ்செய்தேன். அதில் "வைததனை இன்சொல்லாக் கொள்வானும், நெய்பெய்த சோறென்று கூழை மதிப்பானும், கைத்ததனைக் கட்டிபென்றுண்பானும் இம்மூவர், மெய்ப்பொருள் கண்டு வாழ்வார்" என்னும் பாவை இன்சுவை மிக்க தீங்கனியாகக் கொண்டவனடியேன். இன்சொற்களை இனிமையாகக் கொள்வதில் அதிசயமில்லையே. * மனக்குற்றமாந்தர் பழிக்கில் புகழ் * என்றுஅமுதனாரும். *மற்றோர்கள் மாச்சரியத்தாலிகழில் வந்ததென் னெஞ்சே!, இகழ்கை யாச்சரியமோதானவர்க்கு* என்று மணவாளமாமுனிகளுமருளிச் செய்தவற்றை நிச்சலும் சிந்தை செய்வார்க்கு மனோவிகாரம் சிறிதுமுண்டாக விரகில்லை. அவ்வளவேயன்று. (ப்ரத்யுத) விலக்ஷண ஹ்ருதயோல்லாஸவிகாஸமுமுண்டாம். "ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா?" என்னும் மகுடத்துடன் 25—11—65ல் வெளிவந்த ஸுதர்சன இலவச வெளியீட்டையும்; அதன் பிறகு அதற்கு பதிலுரையாக வெளிவந்த ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன விமர்சனத்தையும், ப்ரக்ருதமான மார்கழி ஸுதர்சனத்தையும் வாசித்திருப்பவர்களுக்கே இவ்வுபந்யாஸமும் இதைத் தொடர்ந்துவரும் இருநூறுமுபந்யாஸமளவான மேலுள்ள வுபந்யாஸங்களும் ருசிக்கும், ரஸிக்கும். ஆனால் இம்மூன்றையும் பாராதவர்கள் பலர் இருக்கக் கூடும். ஐயமில்லை. அன்னவர்களும் நமது இவ்வுபந்யாஸங்களால் ஸகலவுண்மைகளையும் நன்கறியப் பெறுவார்களென்பது நமது திடநம்பிக்கை. உபந்யாஸகர்கள் பூர்வகதாப்ரஸங்கமென்று சுருங்கப்ரஸங்கிப்பதுண்டே; அம்முறையில் சுருக்கமாக முன்வரலாறு மொழிவோம்.

ஆனந்தவிகடன் 1965ஆு தீபாவளிமலரில் பாலதாசனென்பவரெழுதிய வைஷ்ணவமென்னுங் கட்டுரையொன்று வெளியிடப்பட்டிருப்பதாகவும், அதில் வைணவத்தை மிகவும் தாழ்த்தியும் இழித்தும் [வெகு நிந்தையாக] எழுதியிருப்பதாகவுங் காட்டி ஸுதர்சனம் 'ஆதிசங்கரர் ஷண்மதஸ்தாபகரா' என்னும் கட்டுரையை வெளியிட்டிருப்பதாகவும், இது அஸ்தாநே ஸம்ப்ரமமென்று 'ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனவிமர்சனம்' வெளிவந்திருப்பதாகவும், அதன்மேல் ஆராய்ச்சியாக மார்கழி ஸுதர்சனத்தில் 'நாலூரானும் நல்வீடு பெறுக' என்னுங் கட்டுரை

வெளிவந்திருப்பதாகவும் வாசகர்கள் தெரிந்துகொள்ளக் கடவர்கள். இப்போது அடியேனெழுதத்தொடங்கும் மார்கழி சுதர்சன மாஹாத்ம்யோபந்யாஸமும் இதைத் தொடர்ந்துவரும் ஏழெட்டு உபந்யாஸங்களும்—மிகவும் அநவஸரமாகத் தோன்றிய இந்த சர்ச்சையிலிருந்து பலபல வுண்மைகளை உலகம் தெரிந்து கொள்ளச் செய்வன.

முன்னம் முக்கியமான விஜ்ஞாபனமொன்று. ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன விமர்சனமென்கிற [பதினாறு பக்கங்கொண்ட] சிறு நூல் "வித்வான் A. G. ஸ்ரீநிவாஸன். 145, பெரியதெரு கும்பகோணம்" என்கிற விலாஸங்கொண்டு வெளிவந்துள்ளது. இவர் யாரென்றால், கும்பகோணத்தில் நெடுநாள் ஆர்யதர்மமென்னும் வாரப்பத்திரிகையை நடத்திவந்த ஸ்ரீமத். அக்னிஹோத்ரம் கோபால தேசிகாசார்யஸ்வாமியின் திருக்குமாரர். இப்போது அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாதாசார்யரென்று ப்ரஸித்தவாக்மியாயுள்ளவருடைய ஸாக்ஷாத் பித்ருவ்யபுத்ரர், மார்கழி ஸுதர்சனம் நிர்ணயிப்பதென்னென்னில்; ஸ்ரீராமாநுஜன் பத்ரிகையை அச்சிடும் எழுத்துக்களைக்கொண்டே இது அச்சிடப்பட்டிருப்பதாலும் நூலின் நடையிலிருந்தும் ஸ்ரீராமாநுஜன் ஆசிரியரே எழுதி யச்சிட்டவர் என்று நிஸ்ஸந்தேஹமாக விளங்குகிறதென்று. இதில் நூலின் நடையைக் கொண்டு நிர்ணயிப்பதாகத் தெரிவிப்பதுண்டே இஃதொன்றுதான் மார்கழி ஸுதர்சனத்தில் மாட்சிமை தங்கிய விஷயம். ஸுதர்சனத்தின்மீது வஜ்ரபாதங்களும் அசநிஸந்நிபாதங்களும் பலதிசைகளிலிருந்தும் நெடுநாளாகவே *தாழாதே சார்ங்க முதைத்த சரமழை கணக்கிலே விழுந்துகொண்டிருக்கின்றன. ஸ்ரீ உ. வே. ராவ்ஸாஹிப் S. ராகவையங்கார் ஸ்வாமிபோன்ற லௌகிக வித்வான்களும், ஸ்ரீ உ. வே. திருக்கண்ணபுரம் பண்டிதரத்னம் ஸ்வாமிபோன்ற வைதிக வித்வான்களுமான பல பெரியார் எழுதி வெளியிட்டிருக்கும் நூல்களையெல்லாம் வியாஸங்களையெல்லாம் அடியேனுடைய க்ருதிகளாகவே ஸுதர்சனம் நிர்த்தாரணம் செய்து வருகின்றது நெடுநாளாகவே. மேலுபந்யாஸம் காண்க. .... (193)

## 194. யதிக்ஷமாப்ருத்த்ருஷ்டம்மதமிஹோபந்யாஸம்.

அத்வைதமதந்தான் அநாதியென்றும், பகவத்ராமாநுஜ தர்சனம் நவீனமென்றும் ஒருவாதம் 600, 700 வருடங்களுக்குமுன்னமே தோன்றிற்று. அது ஸ்ரீமத் வேங்கட நாதார்யர் திருச்செவியில் விழுந்தது இதைப்பற்றி இரண்டு வகையான ஸமாதானங்களைத் திருவுள்ளம்பற்றினாரவர். யதிராஜ ஸப்ததியில் "யதிக்ஷமாப்ருத் த்ருஷ்டம் மதமிஹ நவீநம் ததபி கிம் ?" என்கிற சுலோகத்தில் அவ்விருவகை ஸமாதானங்களையும் பொறித்துவைத்தார். பகவத்ராமாநுஜ தர்சனம் மிகப் புராதனமென்பதை உத்தரார்த்தத்தினால் த்விதீயபக்ஷமாக வெளியிட்டு, பூர்வார்த்தத்தினால் ராமாநுஜமதம் நவீனந்தானென்று இசைந்துகொள்ளுகிறார். 'யதிக்ஷமாப்ருத் ஸ்ருஷ்டம் மதம்' என்கிற பிறருடைய வார்த்தையை ஸ்வவாசா

அநுவதிக்க ஸஹியாமல் 'யதிக்ஷமாப்ருத் த்ருஷ்டம் மதம்' என்று ஸாதித்தார். இது நவீனமென்கிற பரோக்தியை இசைந்துகொண்டதானது சாஸ்த்ரஜ்ஞர் களால் அப்யுபகம்யவாத மெனப்படும். இந்தரீதியில் ஸுதர்சனத்தின் நிர்த்தா ரணத்தை அடியேனும் இசைந்துகொள்ளுகின்றேன். வாதவிவாதங்களில் வெளி வந்த விஷயங்களுக்கு மறுப்பெழுத லேகினியைக் கையிலெடுக்க முடியாமலும் மறுவாய் திறக்கமுடியாமலுமிருந்தால் "இது அண்ணங்கராசாரியர்தானெழுதி யது" என்று உலகம் முழுவதும் நிர்த்தாரணம் செய்துவிடுவது வழக்கமென்று கீர்த்தி மூர்த்திகளான இஞ்சிமேட்டழகிய சிங்கரும் திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமியும் பலகால் அடியேனிடமே ஸாதித்ததுண்டு. இங் ஙனே ஸாதிப்பவர்கள் இக்காலத்திலும் பல பெரியோர்களுள்ளார்கள். ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை திருப்பதி (வர்த்தமாந) பெரிய ஜீயர் ஸ்வாமி "*க்ருஷ்ண த்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும், கோஹ்யந்யோ புவி மைத்ரேய! மஹாபாரதக்ருத் பவேத் * என்றூப்போலவும், திருமடலில் * வயிறடித்திங்காரார் புகுதுவார் ஐயரிவரல்லால்* என்றூப்போலவும் ஸ்வாமிதவிர வேறு யாரால் இப்படி துர்வாதிகளை வாய்மூடச் செய்யமுடியும்? முடியவே முடியாது" என்று பலரும் சொல்லுவது ஸத்யமேயென்று பலரிடமும் ஸாதித்துக் கொண்டிருக்கிறார்.

விஷய விசாரம் விளைந்தால் பதில்சொல்லியு மெழுதியும் தீரவேண்டிய விஷயங்களுக்கு ஹ்ருதயங்கமமான விடைகளை வெளியிடுவதன்றோ வாதத்தி லிறங்கினவர்களுக்குக் கர்த்தவ்யம். அதில் அணுவளவும் பிரவேசியாமலும் பிரவேசிக்க முடியாமலும் "இதை இன்னாரெழுதினரென்பது நிஸ்ஸந்தேஹம்" என்றெழுதி முடித்திட்டால் என்ன அர்த்தம்? "இதைப் பொருள்படுத்தி பதி லுரைக்கத் தகுதியில்லை" என்றும் எழுதுகிறது ஸுதர்சனம். அப்படியானால் அதைப் பார்த்ததாகவே காட்டிக்கொள்ளாமல் வாளாவிருந்துவிடுவதன்றோ கௌரவம். 'ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன விமர்சனத்தை ஸ்ரீராமாநுஜன் ஆசிரியரே எழுதி வெளியிட்டாரென்பது ஐயமற விளங்குகின்றது" என்றிவ்வளவோடே மார்கழி ஸுதர்சனம் முடித்திருப்பதனால் என்ன தேறுகின்றது தெரியுமோ? ஸ்ரீராமாயணே (2-2-37.) *யதா வ்ரஜதி ஸங்க்ராமம்.......நாவிஜித்ய நிவர்த்ததே* என்றாற்போன்ற புகழ்வாய்ந்தவர் எழுதினதாதலால் ப்ரத்யாக்கியான ப்ரஸக்தியே கிடையாது—என்று தெரிவித்துக் கையொழிந்ததாகத் தேறுமத்தனை.

'யாரோவொருவர் எழுதினதாக நினைக்கவேண்டாம்; பிரதிவாதிபயங்கரரே தான் எழுதினது' என்பதை உலகமறிய வெளியிடவேண்டியதே என்பணி; அதை வெளியிட்டாயிற்று; இதனால்வெற்றிபெற்றாயிற்று—என்று குமுறும் ஸுதர்சனம். உண்மையில் பிறர் எழுதியிருந்தாலுங்கூட 'விஷயம் அபேத்யம்' என்பது கண்டு *பல்லாயிரவரிவ்வூரில் பிள்ளைகள் தீமைகள் செய்வார், எல்லா முன்மேலன்றிப் போகாது எம்பிரான்! நீ யிங்கேவாராய் * என்று, ஸாதுவான மகனைப்பெற்ற யசோதை சொல்லுகிறாளே அப்படியே சொல்லக் காத்திருக்கின்றது உலகம். ஐங்குறுநூறு என்னுஞ் சிறந்த சங்கத் தமிழ் நூலில் புனலாடலைப்பற்றிச் சொல்லு மிடத்து "மறைத்தலொல்லுமோ மகிழ்ந, புலத்தலொல்லுமோ ஞாயிற்ற

தொளியே'' என்றுள்ளதை நினைவூட்டுகிறேன். 'ஞாயிற்றதொளி புலத்தலொல்லுமோ?'=ஸூர்யப்ரபையை மறைக்கலாகுமோ? என்கிற இதுவும் * ந ஹி கஸ்தூரிகா மோதச் சபதேந நிவார்யதே * என்கிற வடமொழிப்பத்யமும் நன்கு ஸமந்விதமாகுமிடமிதுவே. [இவ்வுபந்யாஸம் இப்போது ஸசேஷம்; மேலே நிச்சேஷமாகும்.] ... ... .... .... (194)

## 195. யத்யபி நகாபி ஹாநிருபந்யாஸம்.

மார்கழி ஸுதர்சனத்தை முதலே பிடித்து ஆராய்வோம். "நாலூரானும் நல்வீடுபெறுக" என்கிற சீர்ஷிகைக்கு, மேலே தனியுபந்யாஸம்வரும். "எம்பெருமானார் காலத்திலே ஒரு சோழராஜன் இருந்தான்" என்று தொடங்கி ஒரு அவ்யபதேச்யனுடைய கொடுஞ்செய்கைகளைக் கூறி "இன்றும் இத்தகையவர் ஒருவர் இருக்கிறார்" என்று தொடங்கி, உலகம்போற்ற நின்ற ஒரு மஹாபுருஷரை (ஸுதர்சனம்) தான் பயின்ற அத்புத திவ்யஸூக்தி மலர்களாலே அர்ச்சித்திருப்பதை உலகம் கண்டிருக்கிறது. திருவாய்மொழியில் (7-5-3) *கேட்பார்செவி சுடு கீழ்மைவசவுகளே வையும் சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன்* என்ற விடத்து 'கேட்பார்' என்பதற்கு நம்பிள்ளையருளிச்செய்யும் இன்சுவைப் பொருளுக்கு இங்குத் தான் விஷயமுள்ளது.

புண்டிதராஜனென்னும் மஹாகவியின் ஸுபாஷித மொன்று,

"யத்யபி ந காபி ஹாநி: பரகீயாம் சரதி ராஸபே த்ராக்ஷாம்.
அநுசிதமிதமிதி மத்வா ஹாஹா ஹாஹேதி தூயதே சேத:" என்று.

இதைச் சிறிது விவரிக்கிறேன். காசியிலிருந்து ராமேச்வரத்திற்குப் பாதசாரமாகப் போய்க்கொண்டிருக்கிறானொருவன். போம்வழியில் ஒரு திராக்ஷைத்தோட்டம். அதில் திராக்ஷைப்பழங்கள் அபரிமிதமாகப் பழுத்துத் தொங்குகின்றன. அந்தத் தோட்டம் இந்த யாத்திரிகனுடையதுமன்று, இவனுக்கு நண்பனான வொருவனுடையதுமன்று. அத்தோட்டத்தின் காவல் காரன் அந்யபரனாயிருந்த காலத்தில் ஒரு கழுதை உள்ளே நுழைந்து திராக்ஷைப்பழங்களை யதேஷ்டமாக மேய்ந்துகொண்டிருக்கின்றது. அதை இந்த யாத்ரிகன் பார்த்து ஸஹியாதவனாய்க் கல்லையெடுத்து வீசியும் தடியையெடுத்து ஓச்சியும் அக்கழுதையை வெருட்டிக்கொண்டிருக்கிறான். இதைக் கண்ட வேறொரு வழிப்போக்கன் 'அப்பா! திராக்ஷைத் தோட்டம் உன்னுடையதன்றே; கழுதைமேய்ந்ததனால் உனக்கொன்றும் நஷ்டமில்லையே; நீ ஏதுக்கு வீணாகக் கழுதையை வெருட்டுகிறாய்? நஷ்டமடைபவன் செய்யவேண்டிய வேலையில் நீ ஏதுக்கு ச்ரமம் கொள்ளுகிறாய்?' என்று அந்த யாத்ரிகனை க்ஷேபித்தான். அதற்கு அவன் பதில் சொல்லுகிற சுலோகமிது. அண்ணே! எவனோ வொருவனுடைய திராக்ஷையைக் கழுதை மேய்ந்ததனால் எனக்கு யாதொரு நஷ்டமுமில்லை யென்பது உண்மையே. கழுதையோ திராக்ஷை

யின் இனிமையை யறியாதது. எதையோ மேய்ந்து வயிறு வளர்க்கவேண்டிய கழுதை இன்று நமக்கு திராக்ஷை கிடைத்துவிட்ட' தென்று மகிழ்ச்சியோடு மேய்கின்றதன்று, இப்பழத்தை மகிழ்ச்சியோடு புஜிக்கக் கூடிய வொரு மனிதன் பறித்து உண்டானுகில் அவனை நான் வெருட்ட நினைக்கவும் போகிறதில்லை; நல்லதுதீயதின் வாசியறியாததொரு கழுதை தமட்டங்காய்போன்றவற்றை மேய்ந்தால் அதனுல் எனக்கு உத்வேகமுண்டாகாது, ரஸிகன் புஜிக்கவேண்டிய இதனை ஒரு கழுதை மேய்கிறதென்ருல் இது மிகவும் அநுசிதமான செய்கை யல்லவா? இதைக்கண்டு நான் எப்படி ஸஹித்திருக்கமுடியும்? ஹாஹாகாரம் செய்யாமலிருக்கமுடியுமா? என்ருன். அவனும் இந்த வார்த்தையைக் கேட்டு ரஸித்தான். இந்த அந்யாபதேசத்திற்குப் பொருத்தமான ஸ்வாபதேசார்த்தம் விவேகிகளால் உய்த்துணரத்தக்கது தன்னுடைய நிலைமைக்குத் தகாத அநுசிதமான காரியத்தை ஒருவன் செய்தால் அதை க்ஷேபிக்க இன்னுரினையா ரென்னும் வாசியின்றிக்கே அனைவர்க்கும் உரிமையுண்டு என்பதையுணர்த்தவே இந்த சுலோகம் தோன்றியது.

ஸ்ரீவில்லிபுத்தூர் அலங்காரபட்டாசாரியர் என்று ப்ரஸித்தரான மஹான் இங்கு ப்ரஸ்தாவிக்கப்படுகிருர். சென்னையில் ஸமீபத்தில் நடந்த ஆகமஸதஸ்ஸில் இப்பெரியார் அந்வயித்து ஏதோ பேசினராம். இப்போது [மார்கழி ஸுதர்சனத்தால்] வாசாமகோசரமாக ஸம்பாவிக்கப் படுகிறமஹாபுருஷர் காசுகொடுத்து ஸ்வாநுகூலமாகப் பேசவைத்தாராம். இது மிகவும் அபாண்டம். அந்த மஹாபுருஷர் இத்தகைய ஸதஸ்ஸுக்களுக்குப் பெரும்பாலும் தாம் விஜயம் செய்வதுமில்லை. ஸதஸ்ஸுக்காக வருபவர்களுக்கு அனேகமாகத் தாம் காட்சி கொடுப்பதுமில்லை. 'வியாதி வேறு மருந்து வேறு' என்ற கதையாய் அஸ்தானே லேகினியைச்செலுத்துவது அநீதி.

இப்போது அகாண்டே ஸம்பாவிக்கப்படுகிறவராகக் குறிக்கப் பெற்ற மஹாபுருஷருடைய கட்டளையாக இன்று நேற்று வெளிவந்த ஹிண்டு பத்ரிகையில் கீழ்க்கண்ட வியாஸம் வெளிவந்துள்ளது. ஆங்கிலத்திலுள்ளதை அப்படியே உதாஹரித்துக் காட்டி, பிறகு அதற்குத் தமிழ்மொழி பெயர்ப்புத்தருகிறேன்;

## OBSERVANCE OF SANKRANTI.

His Holiness Sri Sankaracharya of Kanchi has urged every Hindu famimy to take a vow to chant 108 times the name of Sri Narayana, after the daily morning bath, commencing from the day following the ensuing Sankranti, throughout one's life-time. He has suggested that on the Sankranti day itself, after bath, every one should go to the nearest Sri Vishnu temple, sit at its entrance, facing North, perform *Achamanam* thrice, with water sanctified by Tulasi leaves and recite Sri Narayana's name thrice.

19

Sri Sankaracharya has appealed to all religious-minded people to offer special prayers every day, after their morning Japam, for the success of the country, for peace and prosperity.

(இதன் மொழிபெயர்ப்பு வருமாறு;) "ஸங்கிராந்திக் கொண்டாட்டம்

ஸ்ரீமத் ஸ்ரீகாஞ்சீ சங்கராசார்ய ஸ்வாமிகள் நாளது ஸங்கிராந்திக்கு அடுத்த நாள் முதல் ஒவ்வொரு ஹிந்துவும் தன் ஆயுள் உள்ளவரையில் ஒவ்வொரு நாளும் காலை நீராடிவிட்டு ஸ்ரீநாராயண நாமத்தை நூற்றெட்டு தடவை ஜபம் செய்ய ஸங்கல்பம் செய்துகொள்ளவேண்டும் என்று வற்புறுத்தியிருக்கிறார். ஸங்கிராந்தியன்று ஸ்நானம் செய்தவுடனே ஒவ்வொருவரும் அருகிலுள்ள ஸ்ரீ விஷ்ணுவாலயத்திற்குச் சென்று வாசலில் வடக்குபார்த்து உட்கார்ந்துகொண்டு துலஸீதளம் சேர்த்த தீர்த்தத்தால் மூன்றுதடவை ஆசமனம் செய்து மூன்று தடவை நாராயண நாமத்தைச் சொல்லவேணுமென்றும் கட்டளையிடுகிறார் ........"

இக்கட்டளை ஹிண்டுவில் வெளியிடப்பட்டிருந்ததைக் கண்டவொரு வைணவதனிகர் இதை உலகமெல்லாம் காணவேணும் அனுட்டிக்கவும் வேணுமென்கிற நோக்கத்துடன்[துண்டுப் பிரசுரமாகப் பதினாயிரம் காபிகள் அச்சிடுவித்து எங்கும் பரவச்செய்து வருகிறார். [அதுதான் நமக்குக் கிடைத்தது. நாம் ஹிண்டுவைப் பார்ப்பதில்லை,] குணங்களைக் கண்டு உகப்பது உத்தமக்ருத்யம். ஸ்ரீவில்லிபுத்தூர் அலங்கார பட்டாசார் அவிவேகியல்லர்; த்ரவ்யலோலுபருமல்லர். அந்தப் பெரியவர் ஸதஸ்ஸில் பேசின விஷயம் பத்ரிகையில் மாறுபாடின்றி வெளிவந்திருக்கிறதா வென்பது முதலில் பரிசீலிக்கப்படவேண்டும். சொன்னது சொன்னபடியேதான் வெளிவந்துளதென்று தெரிந்தாலும் சொல்லப்பட்ட விஷயம் அயுக்தமென்று தோன்றினால் பரமஸஹ்ருதயரான அவர்க்குக் கடிதமெழுதி சர்ச்சை செய்வதோ, (அல்லது) அவரைத் தாக்கிப் பத்திரிகையிலெழுதுவதோ யுக்தமாகுமேயல்லது இந்தப் பேச்சில் எந்த வகையிலும் ஸம்பந்தங் கொள்ளாத மஹாபுருஷரை நிந்திப்பது நியாயவாதிகள் செய்யுமதன்று. ஸ்ரீபெரும்பூதூரில் வித்வத்ஸிம்ஹமான ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமி எழுந்தருளியிருந்த காலத்தில் ஒரு ஸதஸ்ஸில் தம்முடைய வித்யார்த்தியொருவரை ஸம்ஸ்க்ருதத்தில் உபந்யஸிக்குமாறு நியமிக்க, அவர் எழுந்து "இதா நீம் மயா பரப்ரஹ்மஸ்ய ஸ்வரூப: ப்ரவீஷ்யதி" என்று ஆரம்பித்தார். சிரிக்கும் பண்டிதர்களோடுகூட அந்த ஸ்வாமியும் சிரிக்கிறார். "இப்படி அஸம்பத்தமாகப் பேசும்படி வித்யார்த்தியைத் தேற்றிவைத்திருக்கிறீரே" என்று அந்த மஹாஸ்வாமியை ஒருவரும் பொடியவில்லை. இப்படி நாம் பழங்கதை காட்டவேண்டிய அவசியமுமில்லை. ஸபைகளில் அவரவர்கள் தாமறிந்தவாறும் நினைந்தவாறும் பேசுகிறார்கள். மானிடர்க்குரிய ப்ரமப்ரமாத விப்ரலிப்ஸைகள் வீறுபெறவுங்கூடும். பணம் காசுகொடுத்து இப்படி பேசச்சொல்லுகிறாரென்று உதாஸீநர்களைப் பிடித்திழுத்துப் பூசலிடுவது புகழத்தக்க நெறியாகுமோ? எந்த ஸதஸ்ஸைப்பற்றி இப்போது ப்ரஸ்தாவமோ அந்த ஸதஸ்ஸிலேயே மற்றோர் ஐயங்கார் த்ரிமூர்த்திகளைப்பற்றி ஏதோ பேசினதாகப்

பத்ரிகையில் வந்தது பார்த்தேன். அது ஸங்கதமான பேச்சன்று என்று எனக்குத் தோன்றிற்று. அதற்குச் செய்யவேண்டியதைச் செய்திருக்கிறேன். அதனை இப்பத்திரிகையிலேயே முகப்பில் (165, 166 லக்கமுள்ள) இரண்டு உபந்யாஸங்களிற் காண்க. அதே வகையில் ஸுதர்சனமும் அலங்கார பட்டர்க்கு அறிவூட்டியிருக்கலாம். திருவாய்ப்பாடியில் கண்ணபிரான் செய்த தீம்புகளுக்கு உளைந்த ஆய்ச்சிகள் யசோதைப் பிராட்டியிடஞ் சென்று "புண்ணிற் புளிப்பெய்தாலொக்கும் தீமை புரைபுரையாலிவை செய்யவல்ல, அண்ணற்கண்ணானோர் மகனைப் பெற்ற அசோதைநங்காயுன் மகனைக் கூவாய்" என்று முறையிட்டுக்கொண்டதாகப் பெரியாழ்வாரெழுதிவைத்தார். திருமகளாரான ஆண்டாளோவென்னில் "அஞ்சவுரப்பாளசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும்" என்றாள். கண்ணபிரானைத் தீம்பு செய்யும்படி யசோதைதான் உத்ஸாஹப் படுத்திவிட்டிருப்பதாக இப்பாசுரத்தில் தெரிவிக்கப்படுகிறது. கண்ணன் திறத்தில் இங்ஙனே இரண்டுபடியும் சொல்ல ப்ராப்தமே. ப்ரக்ருதத்தில்ஒருபடியுமொவ்வாது. இனிஅடுத்த வுபந்யாஸம்காண்க.

## 196. அலங்காரபட்டர் பேச்சினாராய்ச்சி யுபந்யாஸம்.

ஸ்ரீ வில்லிபுத்தூர் அலங்காரபட்டர் ஸதஸ்ஸில் பேசினதாக வெளிவந்த விஷயத்தில் நடந்துகொள்ளவேண்டிய முறையை முந்தின உபந்யாஸத்தில் தெரிவித்தேன். அவருடைய பேச்சை அடியேன் சிறிது ஆராயப் புகுகின்றேன். திருக்கோட்டி யூரில் லிங்கமே விஷ்ணுவாக ஆராதிக்கப்பட்டு வருகிறதென்று அவர் பேசினதாக வெளிவரவில்லை. ஸுதர்சனம் உதாஹரித்துள்ளதைக் காணுமிடத்து ஹாஹாகாரம் செய்யவேண்டியதாக அப்பெரியார் பேசியிருக்கவில்லையென்று அடியேன் மட்டுமன்று, மற்றும் பல அபிஜ்ஞர்களும் கருதுகின்றார்கள். அலங்காரபட்டரோ நாடுநகரமும் மலிந்த புகழ்வாய்ந்தவர். ஸ்வயம் அர்ச்சகராயுமிருப்பவர். ஆகமங்கள் வல்லவரென்று கூறப்படுகிறார். பரத்வம் கொண்டாடி நிற்பவரல்லர், ஸர்வஸுலபர், ரஸிகாக்ரேஸரர். அவரை நேரில் ஸந்தித்து மருமமுணரவேண்டுமென்பது அடியேனுசை. நிற்க. அப்பெரியார் அவ்விதமாகவே பேசிவிட்டாரென்றே வைத்துக்கொள்வோம். இப்பேச்சு அத்தலத்தில் * உரகமெல்லணையானுக ஸேவைஸாதிக்கும் பெருமானைப் பற்றியதன்றே. மற்றுஞ் சில திவ்யதேசங்களிலும் ஒருபுறம் சிவபெருமானும் சிறு குடில் கட்டி வாழுங்கணக்கிலே திருக்கோட்டி யூரிலுமுள்ள ஸந்நிவேசத்தைப்பற்றி அப்பெரியார் பேசியிருப்பதாகத் தெரிகிறது. * ஏரானுமிறையோனும் .. .....கூ றாளுந்தனியுடம்பன்* * சிவனொடு பிரமன் வண்திருமடந்தை சேர்திருவாகம் * பிணங்களிடு காடதனுள் நடமாடு பிஞ்ஞகனோடு இணங்கு திருச்சக்கரத்தெம்பெருமான்* என்றிவைமுதலான பாசுரங்களுக்குச்சேர சில திருப்பதிகளிலே பெரியார்கள் பரம்பரையாகச் சொல்லிவரு மைதிஹ்யங்கள் சிலவுள்ளன. திருக்கோட்டியூர்ப் பதிகத்திலும் (பெரியதிருமொழி 9—10—4) * ஏறு மேறி யிலங்குமொண் மழுப்பற்று மீசற்கிசைந்து, உடம்பிலோர் கூறுதான் கொடுத்தான்—திருக்கோட்டியூரானே * என்கிற பாசுரத்தை யடியொற்றி, அந்த திவ்யதேசத்தில் அடியேனுக்கு* பஹி: ப்ராண

இவாபர:* என்னும்படி வாழ்ந்தவரும் நித்யஸ்மரணீயருமான ஸ்தானீகம் தங்கமையங்கார் ஸ்வாமி ஏதோ இதிஹாஸம் சொல்லக் கேட்டிருக்கிறேன். திருவாய்மொழியில் மண்ணை யிருந்து துழாவிப் பதிகத்தில் (8)* கருவுடைத் தேவில்களெல்லாம் கடல்வண்ணன் கோயிலேயென்னும்* என்று பாசுரமுள்ளது. இங்கு ஈடு வியாக்கியானம்—"கல் புதைத்துக்கிடக்கும் ஸ்தானங்கள் காணில் அவையெல்லாம் பெரியபெருமாள் பள்ளிகொண்டருளுகிற கோயிலே யென்கிருள். .........ப்ரதிமையையுடைத்தான தேவாலயங்களெல்லாங் கண்டால் கடல்வண்ணன் கோயிலே யென்கிருள்" என்று. "விஷ்ணுவே லிங்கவடிவில் பூஜிக்கப்படுகிருர்" என்கிற அலங்காரபட்ட ருடைய பேச்சில் என்ன அவத்யம் வந்திட்டது? சிவ பக்தர்கள் காசுகொடுத்துப்பேசுவித்த பேச்சாயிருந்தால் 'லிங்கமே விஷ்ணுவாக வைத்துப் பூஜிக்கப்படுவதாக வன்ருே பேசியிருக்கவேண்டும். லிங்கம் விஷ்ணு வடிவுகொள்வது அரிதேயொழிய, விஷ்ணு லிங்கவடிவுகொள்வதில் என்ன அருமை? பகவத்கீதையில் (9-23.) *யே து அந்யதேவதா பக்தா. யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய! யஜந்தி* என்கிற ஸ்ரீஸூக்திக்குப் பொருந்தும்படியாகத்தானே அலங்காரபட்டர் பேசியிருக்கிருர். அவருடைய பேச்சு முழுவதையும் அக்ஷரச: தெரிந்துகொண்டு யுக்தாயுக்த விசாரம் பண்ணலாமேயல்லது ஒரு வாக்ய கண்டத்தை மட்டும் பற்றிக்கொண்டு குறைகூறுவது "யதி:பூஜ்யோ நசம்சய:" என்றவரைக் குறித்து 'யதி: பூஜ்யோ ந; ஸம்சய:' என்கிருரே யிவர். என்று தூஷிப்பதோடொக்குமத்தனை. இவ்விஷய தத்துவம் எங்ஙனேயிருந்தாலும் இதையிட்டு மஹாபுருஷரைத் தாழ்வாக எழுதுவது "ஸ்வஹஸ்தே நோத்க்ஷிப்தைஸ்ஸ கலு நிஜகாத்ரேஷு பஹுலம் கலத்பிர் ஜம்பாலைர் ககநதலமாலிம்பதி" என்கிற ஸூக்தியையே ஸ்மரிப்பிக்க வல்லது. இவ்விஷயத்தில் மற்ரொருகால் விரிவாக வெழுதுவோம்

## நாலூரான் தனக்கு முந்தி நல்கினதத்துவம்.

கூரத்தாழ்வான் வாழித் திருநாமத்தில் "நாலூரான் தனக்கு முத்தி நல்கினன் வாழியே" என்றுள்ளது ப்ரஸித்தம். நாலூரானென்பவன் யாவன்? அவனுக்கு ஆழ்வான் முக்தியளித்த விதம் யாது? அவனுக்கு இவ்வாசிரியர் முக்தியளிக்க வேண்டிய ப்ரஸக்தி யென்ன? என்கிற ஜிஜ்ஞாஸை யுள்ளவர்களுக்கு இவ்வுபந்யாஸமுதவும். நாலூரானென்பவன் ஒரு ஸ்ரீவைஷ்ணவன். கூரத்தாழ்வானுடைய திருவடிஸம்பந்தம் பெற்றிருந்தவன். அவனுடைய வம்சத்தவர்கள் இன்னமும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ப்ரதிஷ்டிதர்களாய் விளங்கி வருகிருர்கள். உபதேசரத்தினமாலையில் ஈடு முப்பத்தாருயிரப்படி ஸ்ரீகோச பரம்பரையை யருளிச் செய்யுமிடத்து * ஆங்கவர்பால் பெற்ற..........நாலூர் பிள்ளைக்கவர்தாம் * என்று பணித்துள்ளதும், பகவத்விஷய காலக்ஷேபத்தனியன் பரம்பரையில் "நமோஸ்து தேவராஜாய சதுர்க்ராமநிவாஸிநே ......." என்கிற தனியன் அநுஸந்தானத்திலிருந்து வருவதும் ப்ரஸித்தம். ஸ்ரீராமாநுஜர் காலத்திலிருந்தவர் நாலூரான் என்றே ப்ரஸித்தி பெற்றிருந்தார். அவர் அக்காலத்தில்

வீரசைவனும் அவ்யபதேச்யனென்று வழங்கப்பட்டு வந்தவனுமான சோழராஜாவி னிடத்தில் வால்லப்யம் பெற்றிருந்தார். அவ்வரசன் "சிவாத் பரதரம் நாஸ்தி" என்று எழுதி அதில் வழிப்போக்கர்களை யெல்லாம் கையெழுத்திடச் செய்து களித்துவருகையில், ஒருநாள் நாலூரானென்பவர் "பாமரர்கள் கையெழுத்திட்ட தனுல் பயனென்கொல்! உலகம்போற்றும் புகழ்வாய்ந்த ஸ்ரீராமானுஜர் கையெழுத்திட்டாலன்றோ பயனுவது" என்றார். இங்ஙனே சொன்னது கெட்ட எண்ணத்தினுலன்று; அரசனுடைய ப்ரயாஸம் வீணுனது என்று காட்டுவதற் காகவே இங்ஙனம் சொன்னது, ஆனுல் அது விளைவில் விபரீதமாயிற்றென்பது உலகமறிந்தது. பெரியநம்பி பரமபதிக்கவும், ஆழ்வான் திருக்கண்ணிழக்கவும் ஹேதுவானது தெய்வச் செயல். 'ஐயோ! நம்முடைய ஸாதாரணமான வார்த்தை இவ்வளவு விபத்துக்கு உடலாயிற்றே!' என்று அந்த நாலூரான் மிகவும் அநுத பிக்க நேர்ந்தது. அவன்தான் ஆழ்வான் திருவடி ஸம்பந்தம் பெற்றிருந்தவ னுகையாலே அவர்திருவடிகளிலே விழுந்து போரக்லேசித்திருந்தான். அவனைக் கைவிடமாட்டாத பரமகருணையாலே ஆழ்வான் ஒருஸமயம் பகவத் ஸன்னிதி யிலே 'நான் பெறும்பேறு நாலூரானும் பெறவேணும்' என்று பிரார்த்தித்தார்.

இந்த நாலூரானுக்கு நேர்ந்த அபசாரம் ப்ராமாதிகமேயல்லது புத்தி பூர்வகமன்று. அன்று. ஆனுலும் கொடியவிபத்துக்கு ஹேதுவாய்விட்டது. அவன் அரசனுக்குச் சொன்னது சிறிதும் கெட்ட எண்ணத்தினுலன்று 'இந்த வியாஜத் தினுலாவது இவன் ஸ்ரீராமாநுஜரை ஸேவிக்கநேர்ந்தால் அர்த்தாத் ஸதுபதேசம் பெற்று வாழ்ந்துபோக நேரும்' என்கிற நல்லெண்ணங்கொண்டே ஸ்ரீராமாநுஜ ப்ரஸ்தாவத்தை அவன் செய்தது. * அந்யோ ஹ்யந்யச் சிந்தயதி ஸ்வச் சந்தம் விததாம் யஹம்* என்று கூறியுள்ள எம்பெருமான் உலகில் அவர்வர்களின் மநோரதாநாம் அதடாந் ப்ரவாஹாந் பழுதாக்கி, *ராத்ரிர் கமிஷ்யதி பவிஷ்யதி ஸுப்ரபாதம் பாஸ்வாநுதேஷ்யதி ஹஸிஷ்யதி பங்கஜஸ்ரீ:, இத்தம் விசிந்தயதி கோச கதே த்விரேபே ஹாஹந்த ஹந்த! நலிநீம் கஜ உஜ்ஜஹார.* என்றுப்போலே ஸ்வச் சந்தமாகச் செய்துவருமடைவிலே மஹத்தான விபத்தை விளைத்தனன். இதற்கு சுதர்சனத்தையே நிதர்சனமாகக் கொள்ளலாம். வைணவமதத்திற்கு நன்மை செய்து மேம்பாடடைய வேணுமென்று மனோரதம்மட்டுமேயாய் நேர்விபரீதமே யன்றோ பலித்துவருவது அதை விளக்கமாகத் தெரிவிக்கக்வும் வேணுமோ?

மார்கழி ஸுதர்சனத்தில் நாலூரான் பகுதியானது உலகம் நிறைந்த புக ழுடைத்தான ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன விமர்சனமென்கிற பதினுறு பக்கங் கொண்ட நூலை க்ஷேபிக்கத் தோன்றியதென்பதை மறந்திருக்கமாட்டீர்கள். அந்த நூல் நாமெழுதியதே யன்றி வேறொருவர் எழுதியதன்றென்பது நிஸ்ஸந்தேஹ மென்று ஸுதர்சனம் முடிவுகட்டியிருப்பதும் அதற்கு நம்முடைய விடையளிப்பும் [கீழே 194 உபந்யாஸத்தில்] வெளிவந்ததாயிற்று. அந்த விமர்சன நூலில் அஸங்கதமான விஷயம் ஈஷத்தாவதிருக்குமாகுல் 'அது என்னுடைய க்ருதி யன்று' என்று மறுக்க முன்வரவேண்டும். அக்ஷரலக்ஷம் பெறத்தக்கதான அந் நூலுக்கு நாமே கர்த்தா என்று இசைவதில் தகுதியின்மையொன்றுமில்லை.

20

அந்நூலில் பலபல விஷயங்கள் சர்ச்சிக்கப்பட்டிருந்தாலும், ஆனந்தவிகடன் தீபாவளிமலரில் வெளிவந்த பாலாதாஸன் வியாஸம் இவ்வளவு கடுமையாகக் கண்டிக்கத் தக்கதன்று என்பதே அதில் சிகரமான விஷயம் அந்த பாலாதாஸன் வியாஸத்தை ஸமீபகாலத்தில்தான் நாம் பார்க்கநேர்ந்தது. அது பெரியதொரு க்ரந்தம்போன்ற மிக நீண்ட வியாஸம். அதை யெழுதியவர் நெஞ்சில் சிறிதளவும் குடிலபுத்தியைக் கொள்ளாமலும், ஸ்ரீ வைஷ்ணவர்களின் மனத்தை நோவச் செய்யவேணுமென்கிற எண்ணம் எள்ளளவுமில்லாமலும் வெகு ஆர்ஜவத்துடனும் பயபக்தியுடனும் எழுதியிருக்கிருரென்பதை ஹ்ருதய ஸாக்ஷிகமாகத் தெரிவிக்கிறேன். வைணவத்தில் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யக் கற்றபண்டிதோத்தமர்களாலுங் கூட இவ்வளவு நேர்த்தியாக எழுத முடியாதென்று சபதம் செய்வேன். இந்த வியாஸத்தின் முதற்பக்கத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமதஹோபிலமடாதிபதி வர்த்தமான அழகியசிங்கருடைய மிகப் பெரிய திருவுருவப்படம் சித்ரகலா பாஞ்சிதமாய்த் திகழ்கின்றது. அது ப்ரஸ்துதவியாஸத்தைவிட்டுப் பெயர்க்க முடியாதபடி மிக நேர்த்தியாக அமைக்கப்பட்டிருப்பதால் அந்த மஹாஸ்வாமியின் அபிநந்தநமும் பெற்றிருக்கக் கூடுமென்றும், அதற்கு ஜ்ஞாபகமாகவே அந்த ஸ்வாமியின் திருவுருவப்படம் லோகோத்தரமான முறையில் அதில் அப்ருதக்ஸித்தவிசேஷணம்போல் அமைக்கப்பட்டிருக்கிறதென்றும் உலகம் நினைக்கின்றது.

"ஸர்வதா வ்யவஹர்த்தவ்யம் குதோ ஹ்யவசநீயதா" என்கிருர் பவபூதி மஹாகவி. எப்படிப்பட்ட மஹாக்ரந்தத்திலும் அவத்யம் சொல்ல நினைத்தால் தாராளமாகச் சொல்ல முடியுமென்பது இதன் கருத்து. ஆந்திர தேசத்தில் ஒரு ஸ்ரீவைஷ்ணவ பண்டிதனே ஸ்ரீ பாஷ்யத்திற்குக் கண்டனமெழுதி அச்சிட்டு வெளியிட்டிருப்பதுஉலகப்பிரஸித்தம். அது கிடக்க. பாலாதாஸருடைய வியாஸத்திலுள்ள குணதோஷங்களையெல்லாம் பராமர்சிக்க வேண்டிய அவசியம் நமக்குச் சிறிதுமில்லை. எவர்க்குமில்லை. "ஸ்ரீ வைஷ்ணவர்களின் மனத்தை இப்படியுமா நோவச் செய்வது! இப்படி கூடவா துன்புறுத்துவது!" என்று பிரபலமான ஹாஹாகாரம் செய்திருக்கிற ஸுதர்சனம் [இலவச வெளியீடு] ஹாஹாகாரத்திற்கு ஆஸ்பதமான பாலாதாஸவாக்கியங்களை எடுத்துக் காட்டாமலில்லை. தானே காட்டியாய் விட்டது. அவை அபலபிக்க முடியாதபடி வெளிவந்துவிட்டன.

> "ஆசார்யாள் தமக்கே இயல்பான கருணையால் மிகவும் ஸாதாரண நிலையிலுள்ள மனிதன்கூட எளிய முறையில் அநுபூதி பெறுவதற்காக வைஷ்ணவம் என்றதொரு வரப்ரஸாதத்தை அருளியிருக்கிருர்கள்"

என்று பாலாதாஸன் எழுதியிருப்பதாக ஸுதர்சனம் எடுத்துக் காட்டியாய் விட்டது. தாஸருடைய வாக்கியங்களை இப்படி அந்யூநாநதிரிக்தமாகத் தானே யெடுத்துக் காட்டிவிட்டு "வைஷ்ணவத்தை ஒன்றுமறியாத பாமரர்களுக்காக ஸ்தாபித்தார் ஆதிசங்கரர்" என்று பாலாதாஸர் தூஷித்திருப்பதாக வேருேரிடத்தில் காட்டி நிந்திப்பது ஒரு நியாயவாதி செய்யத் தகுங்காரியமா? அன்றியும்,

> "சமுதாயத்தின் நல்வாழ்வையே அடிச்தளமாகக் கொண்டு நிர்மாணிக்கப்பட்டது வைஷ்ணவம்"

என்று மெழுதியிருக்கிருர் பாலாதாஸர்-என்று இதையுமெடுத்துக் காட்டிவைத்திருக்கிற இலவச ஸுதர்சனம் "வைணவர்களின் மனத்தைப் புண்படுத்தவே ஆனந்த விகடன் பாடுபடுகிறது" என்றெழுத எப்படி மனங் கொண்டதோ? சங்கர விஜய மென்கிற க்ரந்தம் கல்பிதமாகி ஐந்நூறு வருஷ காலமாய்ப்

பிரசாரத்திலிருந்து வருகிறதென்றும், ஸ்ரீவைஷ்ணவர்களின் மனம் கொதிக்கும் படியான விஷயங்கள் அந்த கல்பித க்ரந்தத்திலுள்ளனவென்றும், அதை ப்ராமாணிகமாக நம்பி பாலாதாஸர் சில விஷயங்களை யெழுதிவிட்டாரென்றும் இலவச ஸுதர்சனம் தெரிவிப்பதை நாம் முழு மனமாக ஏற்றுக் கொள்ளுவோம். ஐந்நூறு வருஷ மென்பது குறுகிய காலமன்றே. மணவாளமாமுனிகள் போன்ற மஹாசாரியர்கள் வாழ்ந்தருளின காலமல்லவா? அந்த நல்லடிக் காலத்திலேயே சங்கர விஜயம் இருந்ததாக ஒப்புக் கொண்டு விட்டால் வாதத்திற்கு விஷயமேது? அச்சுக்கூடங்கள் ஏற்பட்டுப் புராதன நூல்களை அச்சிடுவ தென்கிற காரியம் தொடங்கின பிறகு, இல்லாதவற்றைச் சேர்ப்பதும் இருப்பவற்றை யெடுப்பது மான ப்ரக்ஷேபோத்க்ஷேபங்கள் இடம் பெற்றனவென்றால் இது ஏற்கத்தக்க தாகும். அச்சுக்கூடங்கள் தோன்றிய பிறகுதான் சங்கரவிஜயம் தலைகாட்டத் தொடங்கிற்றென்று துணிந்து எழுதிவிடாமல் ஐந்நூறாண்டு ஆயுள் கொடுத் திருப்பது எதனாலே? என்று ஒரு தடஸ்தர் கேட்டால் பிராமாணிகமான விடை வெளிவரவேண்டுமே. ஸர்வலோகபரிக்ருஹீதமான ஸ்ரீராமாயணத்தில் ஆதித்ய ஹ்ருதய ஸர்க்கம் ப்ரக்ஷிப்தமாகப் புகுந்திட்ட தென்கிற வாதம் பெரும்பாலும் உலவி வருகின்றது. கோவிந்தராஜர் வியாக்கியானித்திருந்துங்கூட இங்ஙனே ஆவாதம் நிகழ்ந்திட்டது. இருபது முப்பது பிரதிகளை வைத்துக்கொண்டு சோதித்து அச்சிட்டவர்களுங்கூட ''ப்ரக்ஷிப்தஸ் ஸர்க்க:* என்று மகுடமிட்டுப் பல ஸர்க்கங்களைச் சேர்த்து அச்சிட்டுள்ளார்கள். அவற்றையும் விடாமல் பாராயணம் செய்தே வருகிறார்கள் சில பெரியார்.

முக்கியமான விஷயமொன்று கேண்மின். ப்ரக்ஷிப்தம் என்பதும் கல்பிதம் என்பதும் பர்யாயபதங்களல்ல ஏற்கெனவே பிராமாணிகமாகவுள்ள நூல்களில் சில சுலோகங்களோ கதைகளோ புகுத்தப்பட்டால் அங்கு ப்ரக்ஷிப்த மென்கிற பேச்சு உண்டாகும். நூலொன்று அடியோடு முன்பில்லாமல் பிற்காலத்திலே புனையப்பட்டால் அங்குக் கல்பித மென்கிற பேச்சு உண்டாகும். பாலாதாஸன் தனக்கு அவஷ்டம்பமாக ஒரு நூலைக் கொண்டதாய் இலவச ஸுதர்சனம் எழுதி யாய்விட்டது. அதில் ப்ரக்ஷேபமுள்ளதா அல்லது அதுவே கல்பிதமா? என விளக்கவேணும். ஐந்நூறு வருஷங்களென்கிற ஒரு வார்த்தை எழுதப்பட்டுவிட்ட படியால் கல்பித மென்கிற வார்த்தைக்குப் பொருளில்லையாகும் 'விச்வகுணதர்ச மென்கிற நூலை முந்நூறு வருடங்களுக்கு முன்பு கற்பனை செய்தார்'' ''குவல யானந்த மென்கிற நூலை நானூறு வருடங்களுக்கு முன்பு கல்பனை செய்தார்'' என்பாருண்டோ? உண்டாகில் நிர்மாண மென்கிற பொருளில் கற்பனையென்னுஞ் சொல் பிரயோகிக்கப்பட்டதென்றுதானே சொல்லவேண்டிவரும். இந்த விசாரங் களை ஆனந்த விகட வியாஸத்திலாவைத்துக் கொள்வது? ப்ரக்ஷேபவாதமோ கற்பனை வாதமோ எதுவானாலும் பலபல அகச்சான்று புறச்சான்றுகளைக் கொண் டன்றோ ஸமர்த்திக்கப்படவேண்டும். இதைத் தான் விமர்சன நூல் விளக்கமாக வெழுதியுள்ளது. விஷயத்தைத் தொடாமலே நிந்தைகளைப் பெய்வதனால் பாமரரும் மயங்கார். விமர்சனத்தில் (பக்கம் 16ல் தலைமேல்)

''பாலாதாசன் எழுதியிருப்பது ஸர்வாத்மநா நிராதாரமென்றெழுதாமல் அவற்கு ஐந்நூறு வருஷகாலத்து ஆதாரமுண்டென்று பலதடவை யெழுது கின்றவர் இந்த விவாதத்தில் தலையிட்டிருக்கவேண்டா. பாலாதாசனையோ ஆனந்தவிகடனையோ எதிரியாகக் கொள்ளாமல் சங்கர விஜய ஸமாலோசனம் என்று பெயரிட்டுத் தன்னுடைய விமர்ச வைசாரத்யத்தை 'வாய் திறக்கவுண்டோ வழி' என்னும்படியாகக் காட்டியிருந்தால் அது வரவேற்கத்தக்கதாகும். ''பூர்வா

பரகர்ம காண்டங்களின் அநுஷ்டானப்ரக்ரியைகளுக்கு ஐந்நூறு வருஷங்களுக்கு முன் எவ்வித ஆதாரமும் கிடையாது'' என்று பரமாஸ்திக வைதிகரொருவர் எழுதியிருக்கிறாரே, அதற்கு இவர் என்ன செய்வரோ? அது தெரியவேண்டும்.''

என்றெழுதியிருப்பதற்கு நிந்தைதானு பதில். ஸ்ரீபாஷ்யம் முழுவதும் அஸங்கதம் என்று பிரசாரம் செய்பவர் ஸ்ரீபாஷ்யத்திலுள்ள அஸங்கத விஷயங்கள் இன்னின்னவையென்று எடுத்துக் காட்டி அஸங்கதி நிருபணம் செய்வதை விட்டு ''யாதவப்ரகாசரிடத்தில் வேதாந்தம் கேட்ட ராமாநுஜர் அத்வைதந்தவிர வேறு என்ன எழுதக்கூடும்? அதைப் பொருள் படுத்தி பதிலுரைக்க நாம் தயாராயில்லை'' என்று ஸ்ரீமத் கம்பீரமாகச் சொல்லி தனக்கு முதுகு சொறியும் சிலரை நோக்கி ''நான் சொல்லுகிறது ஸரிதானே; என்ன சொல்லுகிறீர்?' என்று கேட்பது, அவர்கள் ''ஆமாம் ஆமாம், அதற்கென்ன ஸந்தேஹம்? தேவரீர் ஸாதிப்பது தான் ஸரி'' என்று சொல்லித் தாளம் போட, 'அப்படிச் சொல்லுமையா, என்று தலை குலுக்குவதான கதை தவிர வேறுண்டோ நினைவுக்கு வருவது?

ஒரு கோவிலில் வேலைபார்க்குமொருவர் வசவுமயமான வார்த்தை தவிர வேரெருவார்த்தையுமறியார். அதை அவர் ஸஹஜமான வார்த்தையென்றே எண்ணியிருப்பவராதலால் கோவிலுக்கு வருபவர்களையெல்லாம் வைதுதீர்ப்பர். புதிதாகப்பெருமாளை ஸேவிக்கவந்த வொருவர் அபரிமிதமாக வையப்பட்டு வசவு பொறுக்கமாட்டாமல் போலீஸில் சென்று முறையிட்டார் தலைவர் இவரை வர வழைத்து விசாரிக்கையில் ''இந்த விதவாபுத்திரனையா நான் வைதேன்? இந்த கழுதைப்பயலையா நான் வைதேன்?'' என்று அடுக்கிக்கொண்டே போகிறாரிவர். 'இவர்க்கு இதுதான் இயல்பான பேச்சு' என்று தெரிந்துகொண்ட தலைவர் போய் வாருமென்றனுப்பிவிட்டார். சுதர்சனமும் இவ்வண்ணமாகவே நெடுநாளாக எழுதக்கற்றுவிட்டபடியால் இத்தகையவார்த்தைகளே பூஷணமென்றும், இங்ஙனல்லாத வார்த்தைகளெல்லாம் தூஷணமென்றும் திடமானவ்யுத்பத்திபண்ணி விட்டது. அதனால்தான் ''தூஷிக்கிறார் நிந்திக்கிறார்'' என்றே கத்தவேண்டியது இதன் கடமையாயிற்று. விமர்சனம் 16 பக்கங்களையும் கையில் கொடுத்து 'இதிலுள்ள தூஷணங்களை சிவப்புமசியால் அடையாளஞ் செய்து கொடும்'' என்று ஒரு தடஸ்தர் சொன்னால் திசை தொறும் விழித்து நிற்குமத்தனை ''என்னை பதில் சொல்ல வாயெடுக்க வொட்டாதபடி திக்குமுக்கலாடச் செய்யும் விஷயங்களை நான் நிந்தையென்று குறிப்பிடுவது வழக்கம்'' என்று உண்மையை வெளியிட்டே தீரவேண்டும் ஸுதர்சனம் ஸர்வேச்வரன் நம்முடைய சில தீமைகளுக்கு நன்மையென்று பேரிடுவதாக ஸ்ரீவசனபூஷணமருளக்கண்டோம். நன்மைகளையெல்லாம் தீமையாகக் கணக்கிடுவதுதான் ஸுதர்சனக்ருத்யம்

தனக்குச் சார்பாக எழுத ஒரு பண்டிதரும் கிடைக்காமையினால் ஒரு ஸௌராஷ்டிரரைப்பிடித்து அவர் பெயரால்வெளியிட்டதில் உப்புப்புளிப்பு ஏதேனுமுண்டோ? உறையூர் வீணை ரங்காசாரி யென்பவர் அவர். பட்டுநூல்காரர். வீணை வாசிப்பதில் வல்லவராயிருக்கலாமவர். பரமஸாது, மரமபக்தர் இந்த விஷயகந்தமே அறியாதவர் அப்படிப்பட்டவர்களைக்கொண்டு ஏன்வெளியிடவில்லை யென்று க்ஷேபிக்கின்றதுபோலும். நம்மாழ்வார் தாமான தன்மையை விட்டு மகள், தாய், தோழியர் வடிவிலும் பேசி ஸ்வவிவக்ஷிதார்த்தங்களை ஆச்சரியமாக வெளியிடுகிறார். ஆசார்யஹ்ருதயத்தில் ''பெருக்காறு பலதலைத்துக் கடலை நோக்குமா போலே.........கடலிடங்கொண்ட கடலை பஹுமுகமாக அவகாஹிக்கும்'' என்றுள்ள சூர்ணையின் அரியபெரிய பொருளை அறிந்து அகமகிழ்க. (196.)

## 197. வைஷ்ணவத்தைக் காட்டிக்கொடுக்குமுபந்யாஸம்

நாலூரானுமென்று தொடங்கும் மார்கழி ஸுதர்சனப்பகுதி (பக்கம் 3ல்) "மஹாவித்வான் காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தமது நீண்ட வுரையில்.........காணலாம்" என்று ஒரு விஷயமெழுதி முடித்துவிட்டு உடனே "இத்தகைய மஹாநுபாவர் வைஷ்ணவ மதத்தைக் காட்டிக் கொடுக்கும் பணியிலும் கைவைத்திருக்கும் பெருமையைக் காட்டுவோமினி" என்றெழுதியுள்ளது. (பக்கம் 4லும்) "இவர் வைஷ்ணவத்தைக் காட்டிக் கொடுத்திருக்கும் சிறுமையை அறிந்து கொள்ளலாம்." என்றெழுதியுள்ளது. வைஷ்ணவத்தைக் காட்டிக் கொடுப்பதாவது என்ன? என்பதை உலகம் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமல்லவா? ஸுதர்சனம் தன்னுடைய மருட்சியாலே பிறரை வைஷ்ணவத்வேஷிகளாகவும் விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாய தூஷகர்களாகவும் ப்ரமித்து அஸ்தாநே ஆரவாரம் செய்தால் அதற்கு மற்றுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களும் துத்தியூதவேணுமாம்; தாளம் போடவேணுமாம்; 'ஒருவராலும் செய்யமுடியாத கண்டனத்தை எவ்வளவு ஆச்சரியமாகச் செய்துவிட்டது ஸுதர்சனம்! பார்த்தீர்களா?' என்று கொண்டாடவேணுமாம்; அப்படி கொண்டாடாமல் 'அஸ்தாநே ஸம்ப்ரமித்து வீணான நிந்தைகளை வளர்த்திவிட்டது' என்று ஆர்ஜவத்துடன் தாக்கியெழுதினால் அது வைஷ்ணவத்தைக் காட்டிக்கொடுப்பதாம். இது ஸுதர்சனடிக்ஷ்னரி வசனம். விஷயங்களில் வாய்திறக்க முடியாமற்போகவே இப்படியொரு அர்த்தமில்லாத வார்த்தை அபூர்வமாக அவதரிக்கின்றது. கொண்டாடவேண்டிய காரணங்களிருந்தால் ப்ரதிபக்ஷிகளும் *அவசா: ப்ரதிபேதிரே* என்கிற கணக்கில் கொண்டாடவே நேரும். *அபந்தாநம் து கச்சந்தம் ஸோதரோபி விமுஞ்சதி* என்றார் முராரி. இந்த ஸந்தர்ப்பத்தில் நினைவுக்கு வந்த சில இன்சுவை மிக்க கதைகளை உபஹரிக்கிறேன் கேண்மின்.

ஒருவர்க்கு ஜாமாதாக்கள் மூவர்; அவர்களுள் இருவர் ப்ரபல பண்டிதர்கள். ஒருவர் அசடுபிசடு. பண்டிதர்களான ஜாமாதாக்களிருவரையும் அடிக்கடி பலர் கொண்டாடுவர்கள். அசடுபிசடுஜாமாதாவினிடத்தில் எல்லாருமே உதாஸீநர்களாயிருந்து வந்தார்கள். ஒரு விவாஹார்த்தமாக எல்லாருங்கூடி ஒரு க்ராமத்திற்குச் செல்ல நேர்ந்தது. வழியிடையில் அசட்டு ஜாமாதா ஒரு கிழக்காக்கையின் மீது கல்லைவிட்டெறிய அது இறந்து விட்டது. அதை எல்லாருங் கொண்டாடவேணுமென்று இந்த அசடு எதிர் பார்த்தது. இதைப்பற்றின பேச்சை யாருமே யெடுக்கவில்லை. அதனால் கோபங்கொண்ட அந்த அசடு கல்யாணப்பந்தலுக்கு வராமல் ஒரு வீட்டுத் திண்ணையில் முட்டாக்கிட்டுக் கொண்டு படுக்கை போட்டுவிட்டது. அந்த அசடு எங்குங்காணவில்லையே யென்று தேடவேண்டியதாகி, படுத்திருக்குமிடத்தைத் தெரிந்துகொண்டு மைத்துனன் வந்து அழைக்க, அசடு எழுந்திருக்காமலே "என்னைப்பற்றி உங்களுக்கென்ன? எனக்கேதாவது யோக்யதையுண்டா? யாரையாவது அடிக்கத் தெரியுமா கொல்லத் தெரியுமா எனக்கு!"

என்று ஏதேதோ சொல்லுகின்றது. அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஓடிப்போய் 'அசடு இப்படி சொல்லுகிறதே, என்ன ஸங்கதி?' என்று அக்காவைக் கேட்க, 'வரும் வழியில் ஒரு கல்லையெடுத்துக் காக்கையின் மீதெறிந்தது; உடனே அது செத்துப் போயிற்று; அந்த அதிமாநுஷவிக்ரமப்ரதாபத்தை யாருங்கொண்டாடிக் கூறவில்லை யென்று கோவம் போலும்' என்று சொல்லிக் கொண்டே போய் விட்டாளவள். உடனே மாமியார் ஓடிவந்து 'மாப்பளே! எனக்குத் தெரியவே தெரியாதே; ஒரே கல்லாமே; அடடா என்ன ஸாமர்த்தியம்! என்ன சூரத்தனம்!' என்று சொல்ல, அசடுக்கு உச்சி குளிர்ந்துவிட்டது; பதறியெழுந்து 'அம்மாமீ! தாஸன்' என்று தொழுது 'என்னாலே என்ன இருக்கிறது; எல்லாம் அம்மாமியின் அநுக்ரஹந்தான்' என்று சொல்லிக்கொண்டே அசட்டுச்சிரிப்புடன் கண்ணூலப்பந்தலுக்கு வந்துசேர்ந்தது. மற்றொருகதை கேண்மின்.

ஒரு விஷ்ணு கோவில். கோவில் மணியகாரன் கோபுரப்புடையில் உட்கார்ந்திருக்கிறான். அவன் வீரவைஷ்ணவன். பஸ்மதாரிகளைக் கண்டால் கடுங்கோவங்கொள்ளுவன். ஆனால் படிப்பு ஏதுமில்லை. வெறும் துராக்ரஹி. ஒருநாள் ஒரு பரமபக்தர் பெருமாளைச் சேவிக்க ஆவலோடு வருகிறார். அவர் உடல் முழுதும் விபூதி யணிந்துகொண்டிருந்த தனால் ஜுகுப்ஸைகொண்ட மணியகாரர் அவரை நீ உள்ளே செல்லக்கூடாதென்று சொல்லித் தடுத்துவிட்டார். எதற்காகத் தடுக்கிறீரென்று கேட்க 'நீ உள்ளேபோய் சிவஸ்தோத்ரம் சொல்லுவாய்; அதற்காகத்தான் தடுக்கிறேன்' என்ன; 'ஸ்வாமீ ஒருகாலும் அப்படி நான் சொல்லமாட்டேன், பெருமாளைத்தான் துதிப்பேன்' என்று பக்தர் கூற, 'அப்படியானால் உள்ளேபோய் நீ சொல்லப்போகிறதை இங்கே என்னிடம் சொல்லு பார்ப்போம்' என்று மணியகாரர் சொல்ல, "ஹரயே நம: என்பேன்" என்று பக்தர் கூற, "பார்த்தீர்களா பார்த்தீர்களா? என்ன துணிச்சல் பாருங்கள்; ஹரியே நம: என்னாமல் ஹரயே நம: என்று ஹரனைத்தான் சொல்லுவேனென்கிறானே; இந்த மஹாபாபியை உள்ளே விடலாமா? எப்படி விடலாம்? என்று கத்துகிறார் மணியகாரர். தொழவந்த பக்தர் வியாகரண பண்டிதராகையாலே ஹரிசப்தத்தின்மேல் சதுர்த்தியேறி ஹரயே என்றாயிற்று என்று விவரிக்கத் தொடங்கி 'ஹரி ஙே என்றிருந்தது' என்றார். வையாகரணர்கள் சப்தஸித்திக்கு ப்ரக்ரியை சொல்லுவதென்று ஒன்றுண்டே; அது சொல்லும் போது (ஹரி ஙே என்றிருந்தது) என்று தானே ஆரம்பிக்கவேண்டும். (ஙே என்பது சதுர்த்தீ விபக்திப்ரத்யயம்.) இந்த இழவெல்லாம் மணியகாரனுக்குத் தெரியாதாகையால் "ஹரி ஙே என்றிருந்தது" என்றதற்குக் கண்கள் சிவந்து நாமடித்துக் குதிக்கிறான். உலகில் வீங்கலாயிருப்பவர்களை (ஙே என்றிருக்கிறான்) என்பது வழக்க மாகையாலே நம்மஹரியை வீங்கலென்று வைகிறானிவன் என்று கொண்ட மணியகாரன் 'பயலே! எங்க பெருமாளுக்கு என்னடா குறை? பொங்கலும் புளியோரையும் தோசையும் வடையும் இட்டிலியும் அமுதுசெய்து பம் என்றிருக்கிறார்; உங்கசிவன்தான் சோறில்லாமல் ஙே என்றிருக்கிறான்; கொஞ்சமும் அச்சமில்லாமல் ஹரி ஙே என்றிருந்தது என்கிறாயே பாவீ! இன்று நான் உன்னை விட்டேனு பார், என்ன பண்ணுகிறேன் பார்' என்று அட்டஹாஸம் செய்கிறான். அங்கேயிருந்த வைஷ்ணவபண்டிதரொருவர் 'பக்தரே! இது பைத்தியம்; நீர் பேசாமல் உள்ளே போம்' என்ன; பக்தர் *அரஸிகேஷு கவித்வநி வேதனம் சிரஸி மாலிக மாலிக மாலிக* என்று சொல்லிக்கொண்டே உள்ளே போய்

விட்டார். மணியகாரரோ ஓயவில்லை. வைஷ்ணவனென்று நாமமிட்டுக்கொண்டிருக்கிற பாவிகள் நம்மஹரியை தூஷிக்கிற சாம்பலாண்டியை உள்ளே புகவிட்டால் என்ன அர்த்தம்? கேட்பார் புடைப்பாரில்லையே யிவர்களை; நான் எதற்குக் கோவிலில் மணியகாரனென்று சம்பளம்வாங்கிச் சாப்பிடுவது! இப்படியும் ஒரு அநியாயமுண்டா? அராஜகமுண்டா? ஹரியின் கோவிலிலேவந்து (ஹரயே நம:) என்று ஒரு சாம்பலாண்டி சொன்னால் அதை ஸஹித்திருப்பவன் எப்படியையா வைஷ்ணவனாவன்! என்று கோவிலதிரக் குளமதிரக் கூச்சலிடுகிறானேயாமல். அதே கதைதான்.

இன்னுமொருகதை கேண்மின். ஒரு மத்வாசார்; அவர் தன் குமாரனுக்கு ஆங்கிலம் கற்பித்தார். தேறினவன். உத்யோகம்பார்ப்பதற்கு வெளியூர் சென்றான். ஒருமாதமாகியும் தந்தைக்குக் கடிதமொன்றுமெழுதாமலிருந்தான். மிக்க விசாரங்கொண்ட தந்தை [ராமாயணாதிகளில் கயிறு போட்டுப் பார்க்கிற ரீதியில்] ப்ரஹ்ம ஸூத்ர மத்வ பாஷ்யத்தில் கயிறுபோட்டுப் பார்த்தார். மத்வாதிஷ்வஸம்பவாத் அநதிகாரம் ஜைமினி: என்கிற ஸூத்ரம் வந்தது. மத்வனுக்கு அதிகாரம் கிடைக்காதென்று ஜைமினி சொல்லுவதாக வந்துவிட்டதே யென்று கரைந்தார். அதிகாரம் கிடைக்காமல் போனால் போகிறது; வயிற்றுக்குச் சாப்பாடாவது கிடைக்குமா பார்ப்போம் என்று மறுபடியும் அதிலேயே கயிறு போட்டார். *ம்ருத்திகேத்யேவ ஸத்யம்* என்கிற உபநிஷத்வாக்யம் வந்தது; ஐயோ வயிற்றுக்கு மண்ணுதானாமே; அதை ஸத்யமிட்டும் சொல்லுகிறதே வேதம்! என்று அழுதார். உத்யோகத்துக்குப் போனவன் திரும்பியாவது ஸௌக்கியமாக வந்து சேர்வனா பார்ப்போம் என்று மறுபடியும் அதிலேயே கயிறு போட்டார். "நச புநரா வர்த்ததே நச புநராவர்த்ததே" என்கிற உபநிஷத் வாக்யம் வந்தது. ஐயோ ஒருமுறைக்கு இருமுறையாக வோதுகிறதே; திரும்பி வரவே மாட்டானாமேயென்று புரண்டு புரண்டழுகிறார். மற்றவர்கள் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள்; 'மகனிறந்தானென்று நான் அழுதுகொண்டிருக்க நீங்கள் சிரித்துக் கொண்டிருக்கிறீர்களே பாவிகாள்!' என்று அவர்களோடு பிணங்குகிறார். எல்லாரையுமடிக்கிறார் புடைக்கிறார்.

கடைசியாக ஒரு கதையோடு முடித்திடுகிறேன். ஒரு தகப்பனார் கிராமத்திலிருக்கிறார்; குமாரன் நகரத்திலிருக்கிறான். தகப்பனாருடைய வீட்டில் கள்ளன் புகுந்து ஒரு தவலையைக் கொண்டுபோய் விட்டான். இதை மகனுக்குத் தெரிவிக்கிறார் தந்தை. அக்காலத்தில் ஓலையேட்டில் எழுதி ஏட்டினிடையில் துளை விட்டு அதில் நார் கட்டி அதை நாயின் கழுத்திலே கட்டிப் போகவிடுவது வழக்கம். ஆகவேதான் கண்ணன் தூது சென்றானென வருமிடங்களில் கழுத்திலே ஓலைகட்டித் தூதெழுந்தருளினதாக [உபமானச் சாயையில்] ஆசாரியர்கள் அருளிச்செய்வது. கள்ளன் புகுந்து தவலையைக் கொண்டுபோன செய்தியை ஓலையேட்டிலெழுதின தகப்பனார் "திருடன் புகுந்து தவலை போயிற்று" என்று எழுதினார்; எழுதின பிறகு நார்கட்டத் துளைவிடும்போது தவலையென்பதில் (வ) என்னுமெழுத்தின்மேல் துளை விழுந்தது. குமாரன் ஏட்டைப் பார்க்கிறபோது திருடன் புகுந்து தலை போயிற்று என்று வாசிக்க நேர்ந்தது. அப்பாவின் தலையைக் கள்ளன் கொண்டுபோய்விட்டானென்று கொண்ட குமாரன் அப்பா இறந்துபோய்விட்டாரென்று சொல்லிப் புரண்டழுகிறான். துக்கம் விசாரிக்கவந்து கூடினவர்கள் அப்பா இறந்ததாக

யார் சொன்னது? என்று கேட்க "அப்பாவே கைப்பட எழுதியிருக்கிறார் பாருங்களேன்" என்று ஏட்டையெடுத்துக் காட்டுகிறான் இந்த மஹாமேதாவி மைந்தன். அவர்களெல்லாரும் சிரிக்கிறார்கள். அப்பா மாண்டாரென்று நான் அழும்போது நீங்களுங் கூட அழாமல் இப்படி சிரிக்கிறீர்களே பாவிகாள்! என்று அனைவரையும் புடைக்கிறான் புத்திரன். அன்பர்களே! இங்ஙனே பல கதைகளுண்டு. இவற்றோடு ஒரு கோர்வையாகச் சேர வேண்டிய கதையே பாலாதாஸனுடைய வியாஸத்தை நிந்திப்பதற்கு உசாத்துணையாவாரில்லையே யென்று பரிதபித்துச் செய்கிற பரிவாதமும். ஐயுற வேண்டா ... ❁

## 198. பாலப்பிராயமேதொடங்கி நாம் பணிசெய்த பெருமையுபந்யாஸம்

மார்கழி ஸுதர்சனத்தின் நாலூரான்பகுதி முடிவில் "கூரத்தாழ்வானை யடியொற்றி பாலப்பிராயம் தொடங்கி பாகவதாபசாரத்......" என்று [அனுவதிக்கவும் தகாதபடி] வெகு ஸாஹஸமாக வெழுதியுள்ளதற்கு விரிவாக விடை தருவோம். ஸுப்ரஸித்த மஹா குணசாலிகளையும் அவலீலையாக நிந்திக்கின்ற அஸூயுக்களைப்பற்றி ஸ்ரீமத் வேங்கடநாதார்யர் அருளியுள்ள "நிரவதிகுணக்ராமே ராமே நிராகஸி" என்னும் ச்லோகரத்னத்தில், தூஷகர்களான அஸூயுக்களுக்கு ஆச்சரியமான விசேஷணமிடுகிறார் "வாகஸி ஸ்புரண முஷிதாலோகா:" என்று. 'தங்கள் நாவையே கத்தியாகக்கொண்ட அறிவிலிகள்' என்கிறார். [முஷித ஆலோகா:] விவேகம் விலகினால் இன்னது சொல்லலாம் இன்னது செய்யலாம் இன்னது எழுதலாம் என்று ஒன்றும் தோன்றாதன்றோ. *சிவாத் பரதரம் நாஸ்தியென்றதற்குப் பரிஹாஸமாக *த்ரோணமஸ்தி தத: பரமென்று கையெழுத்திட்ட கூரத்தாழ்வானை பாகவதாபசாரியென்றும், *சிவம் மஹாபாகவதம் ஸ்மராமி* என்று மஹாபாகவதனாக ப்ரஸித்திபெற்ற சிவபிரானை இழித்துரைத்த காரணத்தாலேயே அவர் கண்ணிழந்தாரென்றும் அநுவாதத்திற்கும் அநர்ஹமானவிதனைச் சில புண்ய ஜனங்கள் சொல்லியும் எழுதியும் வருவதுண்டு. அதை ஸுதர்சனமும் எழுதிவிட்டது. தான் செய்யும் அகாண்ட தூஷணங்களுக்கு அபிநந்தனம் செய்யாதவர்களையெல்லாம் பாகவதாபசாரிகளென்று நிந்திப்பதோடு நில்லாமல் அவர்களையெல்லாம் கூரத்தாழ்வானோடு ஒப்பிடும் முகத்தால் அஸஹ்யாபசாரப் படுகுழியில் வீழவும் துணிவுண்டாயிற்றந்தோ. "எனக்கு அப்படி விவக்ஷையில்லை. இப்படி விவக்ஷை; தூராந்வயத்தில் விவக்ஷை" என்று மழப்பப்புகும் ஸுதர்சனம். *என்று கொல் தோழிமீர்காள்* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் பாட்டினடியிலுள்ள (என்று கொல்) என்பது பாட்டின் முடிவில் அந்வயிக்கவில்லையா? *தன்னையுற்றாட் செய்யுமென்கிற நூற்றந்தாதிப் பாசுரத்தில் "இராமானுசன் குணம் சாற்றிடுமே* என்று பாட்டின் முடிவில் வினைமுற்றுப் போலுள்ளது எங்கேயோ போய் அந்வயிக்கவில்லையா? என்று சில குத்ஸிதவாதங்களும் செய்யக்கூடும். ஸுதர்சனஜ்ஞாதியொருவர் "கேசவ: பாண்டவாந் ஹந்தும் கௌரவாந் ரக்ஷிதும் க்ஷிதௌ, அவாதரத் ததா ஸாதூந் ஹந்தும் துஷ்டாந் ஸுரக்ஷிதும்"* என்றொரு ச்லோகம் செய்து துமுன்களுக்கு அந்வயக்ரமம் காட்டின தோடொக்குமிது. இது நிற்க.

*காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தரும்மிடுக்கி லாத தேவரை, ஆணமென்றடைந்து வாழும் ஆதர்காள்!* என்றுரைத்த திருமழிசைப் பிரானையும், *கூடுமேல் தலையையாங்கே யறுப்பதே கருமங்கண்டாயரங்கமாநகருளானே!* என்றுரைத்த தொண்டரடிப் பொடியாழ்வாரையும், *வரத! ஸுகதபாசச் சோராலாவம் விலாவ்ய:* என்றருளிய பட்டரையும் பாகவதாபசாரிகளென்று பிரசாரம் செய்வார்க்கு இந்த ப்ரசாரம் வியப்பன்றே. கூரத்தாழ்வான் திருமாலிருஞ் சோலையழகரைத் துதித்து முடிக்குமிடத்து "யோக்யதாவிரஹிதாந் உத்ஸார்ய* என்பதனால் யோக்யதையற்றவர்களைத் தொலைக்கவேணுமென்று வேண்டினது பாகவதாபசார பரிபாடிதானும். அபசாரலேசமு மற்றது ஸுதர்சனமொன்றேயாம். ராமஸ்வாமி க்ருஷ்ணஸ்வாமிகதை கேண்மினிங்கு. ராமஸ்வாமி மிகச்சிறந்த உதாரர். மஹாவிவேகி. எல்லாரிடத்திலும் ஸமபாவனையுள்ளவர். அவர் தமது வீட்டில் ஒரு சுபகாரியம் நடத்தினர். பூரிதக்ஷிணைகொடுக்கும் ஸமயத்தில் எல்லார்க்கும் ஒரு நிகராக ஒரு ரூபா தக்ஷிணை கொடுத்து வந்தார். அங்கே இருந்த கிருஷ்ணஸாமி தமக்கு விசேஷஸன்மானம் கிடைக்குமென்று எதிர்பார்த்திருந்தார் போலும். நிஷ்பக்ஷபாதமாகக் கொடுக்கும் ராமஸ்வாமி அவர்கையிலும் ஒரே ரூபா கொடுக்கவே கனத்த கோபாவேசம்கொண்ட கிட்டு விரைந்தெழுந்து கத்தினர்— "ஆத்மஸ்துதியும் பரநிந்தையும் பொருளாசையுமில்லாத எனக்கு ஒருரூபா, இந்த விதவா புத்திரர்களுக்கும் ஒரு ரூபாயா" என்று. இந்தவாக்கியத்தை ஊன்றி நோக்காமல் மேலெழப் பார்த்தாலே போதும். தனக்கு அதிகப்படியான பொருள் கிடைக்கவில்லையே யென்கிற வயிற்றெரிச்சலினால் எழுந்து கத்துகிற கிட்டு பொருளாசையில்லாதவராம்; அங்குள்ளவர் களையெல்லாம் விதவாபுத்திரர்களென்று நிந்திக்குமிவர் பரநிந்தையில்லாதவராம்; மேற் சொன்ன வாக்கியத்தினால் தன்னைத்தானே புகழ்ந்து கொள்ளுமிவர் ஆத்மஸ்துதியில்லாத வராம். இவ்வகையிலே பேசக்கற்றவர்கள் பலருளர். அன்னவர்களில் தலைவர் இன்னு ரென்பதை உலகமறியும். அல்லும் பகலும் பாகவதநிந்தை, பாகவதபரிஹாஸம், மஹநீய மஹாத்மோபாலம்பம், அஸஹ்யாபசாரம் ஆகிய இவற்றிலே பழுத்துக்கொண்டு, உலகம் போற்றும் பெரியார்களையும், தனது புல்லுரைகளைப் புகழாத புனிதர்களையும் பாகவதாப சாரிகளாகப் பிரசாரம் செய்துகொண்டு மனமொழிமெய்களாகிற முக்கரணங்களிலும் அபசாரமூட்டைகளை யேற்றிக்கொண்டு சோசநீயஸ்திதியில் நிற்குமழகே அழகு.

அஸ்மத்குலகூடஸ்தர் "ப்ரஸித்த: பரகோஷ்டீஷு ப்ரதிவாதிபயங்கர:, ஸ்ரீவைஷ் ணவாநாம் கோஷ்டீஷு தத்தாஸ இதி விச்ருத:"—என்று அநுஸந்தித்தது ப்ரஸித்தம். ஆண்டாள் திருப்பாவையில் "செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யுங் குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே!" என்று சொல்லி ஒருத்தியை விளிக்கிறாள். திருவாய்ப்பாடியில், சென்று செருச் செய்து செற்றார் திறலழித்த கோவலர் யாவரென்று கேள்வி வரின், கண்ணபிரானுடைய பெருமையைப் பொறாத த்ரோஹிகளைத் தகர்க்கவல்ல மிடுக்குடையார் கோகுலத்தவர்கள் அனைவருமேயென்று சொல்லிவிடலாம். ஆனால் பாசுரத்தை ஆழ்ந்து உற்று நோக்கினால் உள்ளுறை பொருள்வகையில், திருவாய்ப்பாடிச் செய்தியைச் சொல்லுவதுமட்டுமன்றிக்கே பொதுவாக ப்ரதிபக்ஷிபக்ஷப்ரதிக்ஷேபத்தில் ப்ரவீணர்களான வித்வான்களை *சென்று செருச் செய்யுங் கோவலர்* என்பதனாலே சொல்லி, அவர்களது திருவடி வாரத்தைவிட்டுப் பிரியாதே சிஷ்யவ்ருத்தி செய்யுமவர்களைப்

பொற்கொடியாகச் சொல்லுகிறதென்றும், அந்த ப்ரதிபக்ஷி நிரஸனத்தில் ஸம்பாவிதமான குற்றங்களில் ஒன்றுமில்லாமலிருக்க வேண்டுமென்பதை "குற்றமொன்றில்லாத" என்கிற அடைமொழி காட்டுகின்றதென்றும் அறியலாகும். வாதத்தில் என்ன குற்றம் ஸம்பாவிதமாகுமென்னில்; நிக்ரஹஸ்தானமென்று சாஸ்த்ரஜ்ஞர்கள் விவரிக்கிற குற்றங்களுண்டு; தவிர, *குரும் த்வங்க்ருத்ய ஹுங்க்ருத்ய விப்ரம் நிர்ஜித்ய வாதத:, ச்மசானே ஜாயதே வ்ருக்ஷ: கங்கக்ருத்ராதி ஸேவித:* என்கிற ப்ரஸித்த ப்ரமாண வசனத்தில் (*விப்ரம் நிர்ஜித்ய வாதத:* என்பதனுல்) காட்டப்படுகிற குற்றம் பலிஷ்டமானது. நம்முடைய பூர்வாசாரியர்கள் உபதேசமுகத்தாலும் க்ரந்தமுகத்தாலும் நிலைநாட்டியருளின மஹார்த்தங்களைப் பிறர் தூஷித்தால் அவற்றைக் கண்டனம்செய்து தத்வார்த்தங்களை ஸ்தாபிக்கவேண்டியது அத்யாவச்யகமென்றும் அது குற்றமன்றென்றும் மஹான்கள் முடிவு செய்தார்கள். இத்தகைய கண்டனங்கள் ஆளவந்தார்காலத்திலிருந்து ஸதாசார்ய பரம்பரையில் வந்துகொண்டே யிருக்கின்றன. இதை நாம் விசேஷித்துச் செய்து போருகிறோம். இங்ஙனே கண்டனங்கள் செய்வது பாகவதாபசாரமென்றுகொண்டு, கூரத்தாழ்வானைப்போலே நாம் இளமை தொடங்கியே பாகவதாபசாரப்பட்டு வருவதாக நாலூரான்வியாஸம் நிகமிக்கின்றது. இங்கே நாம் விரிவுக்கஞ்சாமல் பலபல விஷயங்களை மத்யஸ்தர்களான மநீஷிகளுக்கு நினைவூட்டுகிறோம். "தமது சுயசரிதையில் தாமே வெட்கமில்லாமல் வெளியிட்டுக்கொண்டவர்" என்றும் (ஸுதர்சனம்) எழுதியிருப்பதனுல் "தானேயெழுதிய தன் சரிதை" என்னும் பெயரால் உலகம் பரவியுள்ள நமது சுயசரிதையைக் கண்டபாடம் செய்திருக்கும் பாக்கியமுடைமைக்கு மிக மகிழ்கிறோம். அந்த சுயசரிதை 13—1—1956ல் அச்சிட்டு வெளியிடப்பட்டதாதலால் இற்றைக்குச் சரியாகப் பத்தாண்டுகள் பூர்த்தியடைந்தன. ப்ரக்ருதத்திற்குவேண்டிய விஷயங்கள் யாவும் அதில் நிரம்பியுள்ளனவாதலால் "அதிலே கண்டுகொள்வது" என்றெழுதி நாம் முடித்துக் கொள்ளலாம். ஆனுலும் அது வழியன்று. முக்கியமான விஷயங்களை யெடுத்துக் காட்டவேண்டியதேயாகிறது. அதற்குமுன்னுல் இரண்டொரு வார்த்தை கேண்மின்;

நன்னூலாசிரியர் பொதுப்பாயிரத்தில் (சூ. 52) "தோன்ருு தோற்றித் துறைபல முடிப்பினும், தான் தற்புகழ்தல் தகுதியன்றே" என்று, தன் பெருமைகளைத் தானே கூறிக்கொள்ளுதல் தகுதியற்றதென்று முன்னஞ் சொல்லி, உடனே (53) "மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கினும், தன்னுடையாற்ற லுணராரிடையினும், மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும், தன்னை மறுதலை பழித்தகாலையும், தன்னைப் புகழ்தலுந் தகும் புலவோற்கே" என்ருர். ராஜஸபைக்கு விடுக்கும் சீட்டுக் கவியிலும், தனது கல்வி வலிமையை யறியாதாரிடத்திலும், சபையில் வாதஞ்செய்து வெற்றிபெறவேண்டும் ஸமயத்திலும், தன்னை எதிரி இகழ்ந்து பேசிய காலத்திலும் தனக்குள்ள பெருமைகளை ஸுடு கூறுதல் உரியதேயாமென்பது இதன் பொருள். திருவடி இராவண ஞேடு பேசும்போது "மத்த: ப்ரத்யவர: கச்சித் நாஸ்தி ஸுக்ரீவஸந்நிதௌ" [ஸுக்ரீவ கோஷ்டியில் நானே கடை கெட்டவன்] என்று தம்முடைய நைச்சியத்தைச் சொல்லிக் கொண்டார். அவர் தாமே கடற்கரையில் வானர ஸைன்யங்களினிடையில் "பங்காசக மாகாசே பதந்தம் பக்ஷிஸேவிதே, வைநதேயமஹம் சக்த: பரிகந்தும் ஸஹஸ்ரச:" என்று தம்முடைய அளவுகடந்த ஆற்றலை ஆவிஷ்கரித்துக்கொண்டார். இத்திருவடி ராவண

னிடத்தில் தன் பெருமையைத் தாராளமாகச் சொல்லிக்கொண்டிருக்கலாமே; எதற்காகச் சிறுமையைச் சொல்லிக்கொண்டாரென்னில், 'இத்தனை ஜகன்யமான குரங்கே லங்கையை இப்பாடுபடுத்திற்றே; மற்றைக் குரங்குகள் என்னபாடுபடுத்துமோ!' என்று அவன் இடிவிழுந்து போவதற்காகவே யென்க. ஆக இவ்வளவால் இத்தகைய ஸமயவிசேஷத்தில் நம்முடைய ஆற்றலை உண்மைக்கு மாறில்லாமல் உள்ளபடியுணர்த்துதல் உரியதே யென்றதாயிற்று.

அடியேனுடைய சுயசரிதை 412 பக்கங்கள் கொண்டது. இதில் 280 பக்கங்களோடு சுயசரிதை முடிக்கப்பட்டது. அதற்குமேல் 132 பக்கங்களில், அடியேன் நான்கு பாஷைகளிலுமியற்றிய நூல்களைப்பற்றின விவரணங்களையே விளக்கியிருக்கின்றேன். இது பத்து வருடங்களுக்குமுன்னே விளக்கினதாதலால் அந்தஸமயம் வரையில் அடியே னெழுதி வெளியிட்ட நூல்கள் 470 என்று ஒவ்வொரு நூலின் பெயரையும் தனித்தனியாகக் குறிப்பிட்டு அவ்வவற்றிலுள்ள விஷயங்களின் ஸாரத்தையும் 132 பக்கங்களில் உலகுக்கு ஊட்டியிருக்கின்றேன். இந்த நிரூபணம் தொடங்கினது (சுயசரிதையில்) 281ஆம் பக்கத்தில். [சுயசரிதை வாக்கியங்கள்.] ஆரம்ப வாக்கியங்களைமட்டும் இங்கெடுத்துக் காட்டுகின்றேன்;

**"அடியேனுடைய நூல்கள் பன்னிரண்டு துறைகளில் தோன்றியுள்ளன;"**

அவையான:—

1. பூர்வாசார்யர் பெருமையுரைத்தல்.
2. இதிஹாஸபுராணசரித்திர முரைத்தல்
3. உபந்யாஸகர்களுக்கு உதவியான உபந்யாஸங்கள் வரைதல்.
4. வேதாந்த விளக்க நூல்களிடுதல்
5. நான்கு பாஷைகளிலும் திவ்யப்ரபந்தங்களுக்கு உரையிடுதல்.
6. ஆசாரியர்களின் வடமொழி தென்மொழி நூல்களுக்கு உரையிடுதல்.
7. ரஹஸ்யார்த்தவிளக்க நூல்களிடுதல்
8. ஸ்தோத்ர நூல்களுக்கு உரையிடுதல்.
9. வேத லக்ஷண விசார நூல்களிடுதல்.
10. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்களிடுதல்.
11. லோகாபிராம நூல்களை யெழுதுதல்.
12. பரபக்ஷ ப்ரதிக்ஷேப நூல்களிடுதல்.

ஆக இப்பன்னிரண்டு துறைகளிலும் நான்குபாஷைகளிலும் அமைந்திருக்கின்ற நமது நூல்கள் நாற்றிசையிலும் பரவியுள்ளன. இவற்றுள் பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்களைமட்டுமே நமது தேசஸ்தர்கள் பெரும்பான்மையாகப் பார்ப்பர்கள். மற்ற பதினொருதுறைகளில் அமையும் நூல்களில் இவர்களுடைய கடாக்ஷ பாதம் விசேஷமாக ஏற்படுவதில்லை. வாதவிவாத நூல்களை மட்டும் பார்த்துவிட்டு "வீணாக இவ்வளவு விவாத நூல்களை எதற்காக எழுதவேண்டும்?" என்று சொல்லுபவர்கள் சிலரோ பலரோவுள்ளார்கள். ஒவ்வொரு விவாத நூலும் தோன்ற வேண்டிய காரணத்தையுணரும் விவேகிகளுக்குப் பரமதருப்தி விளைந்தே தீரும். ஸ்ரீராமபிரானைப்பற்றி யருளிச்செய்கிற நம்மாழ்வார் திருவாய்மொழியில் "வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதகமணித்தடம்" என்றார். கண்ணனைப்பற்றி யருளிச்செய்கிற பெரியாழ்வார் "தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப் பூடுகளடங்கவுழக்கி" என்றார். இவற்றைக் கொண்டு ஸ்ரீ ராமனையும் ஸ்ரீக்ருஷ்ணனையும் வம்புச் சண்டைக்காரர்களென்று யாரும் சொல்லுவதில்லை. தாமாகவே மடிந்து போக வந்து சேருகிற விரோதி வர்க்கங்களைக் களைந்தொழிக்க வேண்டுவது கடமையாகிறதன்றோ? அடியேனுடைய வாழ்க்கையில் எவ்வெவ்விதமாக எத்தனை விவாதங்கள்

நேர்பட்டனவென்பதை அறிந்திருப்பவர்கள் பலருளரெனினும் அவர்களும் காலவிப்ரகர்ஷத்தாலே அவற்றை மறந்தேயிருப்பர்கள். அடியேனும் மறந்து போயிருக்கிறேன். வெளியிட்ட நூல்களை யெடுத்துப் பார்க்கும்போதுதான் ஒவ்வொன்றும் நினைவுக்கு வருகின்றது. எடுத்துப்படிக்கும் போது உண்மையில் அடியேனுக்கே விஸ்மயமுண்டாகிறது. இவ்வளவு விசேஷங்களா நடந்திருக்கின்றனவென்று அபூர்வ விஷய விஜ்ஞானத்திற்போல் வியப்புண்டாகிறது எனக்கே.

அன்பர்களே! மேலே குறித்த துறைகளில் பன்னிரண்டாவதான பரபக்ஷப்ரதிக்ஷேபத்துறையில் மட்டும் தோன்றிய சிறுநூல்களும் பெருநூல்களும் நூற்றுக்கு மேற்படவேயிருக்கும். நூலாகவல்லாமல் வியாஸங்களாயுள்ளவை இருநூறுக்கு மேற்படவிருக்கும். சில விவாதங்கள் சில மாதங்களே நடந்து ஓய்ந்தவை. சில விவாதங்கள் வருஷக்கணக்கிலும் ஓடியிருக்கின்றன. பலவாண்டுகள் தொடர்ந்து நடந்த விவாதம் (வைகுண்டவாஸியான) ஸ்ரீமத் கோழியாலம்ஸ்வாமி யொருவரோடேயாயிற்று, இது சுயசரிதையில் வெகு விரிவாக எழுதப்பட்டுள்ளது. அந்த ஸ்வாமியோடு பலபல விஷயங்களில் விவாதம் விளைந்தபடியால் சுயசரிதையில் ஸ்வகீயக்ரந்த விவரணப்பகுதியில் பெரும்பாகம் அவருடைய ப்ரஸ்தாவமே மலிந்திருக்கும். அவரோடு நேர்ந்த பல விவாதங்களுள் முதன்மையான விவாதத்தைமட்டும் இங்கு விளக்க விரும்புகின்றேன். [ஸுதர்சனத்தின் நித்யசிந்தனையில் திகழும் எனது சுயசரிதையிலிருந்தே விளக்கப்படுகிறது. இப்போதாக எழுதுவது அணுவளவுமில்லை. அந்த சுயசரிதையும் அந்த கோழியாலம் ஸ்வாமி ஐந்தாறு வருஷம் ஜீவித்திருந்து சிஷ்யர்களோடுங்கூடப் பலகால் கடாக்ஷித்தருளினதே.

ரஹஸ்யத்ரயஸாரத்தில் *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:......இதி மந்தைரிதம் ப்ரோக்தம் ஸ்ரீமச்சப்த விரோதத:* இத்யாதி வஷட்காரங்கள் ஆச்சான்பிள்ளையை நோக்கித் தோன்றியவை. ஆச்சான்பிள்ளை தமது ரஹஸ்யமொன்றில் "அவனுமிவளுங்கூடி உபாயமென்னில் சரணங்கள் இரண்டென்னவொண்ணுது, நாலென்னவேணும்." என்றருளிச் செய்திருக்கிறுர். அதை ஸேவித்த வேதாந்தவாசிரியர் இது மந்தப்ரோக்தமென்றும் க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யமென்றும் சுலோகம் பண்ணி யெழுதிவிட்டார். 'இது ஆச்சான் பிள்ளையின் திருவுள்ளத்தை யதாவத்தாக க்ரஹியாமல் ஸஹஸா தூஷித்தெழுதியது' என்று பீடிகையிட்டு விசதமாக வுபபாதித்திருந்தேன்யான் பாதுகாஸஹஸ்ராவதார தத்வமென்கிற எனது வடமொழி நூலில். அந்நூல் வெளியிட்டு 37 வருஷமானுலும் இற்றைக்கும் பல வித்வான்களின் திருமாளிகைதோறும் விளங்கா நிற்பதே. 42 பக்கங்கள் கொண்ட அந்நூலில் 14 முதல் 19 பக்கம் வரையில் இந்த விசாரம் காணத்தக்கது. இந்த நூல் பிரசாரமடைந்தகாலத்தில் கோழியாலம் ஸ்வாமி கோயிலில் வாஸம் செய்துவருகிறுர். அங்கே அடியேன் விடைகொள்ள நேர்ந்தபோது அந்த கோழியாலம் ஸ்வாமிபாடே இந்த விசாரம் ப்ரஸக்தமாக, [அன்பர்களே! இங்குத் தெரிவிக்கவேண்டிய விஷயம் சுயசரிதையில் பக்கம் 330ல் வெளியாகியுள்ளது; கோழியாலம் ஸ்வாமியும் ஐந்தாறு வருஷம் ஜீவித்திருந்து கடாக்ஷித்தது. அவ்விடத்துப் பங்க்தியையே எடுத்தெழுதுகிறேன்—;

"இவ்விஷயத்தில் ப்ரதிவாதம் செய்தருள முன்னின்ற ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி ஸ்ரீரங்கத்தில் திருக்காவிரிக்கரையில் அடியேனேடு சர்ச்சை செய்கையில் *க்ரந்தஜ்ஞைரபஹாஸ்ய மென்றவிடத்திலுள்ள ஸாராஸ்வாதிநி பங்க்திகளை நான் ஸமர்த்தனம் செய்யாமற்போனுல் த்ரிதண்ட சிகாயஜ்ஞோபவீதங்களைத் துறந்து அத்வைத ஸந்யாஸியாகக் கடவேனென்று

ப்ரதிஜ்ஞை செய்தருளினரென்பதை ப்ரக்ருத விஷயகங்களான அடியேனுடைய ஸகல நூல்களிலும் அப்போதே வெளியிட்டிருக்கிறேன். *ப்ரஹ்மேசாதி ஸுரவ்ரஜஸ் ஸதயித: த்வத்தாஸ தாஸீகண:* என்கிற ஆளவந்தார் பிரயோகத்தை யெடுத்துக்காட்டியபின்பே கோழியாலம் ஸ்வாமிக்குத் தெளிவு ஏற்பட்டது.''

இத்யாதி பஹுபங்க்திகளை சுயசரிதையில் முன்னும்பின்னும் விஷயங்களோடு காணலாம். [இங்கு முக்கியமான விஷயம் கேளீர்.] அப்போது மறுப்பெழுதாநின்ற கோழியாலம் ஸ்வாமி ஆரம்பத்திலேயே எழுதினர்—தேசிகன் பிள்ளைலோகாசார்யருடையவும் ஆச்சான் பிள்ளை முதலான ஸ்வஸமகாலஸ்தர்களுடையவும் ரஹஸ்யார்த்த வாதங்களை சததா ஸஹஸ்ரதாச கண்டித்துவிட்டார். அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் ஒருவரும் அவைகளை மறுத்தெழுத நெஞ்சாலும் நினைத்ததில்லை—இத்யாதி. மணவாளமாமுனிகள் தமக்கே அஸாதாரணமான பரமமதுரகம்பீரோதாரஸரணியில் நிலைநாட்டியருளாத ஸதர்த்தமில்லையென்பதை அவர் எங்ஙனேயறியமுடியும். அடியேனுடைய நூல்களால் தெளிவுபெறவேண்டியே அவர் அங்ஙனம் எழுதிவைத்தார். அவர்க்காகவே பலபல நூல்கள் அடியேனெழுதி வெளியிடநேர்ந்தது. அவற்றுள் சிகரமான விஷயமே இவ்வுபந்யாஸ சதத்வயத்தில் 191 லக்கமுள்ள உபந்யாஸமாக எழுதிப் பிரசுரஞ் செய்திருக்கிறேன். பக்கம் 101 to 104 காணலாம் கண்ணுடையார்.

மாம்பலம் மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி தமது வேதாந்ததீபிகையில்—'ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் பல ப்ரக்ஷேபங்களுண்டு; *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:......இதி மந்தை ரிதம் ப்ரோக்தம்* இத்யாதிகள் ப்ரக்ஷிப்தமென்றே பெரியார்களின் ஸித்தாந்தம்'—என்றெழுதினர்; இப்படியெழுதினதற்காக அந்த மஹர்ஷி ஸ்வாமியை நவீனர்கள் பலர் நிந்தித்தார்கள். இந்த விஷயமும் சுயசரிதையில் (பக்கம் 331ல்) ஏறியேயுள்ளது. அப்போது நடந்த வாதப்ரதிவாதங்களில் கோழியாலம் ஸ்வாமி மட்டுமேயன்று; அவருடைய சிஷ்யர்கள் அபிமாநிகள் என்னும்படியான பலபலர் யதாசக்தி அந்வயித்தார்கள். சேட்லூர். நரஸிம்ஹாசாரியர், திருச்சி ஏ. வி. கோபாலாசாரியர்; R. V. கிருஷ்ணமாசாரியர் ஆகிய மூவர் மட்டும் க்ஷமாப்ரார்த்தனையை உலகமறிய வெளியிட்டு விலகிநின்று ஸௌஹார்த்தத்தை யதாபூர்வம் வளரச்செய்து கொண்டார்கள். லஜ்ஜாவிவசர்களாய் க்ஷமாப்ரார்த்தனையின்றிக்கே விச்ராந்தரான வித்வான்கள் இற்றைக்கும் பலர் வாழ்ந்திருக்கின்றனர். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. (வர்த்தமான) ஆண்டவன் சோபக்ருத்வுு பங்குனித்திங்களில் கச்சிப்பதியிலே வித்வத்ஸதஸ்ஸு நடத்தினபோது ஒருநாள் காலையில் உபஸ்திதர்களான வித்வான்களையெல்லாம் நோக்கி "உங்களுடைய வாதங்களுக்கெல்லாம் அண்ணங்கராசாரியர் ஒருவர்தானே ப்ரதிவாதம் செய்தவர்" என்று கேட்டருளினராம். [அப்போது அங்கு அடியேனில்லை.] ஆண்டவன் பூர்வாச்ரமத்திலும் இவ்வாச்ரமத்திலும் அடியேனெதிரில் சில ஆப்தர்களிடம் பலகால் ஸாதித்ததொன்றுண்டு—"அண்ணங்கராசாரியரோடு எதிரம்பு கோக்காமல் தப்பித்துக் கொண்டவர்கள் நானும் நவநீதம் ஸ்வாமியுமே" என்று. (நவநீதம் ஸ்வாமியென்பது வைகுண்டவாஸியான உப்பிலியப்பன் ஸன்னிதி. க்ருஷ்ணமாசார்ய மஹாஸ்வாமியை.)

இவ்வுபந்யாஸத்தை உபஸம்ஹரிக்கிறேன்; *அஸதாம் கர்வோபி நிர்வாபித:* என்று ஸ்வாமி ஸாதித்தகணக்கிலும், *யதாசக்தி நிக்ருஹ்ணீயாத் தேவதா குருநிந்தகாந்*

என்று சாஸ்த்ரம்சொன்ன கட்டளையிலும் அடியேன் பாலப்பிராயமே தொடங்கிச் செய்திருக்கிற தொண்டுகளை ஸுதர்சனமே பலகால் புகழ்ந்தெழுதியுள்ளது. எப்போது? எதிரியாகவேண்டிய விதி தனக்கு ஏற்படுவதற்குமுன்னே. பாயஸத்தைக் கையேந்திப் பருகுமவர்கள் 'அஹஹ! என்ன மதுரம்! என்ன மதுரம்!!' என்று புகழ்ந்துகொண்டே பருகுவர்கள்; கைசுட்டவாறே வடுக்கென்பர்கள். இது உலகவியல்பேயன்றோ. (198)

## 199. அடியேன் புகழ்ந்தவர்களும் அடியேனைப் புகழ்ந்தவர்களும்.

ஸுதர்சனத்தின் நித்யாநுஸந்தானமான எனது சுயசரிதையில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளைப்பற்றிப் பத்து வருடங்களுக்கு முன்பு நாம் எழுதி வெளியிட்டிருப்பதை உலகம் கண்டிருக்கின்றது, ஸுதர்சனமும் நித்யசிந்தனையில் கொண்டிருக்கின்றது. அதையெடுத்துப் பிரசுரித்து முன்னமே நம்மைப் பழித்திருக்கவேண்டிய ஸுதர்சனம் இப்போதாக "கல்கியில் அப்படி, விகடனில் இப்படி, தினமணியில் உப்படி" என்று *ஸந்தாபபரீ ஸ்வம் தேஹம் ஆபாத தலமஸ்தகக் கணக்கிலே கொதித்தெழுதுவது எதனாலென்பதை உலகமுணராததன்று. சுயசரிதையில் பக்கம் 214ல் ஆரம்பித்து ஸ்ரீமதஹோபில மடாதிபதி ஸ்ரீபரகால மடாதிபதிகளோடுண்டான தொடர்பையெழுதிவருகையில் (பக்கம் 220ல்) காமகோடி பீடாதிபதிகளின் திருவுருவப்படத்தை வெளியிட்டு எழுதியுள்ளது இது காணீர்;—

"அடியேன்பால் பரமக்ருபையுள்ளவர்களும், அடியேனுடைய பரமபக்திக்குப் பாத்ர பூதர்களுமான மடாதிபதிகளின் ச்ரேணியில் ப்ரதமஸ்தானம் காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான பெரியவாளுடையதே யாகும். இப்பெரியவாளைப்பற்றித் தெரிந்து கொள்ளாதவர்கள் பூமண்டலத்திற்குள் எந்த ப்ராந்தத்திலு மிருக்கமாட்டார்கள். த்வீபாந்தரத்திலுள்ளவர்களுங்கூட ஸ்ரீ ஸ்வாமிகளின் வைபவங்களைக் கேட்டு வந்து பணிந்து போகின்றார்களென்றால் பாரதவர்ஷே பரதகண்டே ஜம்பூத்வீபே உள்ளவர்களைப்பற்றிச் சொல்லவேண்டிய துண்டோ? மூன்று நான்கு வருஷமாகக் காஞ்சீபுரியில் அடியேனுடைய வீதியின் ஸமீபத்திலேயே ஸ்வாமிகள் விஜயம் செய்திருப்பதால் தினப்படியாக ஸ்ரீ பாதஸேவைக்கு வந்து போகும் லௌகிகவைதிகப் பெரியார்களை அநவரதம் கண்டு கொண்டிருக்கிறேன். ஸ்வாமிகளிடத்தில் அத்புதமான தெய்வசக்தி விளங்குகின்றதென்றே அனைவரும் அபிப்ராயப்படுகிறார்கள். பரத்வத்திற்கோ எல்லையில்லை; ஸௌலப்யத்தைப் பார்த்தாலோ பரத்வலேசமுமிருப்பதாக நினைக்கவே முடியாது. ஸ்வாமிக்கு அத்வைதஸித்தாந்தத்தில் அபிநிவேசமிருந்தாலும் இதரஸித்தாந்தங்களில் அப்ரீதிலேசமும் கிடையாது. எந்த மதஸ்தர்களாயிருந்தாலும் அவர்களிடத்தில் யோக்யதை சிறிது கண்டாலுங்கூட ஹார்தப்ரீதியைச் செய்வது ஸ்வாமிக்கு இயல்வாக அமைந்தது. அந்தந்த மதஸ்தர்கள் ஸ்ரீஸ்வாமியை அணுகும்போது 'இப்பெரியவாள் நம்முடைய மதத்தைச் சேர்ந்தவர் போலிருக்கிறதே' என்று தான் நினைக்கும்படியாயிருக்கும். இப்பெருமைகளெல்லாம் உலகர் பெரும்பாலும் அநுபவித்தவையும் அநுபவித்துக்கொண்டிருப்பவையுமாதலால் இங்கு நாம் விஸ்தரிக்கவேண்டிய அவசியமேயில்லை. வைதிகபத்ததியை

நிஷ்கண்டகமாக்கி ப்ரதிஷ்டாபனம் செய்வதிலும் வைதிகர்களை ஸர்வப்ரகாரத்தாலும் ஆதரிப்பதிலும் ஸ்வாமிக்கிருக்கும் ஆஸ்தை இணையற்றது. இரவும் பகலும் இது விஷய மான சிந்தையொன்றுதான் ஸ்வாமிகளின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டிருக்கின்றது. ஸர்வபூதஸுஹ்ருத்தான இப்பெரியவாளுடைய அப்ரதிம ஸௌஹார்தத்தை யான் பெற்றிருக்கிறேனென்பதைத் தனிப்பட்ட செருக்குடன் வெளியிட்டுக்கொள்ள விருப்ப முடையேன். இப்பெரியவாள் சென்றவருஷத்திற்கு முன் வருஷத்தில் ஐப்பசி மாதத்தில், நாடெங்குமுள்ள வைதிகர்களுக்கு [த்ரிமதஸ்தர்களுக்கும்] ஒரு கட்டளை யிட்டிருந்தார் கள்; அதாவது, "அவரவர்கள் தம்தமக்கு ஸௌகரியமான விடத்திலிருந்து கொண்டு தசோபநிஷத்துக்களைப் பாராயணம் செய்துவரவேண்டியது; சில பேர்களைக் கூட்டி அர்த்த ப்ரவசனமும் செய்ய ஸௌகரியமிருந்தால் அதையும் செய்வது" என்பதாக. இவ்வண்ணமான கட்டளை நம்முடைய வேத வேதாந்த வைஜயந்தீவித்யாலயஸ்தர் களுக்கும் கிடைத்திருந்தது. கட்டயின்படியே சிலர் அதைப் பாராயணம் செய்தார்கள். ஆஜ்ஞையில் அர்த்த ப்ரவசநமும் சேர்ந்திருந்தபடியாலே ஒவ்வோருபநிஷத்தின் ஸாரத்தை ஒவ்வொரு நாளில் ப்ரவசனம் செய்து வரவேணுமென்று சிலர் அடியேனைக் கேட்டுக்கொண்டார்கள். அதற்கிசைந்து அப்போது தினந்தோறும் பகலில் மூன்றுமணி முதல் ஐந்துமணி வரையில் நம்பிள்ளை ஸன்னிதியில் அந்த ப்ரவசனம் நடத்தப்பட்டு வந்தது. இதை முன்னடி ஸ்வாமிகளின் ஸன்னிதானத்தில் தெரிவித்து மடத்திலேயே இதை நடத்திவரலாமென்று நினைக்கிறேனென்றேன்; அதற்கு ஸ்வாமிகள் "இங்கு வேண்டாம்; நம்பிள்ளை ஸன்னிதியிலேயே நடக்கட்டும்; நானும் அவ்விடமே வந்து ச்ரவணம் செய்கிறேன்" என்று சொல்லி அப்படியே அந்த பத்து நாளும் 3 மணிக் கென்றால் இரண்டே முக்கால்மணிக்கே விஜயஞ்செய்து கொண்டிருந்ததைக் கண்டவர்கள் "இப்படி அஹந்தையும் மமதையுமற்ற மடாதிபதிகள் உலகிலுண்டோ?" என்று விஸ்மயஸ்திமிதரானார்கள். ஸ்ரீஸ்வாமிகளின் ஒவ்வொரு குணத்தையும்பற்றிப் பன்னி யுரைக்குகால் பாரதமாம். பகவத் கீதையில் நான்காமத்யாயத்தில் "யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி பாரத, அப்யுத்தாநமதர்மஸ்ய ததாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்" என்னும் ச்லோகத்தில் "ஆத்மாநம் ஸ்ருஜாமி என்பதற்கு *ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்* என்கிற கீதையின்படியே ஜ்ஞானிகளை யனுப்புகிறேன்" என்று அந்தரங்கப் பொருள் சொல்லுவ துண்டு; அதர்மம் தலையெடுத்து தர்மம் குன்றிப்போகிற காலந்தோறும் தர்மஸ்தாபநார்த்த மாக ஞானிகளை அவதரிக்கச் செய்கிறேன் என்று பகவான் சொல்லுகிறான். அப்படிப் பட்ட ஞானிகளில் தற்காலம் ஸ்ரீஸ்வாமிகளை ஒருவராக உலகம் மதிக்கின்றது. ஏறக் குறைய இருபது வருஷங்களாக ஸ்ரீஸ்வாமியின் பரமப்ரீதிக்குப் பாத்திரமாயிருந்து வருகிற யான் ஸ்வாமிகள் காஞ்சியில் நித்யவாஸமாக வந்து சேர்ந்த பிறகே "இவாள் ஜ்ஞாநவை ராக்ய நிதிகள்" என்றறியப் பெறலாயிற்று. [இவ்வளவும் சுயசரிதையில் 10 வருடங் களுக்குமுன் எழுதியது.]

இவ்வுபந்யாஸத்திற்கு "அடியேன் புகழ்ந்தவர்களும் அடியேனைப் புகழ்ந்தவர்களும்" என்று மகுடமிட்டிருக்கிறேனல்லவா? இவ்விரு வகுப்பிலும் அபரிமிதமான விஷயங்க ளுண்டெனினும், முதல் வகுப்புக்குக் காமகோடி பீடாதிபதிகளைக் காட்டினேன். இனி இரண்டாம் வகுப்புக்குச் சில பெரியார்களின் அருள்மொழிகளைக் காட்டுகின்றேன்.

சுயசரிதையில் 64, 65 பக்கங்களைப் பார்த்துவிட்டு 66 to 70 பக்கங்களை வாசித்துப்பார்க்க. இப்போது புதிதாகப் பார்க்கவேண்டாதபடி உலகம் பலகால் பார்த்ததேயானாலும் இந்த ஸந்தர்ப்ப விசேஷத்தில் நினைப்பூட்டுகிறவத்தனையே. [சுயசரிதையில் பக்கம் 66.]

"ஸ்ரீரங்கம் பெரியாச்ரமமென்கிற ஆண்டவனாச்ரமத்தில் ஸ்ரீமத் ஆக்கூராண்டவனுக்குப் பிறகு ஆஸ்தானத்தை அலங்கரித்தருளாநின்ற வர்த்தமான தென்பரையாண்டவன் ஸ்வாமியோடு அடியேனுக்குப் பரிசயமின்றிக்கே நேரில் ஸேவிக்கப்பெற்றதுமின்றிக்கே பத்ரவ்யவஹாரப்ரஸக்தியுமின்றிக்கே யிருந்தது. இப்படியிருக்கையில் 1951ஆ முடிவில் அந்த ஸ்வாமி ஸன்னிதியிலிருந்து அசிந்திதமாகவொரு ஸ்ரீமுகம் கிடைத்தது.

அதிலுள்ள விஷயம்—"தேவரீருடைய க்ரந்தங்களையும் வாக்விலஸிதங்களையும் ஸ்ரீஸ்வாமி கடாக்ஷித்தும் கேட்டும் மிகவுமுகந்தருளும்படியாச்சுது: தேவரீருடைய க்ரந்தங்களையெல்லாம் கடாக்ஷிக்க மிகுந்த குதூஹலமுண்டாகி யிருக்கிறது. அப்போதப்போது அனுப்பிக் கொண்டிருக்கும்படியாக நியமனம்" என்று ஸ்ரீகார்ய துரந்தரர் எழுதியிருந்தார். அந்த நியமனத்தை சிரஸாவஹித்து ஸ்ரீஸ்வாமியின் ருசியை யுணர்ந்து பத்தெட்டு க்ரந்தங்களை மட்டும் அனுப்பியிருந்தேன். வாதக்ரந்தங்களைக் கடாக்ஷிக்கவே ஆண்டவனுக்குத் திருவுள்ளமென்று தெரிந்து கொண்டு அவையும் சில அனுப்பியிருந்தேன். அவற்றையெல்லாம் கடாக்ஷித்தருளி அடுத்த வாரத்திலேயே அநுக்ரஹித்தருளின ஸ்ரீமுகம் அப்போதே பத்ரிகைகளிலும் சில நூல்களிலும் ப்ரசுரமாகியுள்ளது. அந்த ஸ்ரீமுகம் ஸம்ஸ்க்ருத வாங்மயம்; அதன் கருத்துச் சுருக்கம்—தேவரீரெழுதியுள்ள வாதக்ரந்தங்களெல்லாம் சாஸ்த்ரப்ரமாண உபபத்திகள் மலிந்தவையென்றும், எத்தனை தடவை வாசித்தாலும் ஆராவமுதமாய் விளங்குகின்றனவென்றும், ஸகல ரஸிக பண்டிதர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றனவென்றும் ஆண்டவன் ஆனந்தம் பொங்கி ஸாதித்ததாகவும், இப்படியே இன்னமும் அநேக க்ரந்தங்கள் அவதரித்துக் கொண்டிருக்க ஸகலவித ஸௌகரியங்களும் விளைய திவ்யதம்பதிகளை ப்ரார்த்தித்துக் கொண்டிருப்பதாகவும் ஆண்டவன் ஸ்ரீமுகத்திலுள்ளது. நம்முடைய க்ரந்தங்களுக்கு ஒரு மதிப்புரை தந்தருள வேணுமென்று நாம் அபேக்ஷித்ததில்லை; எதிர்பார்த்ததுமில்லை. "துர்விஜ்ஞாநஸ்வஹ்ருதயமஹோ தைவமத்ர ப்ரமாணம்" என்று (பாதுகாஸஹஸ்ரே) தேசிகனருளிச் செய்தபடி எம்பெருமானுடைய திவ்யஸங்கல்பமே யடியாகத் தோன்றிய ஸ்ரீமுகமென்றேவிது. "யதார்ஹம் கேசவே வ்ருத்திம் அவசா: ப்ரதிபேதிரே" என்ற கணக்கில் இங்ஙனே பல பெரியார்கள் அபிநந்தனம் செய்ய ப்ராப்தமாகியிருக்கிறது. ஆண்டவன் இப்படி ஸ்ரீமுகமருளினதற்காக மாத்ஸர்யசாலிகள் சிலர் அந்த ஸ்வாமியைப் பர்யநுயோகம் செய்ததாகவும் "உங்களைப்போலே அந்தரங்கஸாக்ஷியத்தை வஞ்சிக்க வேண்டிய ஆவச்யகதை எனக்கில்லை" என்று ஆண்டவன் அருளிச்செய்ததாகவும் பிறகு கேள்விப்பட்டதுமுண்டு. இந்த வாத விவாதங்களில் தலையிடாதவரான ஆண்டவன் ஸ்வாமி போல்வார் அபிநந்தநம் செய்தது வியப்பன்று; இந்த விவாதங்களில் தலையிட்டுக்கொண்டே யிருப்பவர்களுமன்றோ ஆத்மவஞ்சனம் செய்ய முடியாமல் உண்மையை யெழுதிவைத்திருக்கிறார்கள். அதையும் சுயசரிதை விவரித்துள்ளது. ... ❁

# 200. ஸுதர்சநப்ரபாவ நவரத்னமாலை

— உபந்யாஸசதத்வயத்தின் சரமோபந்யாஸம் —

முடிவாக ஒன்பது விஷயங்கள் விஜ்ஞாபிக்கிறேன். இவை நவரத்னமாகவும் நவநிதியாகவும் கொள்ளத்தக்கவை. [தத்பூர்வாங்க விஜ்ஞாபனங்கள் சில.] ஸ்ரீராமாநுஜன் இருநூறு மாஸபூர்த்திக்கு நினைவு மலராக இருநூறு உபந்யாஸமாலைகளை அன்பர்களுக்கு உபஹரிக்க உத்தேசித்த போது நெஞ்சில் கொள்ளாதவையும் யாத்ருச்சிகமாகவந்து புகுந்தவையுமான உபந்யாஸங்கள் நூற்றுக்கு மேற்பட்டவையாயின. இவ்வுபந்யாஸ சதத்வயத்தின் முற்பகுதியில் ஸ்ரீமதஹோபில கோபுர ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவ நிமித்தமாக எழுதநேர்ந்த 60 உபந்யாஸங்களும், இப்பிற்பகுதியில் 165ஆம் உபந்யாஸம் முதலாக எழுதநேர்ந்த முப்பத்தாறு உபந்யாஸங்களும் கேவல பகவதிச்சையாலே இதில் அந்வயித்தவை. அதிலும் 193ஆம் உபந்யாஸம்முதல் இவ்வுபந்யாஸம்வரையிலுள்ள எட்டு உபந்யாஸங்கள் என்னையுமறியாதவை. ப்ரதாபருத்ரீயத்தில் கதாநாயகனைக் கொள்ளப் பட்டவன் ஸாமாந்ய புருஷனேயாகிலும் அவனை ஒரு உத்தமநாயகனாக வைத்துப் பேசுகிற கவி உத்தமர்களுக்கு அமையவேண்டும் குணங்களை அவனிடத்து ஏறிட்டுப் பேசுகிறான். அதில் ஒரு சுலோகம் "பரிஹாஸேபி அநௌசித்யம்......காகதீந்த்ரோ ந ம்ருஷ்யதி" என்பது. 'பரிவாதேபி' என்று பாடாந்தரம். காகதீந்த்ர: என்று அந்த கதாநாயகனுடைய பெயர். அவன் [பரிவாதேபி அநௌசித்யம் ந ம்ருஷ்யதி] பிறரை ஏசவேண்டி வந்தாலும் அநுசிதமாக ஏசுவதை ஸஹியான்.=வாய்வந்தபடியெல்லாம் பேசியும் கைபோனபடி யெல்லாமெழுதியும் ஏசமாட்டான்; அப்படி ஏசுவதை ஸஹித்திருக்கமாட்டானென்கிறது. ஸுதர்சனம் அபேத்யமான விஷயங்களை வெளியிட்டுவிட்டு எவ்வளவு வைதாலும் க்ராந்திக ஸரணிக்கு ஒருவாறு ஏற்கும் என்று கொள்ளலாம். "தம்பிடிநாஸ்தி தடபுடல் ஜாஸ்தி" என்று சாமானியர்கள் சொல்லுகிற ரீதியில், விமர்சந ப்ரகாசித விஷயங்களிலே ஒன்றுக்குக் கூட வாய்திறவாமல் [வர்ஷசதமானாலும் திறக்க கில்லாமல்] ஸுதர்சனம் எழுதியுள்ளது—"தம் சுயசரிதையில் தாமே இதை வெட்கமில்லாமல் வெளியிட்டுக் கொண்டிருப்பவர்" என்று. என்ன வெளியிட்டுக்கொண்டிருக்கிறோம், என்ன அநௌ சித்யமதில்? வெட்கப்படவேண்டிய ப்ரஸக்தியென்ன? என்பதை மேலே விமர்சிப்போம். ஒரு பத்ரிகையை நடத்துபவர் எவ்வளவு கம்பீர ப்ரக்ருதியாயிருக்கவேண்டும். ஆங்கிலமுங் கற்று இப்படியா ஒரு பாஷை பயில்வது. வெட்கமில்லாமல் என்பது எவ்வளவு க்ராம்யமான வார்த்தையென்பதை இது அறியாதா? எதற்கு வெட்கப்பட வேண்டும்? யார் வெட்கப்பட வேண்டும்? என்பதை விமர்சிக்க சக்தியில்லையா? எதை யெழுதினாலும் காகிதம் தாங்கும்; பேனா எழுதும்; அச்சுவிழும்; என்பதே கொண்டு எழுதிவிடுவது அமரகோசத்தில் "ஜால்மோஸமீக்ஷ்யகாரீ ஸ்யாத்" [அஸமீக்ஷ்யகாரீ ஜால்ம:] என்னப் பட்டதற்கு ஏற்குமதே. தண்டகாரண்ய வாஸிகளான மஹர்ஷிகள் சக்ரவர்த்தி திருமகனாச்ரமத்திற்குவந்து குவிந்தபோது "ப்ரஸீதந்து பவந்தோமே ஹ்ரீரேஷாஹி மமாதுலா" என்று சொல்லித் தாம் மிகமிக வெட்கப்படுவதாக வெளியிட்டார் சக்ரவர்த்தி திருமகனார். பிராட்டியைப்பற்றிச் சொன்ன முராரி மஹாகவி "லஜ்ஜிதுமபி லஜ்ஜதே"

என்றூர். பிராட்டியினுடைய லஜ்ஜை ஸ்த்ரீப்ரக்ருதி ஸித்தமானது. பெருமாளுடைய லஜ்ஜையும், *திகசுசிமவிநீதம் நிர்தயம் மாமலஜ்ஜம்* என்றவிடத்து ப்ரதியோகி விதயா ஆளவந்தார் வெளியிட்ட லஜ்ஜையும் ஸ்வரூபாநுபந்தியாம். அஸ்மதாதிகள் லஜ்ஜிக்க வேண்டிய விஷயங்கள் ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரஸித்தம்.

## இனி நவரத்னமாலை நல்குவோம்.

முதல்ரத்னம் :—ஸுதர்சனத்தின் விதண்டாவாதங்களை அபிநந்திக்குமவர்கள் யாவர்! அபிபவிக்குமவர்கள் யாவர்? என்பதை தடஸ்தர்களன்றோ நிர்ணயிக்கக் கடவர்கள். திருச்சி ஸமீபத்தில் கரியமாணிக்கமென்பது அக்ரஹாரச்ரேஷ்டம். அவ்வூர்க்குத் திலகமானவர்–தென்திசைக்கே திலகமானவர் ஸ்ரீமதுபயவே. வி. வி. ஐயங்கார் ஸ்வாமியென்பவர். இப்பெரியார் மாமூலான உ. வே. அல்லர். உபயவேதாந்தங்களையும் கற்றுணர்ந்து நித்யம் ப்ரவசனமே போதுபோக்காயிருப்பவர். இவர் பாம்பே மஹா நகரத்தில் நெடுநாள் வாழ்ந்தகாலத்திலும் அங்கும் ப்ரவசன நிரதராகவேயிருந்தவர். ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களும் நன்கறிந்த இப்பெரியாரது பெருமையை அடியேனெழுதுவது திவாகரனுக்கு தீபங்காட்டுவதோடொக்கும். ஸுதர்சனத்தின் விதண்டாவாதங்களைப் பல பெரியார்களும் மறுத்ததுபோல இப்பெரியாரும் மறுத்தது வெளியாயிற்று. அதற்கு மேல் நிகழ்ந்த நிகழ்ச்சியை ஸுதர்சனமே வெளியிட்டது. என்ன வெளியிட்டது? தன்னுடைய நிருபணங்களை அந்த வி. வி. ஸ்வாமி ஊன்றிப்பாராமல் விபரீதாபிப்ராயங் கொண்டதாகவும், தன்னுடைய நிருபணங்களை அவர்க்கு நேரில் வாசித்துக்காட்டி அவருடைய மனத்தைத் திருப்பவெண்ணி தனக்கு உறுதுணையான ஒரு மஹாநுபாவரைக் கூட்டிக்கொண்டு கரியமாணிக்கம் சென்றதாகவும் எழுதிவிட்டு, மேலே

"இவர் காஞ்சி ஸ்வாமியிடத்தில் ஆசார்யப்ரதிபத்திவைத்திருப்பவர்; அதனாலேயே நம்முடைய நிருபணங்களைப் பார்க்கவும் மனமில்லாமலிருந்துவிட்டார்"

என்றெழுதிப் பிரசுரஞ்செய்திருக்கிறது. வெட்கமில்லாமல் எழுதுபவர் யாரென்பதை இங்குக் காணலாம். "வி. வி. ஸ்வாமி காஞ்சீ ஸ்வாமியிடத்தில் பக்ஷபாதியாயிருந்துவிட்டார்" என்று இலேசாக எழுதியிருக்கலாம். அல்லது தன் வாதங்களைக் கண்டித்தெழுதிய பல மஹான்களின் ப்ரஸ்தாவமே பண்ணுதுவிட்டதுபோல வி. வி. ஸ்வாமியின் ப்ரஸ்தாவமும் பண்ணுதுவிட்டிருக்கலாம். காஞ்சீ ஸ்வாமியிடத்தில் ஆசார்ய ப்ரதிபத்தி வைத்திருப்பவர் அந்த வி. வி. ஸ்வாமியென்று எம்பெருமானேயன்றோ எழுதுவித்தது. ஸுதர்சன குடும்பத்திற்கு நெடுநாளைய ஆப்தரும், உற்ருருறவினரில் ஒருவரென்னும்படியாகக் கலந்து பரிமாறுபவருமான வி வி. ஸ்வாமியை அடியேனிடத்தில் ஆசார்யப்ரதிபத்தி வஹித்திருப்பவராக எழுதிவைத்தது "அபந்தாநம் து கச்சந்தம் ஸோதரோபி விமுஞ்சதி" என்று பலகால் அடியேன் காட்டியுள்ள முராரி பணிதியை மெய்ப்பிக்கவில்லையா?

இரண்டாவது ரத்னம் ;—கீழே காட்டிய வி. வி. ஸ்வாமி ஒருவரேயா? நமது ஸம்ப்ரதாயம் தழைத்தோங்கும் தென்னுட்டிலே ஸம்ப்ரதாயச்ரத்தாளுக்களாய், விஷயங்களை க்ரஹிக்கவும் தரிக்கவும் உபபாதிக்கவும் வல்லவர்களான வ்ருத்தர்களும் யுவாக்களுமான பல பேர்களன்றோ 'ஸுதர்சனம் செல்லும்வழி ருஜுவானதன்று, மிகக் குடிலமானது' என்று கல்வெட்டும் செப்பேடும் செய்திருக்கிருர்கள். "அவையெல்லாம்

அவரவர்கள் எழுதினதல்ல; அண்ணங்கராசாரியருடைய மாறுவேஷப் பேச்சுவெள்ளங்கள்" என்று ஏற்கெனவே நான் எழுதியாயிற்றேயென்னும் ஸுதர்சனம். இது கண்ணைத் துடைத்துக்கொள்ளும் வார்த்தையேயத்தனை. ஸ்ரீ உ.வே. சென்னை ராவ்ஸாஹிப் S. ராகவையங்கார் ஸ்வாமி கலெக்டர் பதவியை வஹித்திருந்தவர்; 80, 85 பிராயங்களுக்கு மேற்பட்டவயதினர். அவர் தேவஸ்தான பத்ரிகையில் எழுதிக் கண்டித்தவர். திருவல்லிக்கேணியில் வாழும் பண்டிதரத்னம் திருக்கண்ணபுரம் ஸ்வாமி நேருக்கு நேராகவே தபால் மூலமாகவே வாதப்ரதிவாதங்களை நிகழ்த்தியவர். விட்டலாபுரம் வேங்கடாசாரியர் ஸ்வாமி லௌகிக வைதிக கலைகளில் மிக நிபுணர். அவரும் பல வியாஸங்களினால் கண்டித்தவர். அவர் ஸ்ரீரங்கத்திலேயே குடிவாழ்ந்தபோது தேவஸ்தான பத்ரிகையிலும் வியாஸங்களெழுதிக் கண்டித்தவர். இவர்களையெல்லாம் எழுதத் தூண்டியது நாமேயென்றும், விஷயங்களெழுதிக் கொடுத்ததும் நாமேயென்றும் பறை சாற்ற முன்வருகிறது ஸுதர்சனம். மஹா பண்டிதர்களையும் சிறந்த மேதாவிகளையும் ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளவல்ல ஆற்றல் அடியேனுக்குள்ளதாகச் செய்யும் பிரசாரம் போற்றத்தக்கதேயன்றி மறுக்கத்தக்கதன்றுதான்.

மூன்றுவது ரத்னம்;—(பெரிய திருமடல்) "தன்னுருவமாருமறியாமல் தானங்கோர், மன்னுங்குறளுருவின்மாணியாய், மாவலிதன் பொன்னியலும் வேள்விக்கண் புக்கிருந்து, போர்வேந்தர் மன்னை மனங்கொள்ள வஞ்சித்து நெஞ்சுருக்கி, என்னுடைய பாதத்தால் யானளப்பமூவடிமண், மன்னா! தருக" என்று வாய்திறந்து யாசித்தபோது அவன் வாமனனுடைய வடிவழகையும் பேச்சிலினிமையையுங்கண்டு பரவசனாகிக் கொடுக்க ஸஜ்ஜனான அளவிலே சுக்கிரன்வந்து (கம்பர்) *கண்டதிறத்தித்து கைதவமையா!, கொண்டல்நிறக் குறளென்பது கொள்ளேல், அண்டமுமண்டமகண்டமுமேனுள், உண்டவன்காணிது கண்டுகொளென்றான்* என்றபடியே 'தேவகாரியஞ் செய்யவந்த ஸாக்ஷாந் நாராயணன் காணிவன்' என்று கூற, அதற்கு மஹாபலி என்ன கூறினன்? "பாத்ரம் கிமஸ்மாத் பரம்" என்றான்; ஸாக்ஷாத் நாராயணனே என்னிடம் யாசகனாக வந்தானென்னில், இவனில் மிக்க ஸத்பாத்ரமுண்டோ? இவனுக்குத் தானம் செய்யும்என்னில் மிக்க பாக்யவானுண்டோ? என்றான். உண்மைதானேயிது. உலகத்திலுள்ள பண்டிதர்களுக்கெல்லாம் அடியேனே விஷய பிக்ஷையளிக்கிறேன், *ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி......ஸஹஸ்ரதா பவதீத்யாதி முக்தர்படியிலே அடியேனே அனேக விக்ரஹபரிக்ரஹம் பண்ணுகிறேன் என்றால், இங்ஙனே விரல் முடக்க வேறொரு வ்யக்தியில்லையென்று தேறுவதனால் "என்னில் மிகு புகழார் யாவரே?" என்ற நம்மாழ்வாரருளிச்செயல் அடியேனுக்கே உரியதன்றோ.

நான்காவது ரத்னம்;—விச்வாமித்ர முனிவர் தமது வேள்வியைக் காக்க இராமபிரானை வேண்டத் தயரத மன்னவனிடம் வந்தபோது *அஹம் வேத்மி மஹாத்மாநம்* என்றதில் "வஸிஷ்டோபி மஹாதேஜா:" என்று வஸிஷ்டமுனிவரை ஸாக்ஷியிட்டார். தமக்கு முரணாகச் சொல்லக்கூடிய வஸிஷ்டருங்கூட இதில் மூரணாகச் சொல்லகில்லார் என்பதற்காகவே 'வஸிஷ்டோபி மஹா தே ஜா:' என்று அவரை ஸாக்ஷியாக இட்டார் என்று ரஸிகர்கள் சொல்லிப் போருவதுண்டு. இந்த விசேஷார்த்தத்திற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாக ஸுதர்சனம் எழுதியுள்ள அத்புத ஸூக்தியென்னவென்றால் "ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமியும் என்னுடைய வாதத்தை ஒப்புக்கொள்ளமுடியா

தென்று மன்னார்குடியில் நேரில் கண்டபோது ஸாதித்துவிட்டார்'' என்பதாம். இதனால் என்ன பெருமையென்று நினைத்து இதை வெளியிட்டுக்கொண்டதோ ஸுதர்சனம்! 'ஒருவரும் அபிநந்திக்கவொண்ணாதபடி தத்தகபித்தக தாலேலோ பாடுகிறவன் நானொருவனே காண்மின்!' என்று லோகாதீதப்ரபாவம் தனக்குள்ளதாகக் காட்டிக்கொண்டபடி.

ஐந்தாவது ரத்னம்;—உலகில் அச்சுக்கூடங்கள் மலிந்தபின்பு வெளிவரும் வம்புதும்பு வாதவிவாதங்களும் அபார்த்தங்களும் அபரிமிதம். இவற்றில் எந்தெந்த விஷயங்களில் காணுக்கண்ணிட்டிருக்கவேணும்; எந்தெந்த விஷயங்களில் வாய்ப்பூட்டு போட்டுத்திரவேணும் என்பதை விவேகிகள் உணருவர்கள். பூர்வாசார்ய க்ரந்தங்களிலிருந்து ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டி 'இது தப்பு, இது பிழை, இது அஸம்பத்தம்' என்று தூஷிக்கிறாரொருவர்; மற்றொருவர் நம் ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளில் புகாமல் பொதுவாக நம் மதத்தில் தாழ்வு தோன்றும்படி யெழுதுகிறார். இவ்விருவரில் முந்தினவரா லுண்டாகும் க்ஷோபம் அதிகமாதலால் அவரைத் தகர்க்கவேண்டியது முக்கியம். பிந்தினவரை விவேகிகள் பொருள்படுத்தமாட்டார்கள். இதை மனதில் திடமாக வைத்துக்கொண்டு மேல்விஷயம் கேளீர். நம்முடைய தென்னாசார்ய ஸம்பிரதாயத்தில் நமக்குத் தெரிந்து மூவர் மிகச்சிறந்த தமிழ் வித்வான்களாக விளங்கினார்கள். 1. வை. மு. சடகோப ராமாநுஜாசாரியர். 2. (ஸேதுபதி ஸம்ஸ்தான மஹாவித்வான்) ரா. ராகவையங்கார். 3. ராவ்ஸாஹிப். மு. ராகவையங்கார். இம் மூவரும் இப்போது வைகுண்டவாஸிகள். ஆனாலும் மூவரும் பல தமிழ் நூல்களை இயற்றினவர்கள். முன்னே குறிக்கப்பட்ட இருவர் ஸதாசார்ய பரம்பரையில் படிந்து ஸம்ப்ரதாயக்ரந்த காலக்ஷேபங்கள் செய்தவர்கள். அவ்விருவரும், பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளைலோகாசாரியர், மணவாளமாமுனிகளாகிய ஆசாரியர்கள் மூவரையும் பரதெய்வமாகக் கொண்டவர்கள். அவர்களின் திவ்யஸூக்திக ளல்லது தஞ்சமில்லை யென்றிருந்தவர்கள். மு. ராகவையங்காரென்கிற மூன்றாமவரோ வென்னில் ஒருநாள்கூட ஆசார்ய ஸேவை பண்ணியறியார். ஸம்ப்ரதாயார்த்தம் கேட்டறியார். "சுத்தபாவம் கதோ பக்த்யா சாஸ்த்ராத் வேத்மி ஜநார்தநம்" என்ற ஸஞ்ஜயோக்திக்கு மாறாக ஆசார்யபக்தியுமற்றவர், (அத ஏவ) சுத்தபாவமுமில்லாதவர். இத்தகையிவர் கேவலம் தமிழ்ஞான மொன்றையேகொண்டு திவ்யப்ரபந்தார்த்தங்களை ஆராய்ச்சிசெய்யப் புகுந்து, பெரியவாச்சான்பிள்ளை திவ்வியப்பிரபந்தங்களில் பலவிடங்களில் உண்மையான பாடங்களைத் தெரிந்துகொள்ளாமல் தவறான பாடங்களைக்கொண்டு வியாக்கியானம் செய்துவிட்டாரென்று பல சிறு நூல்களையெழுதிப் பல தடவை பதிப்பித்திருந்தார். அவர் பெரியவாச்சான்பிள்ளையை அஸ்மதாதிகளில் ஒருவராகவே நினைத்தும் பலவிடங்களில் மருண்டவரென்று நினைத்தும் மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகையில் எழுதியிருந்தவை அஸஹ்யம். அவற்றுக்கெல்லாம் மறுவாய்திறக்க முடியாதபடி வாய்மூடி போட்டவன் அடியேனொருவனே. அப்போது அடியேனெழுதின பல நூல்களில் செந்தமிழாராய்ச்சியென்னும் நூல் முடிவானது. அடியேனுடைய தன் சரிதையில் பக்கம் 381ல் [எனது நூல் வரிசையில் 402 லக்கங்கொண்டது] காணீர்;

402. செந்தமிழாராய்ச்சி:—சிறந்த தமிழ் வித்வானாகிய ஸ்ரீமத். மு. ராகவையங்கார் (ராமநாதபுரம்) அவர்கள் திவ்யப் பிரபந்தங்களைப்பற்றியும் ஆழ்வார்களைப்பற்றியும் சில ஆராய்ச்சிகளை மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிட்டார்; அவை

நம்முடைய ஸதாசார்ய ஸத்ஸம்ப்ரதாய ஸரணிக்குச் சேராதவையென்னு முண்மையை வெளியிட வேண்டியது அவசியமாயிற்று. அந்த ஸந்தர்ப்பத்தில் வெளி வந்ததிது. நான்முகன் திருவந்தாதியில் *தரித்திருந்தேனாகவே தாராகணப் போர், விரித்துரைத்த வெந்நாகத்துன்னை* என்ற பாசுரத்தின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கி யானத்தை மறுக்கப் புகுந்து "வெந்நாகத்து" என்கிற பாடத்தை "என்னாகத்து" என்று ஸ்வதந்திரமாகத் திருத்திச் சில எழுதியிருந்தார். அது ஸர்வாத்மநா அஸங்கத மென்று ஸ்தலிக்க முதன்முதலாக இறங்கினேன். அதிலிருந்து பல விஷயங்களை விமர்சிக்க நேர்ந்தது. அந்த விமர்சங்களெல்லாம் தமிழுலகில் ஸுப்ரஸித்தங்களாகை யாலே இங்கு விவரிக்கின்றிலேன். (இது சுயசரிதையிலுள்ளது.)

ஆறுவது ரத்னம்;—அப்போதடியேன் வெளியிட்ட செந்தமிழாராய்ச்சி நூலை ஸ்ரீ வைஷ்ணவர்கள் மட்டுமேயல்லாமல் இதர பண்டிதர்களும் வாசித்து 'இது மிக அவசிய மான நூல்' என்று கொண்டாடினர். ஸு 1929ல் நான் வடதிசை யாத்திரை சென்றிருக்கையில் அந்த ராகவையங்கார் வடமதுரையில் என்னோடு ஸந்தித்து புஷ்கரம் த்வாரகை முதலான சில க்ஷேத்திரங்களை என்னோடுகூடவே ஸேவித்தார். தேவியா ருடனும், சேஷாத்ரியென்கிற திருக்குமாரருடனும் யாத்திரையாக வந்திருந்தார். 10, 15 நாள் ஸஹவஸிக்க நேர்ந்தது. யாத்திரையிலும் நான் பல காரியங்கள் வைத்துக்கொண் டிருந்தேன்; அவருமப்படியே. ஆகவே லோகாபிராமமாக இருவரும் ஸம்பாஷிக்க நாடோறும் இரண்டொருமணி காலமே கிடைக்கும். இரண்டொருநாள் வார்த்தை யிலேயே அவர் பூர்வாசார்ய பக்தி தரித்ரரென்பதைத் தெரிந்துகொண்டேன். ஒவ்வொரு நாளும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திலிருந்து 'அது அஸங்கதம், இது தமிழர் களின் வழிக்கு ஒவ்வாது' என்று பேசிக்கொண்டிருந்தார். இத்தகைய பேச்சுக்களைக் கேட்டுக்கொண்டு நான் பொறுமையோடிருப்பவனல்லேனாதலால் ஒருநாள் நேரில் சொன்னேன்—"உம்முடைய பெயர் மு. ராகவையங்காரென்று காண்கிறது; முட்டாள் ராகவையங்காரென்றோ முழுமூடம் ராகவையங்காரென்றோ நீரே கையெழுத்திடும்படி இந்த யாத்திரையிலேயே செய்துவிடுகிறேன்" என்றேன். ஆசார்யபக்தியே வடிவெடுத்த அவரது தேவியார் அவரில்லாத ஸமயத்தில் வந்து 'ஸ்வாமீ! எஜமானர் பெரியார்களின் ஸ்ரீபாத தீர்த்தத்தை ஒருநாளும் பருகினவரல்லர்; என்ன துஸ்ஸஹவாஸபலனோ தெரிய வில்லை; என்னுடைய தகப்பனாரிடத்திலும் மாமனாரிடத்திலும் இவர் சிலநாளாவது பழகி யிருந்தால் இப்படியெல்லாம் பேசவேமாட்டார்; திருப்பல்லாண்டுகூட தெரியாதிவர்க்கு; இந்த யாத்திரையில் எதிர்பாராதபடி எங்கள் பாக்யவசமாக ஸ்வாமியினுடைய சேர்க்கை ஏற்பட்டது; ஸ்வாமி எப்படியாவது எஜமானரைத் திருத்திப் பணிகொள்ளவேணும்; திருமலைநம்பி எம்பாரைத் திருத்திப் பணிகொண்டது ஸ்வாமிக்குத் தெரியாததன்றே' என்று பலவும் சொன்னாள். ஆனாலும் அப்போது அவர் திருந்தவில்லை. அவர் தாம் அச்சிட்டவொரு புத்தகத்தில் ஓரிடத்தில் (புட்நோட்டில்) என் பெயரை வெகு சிறப்பாகக் குறிப்பிட்டு "இந்த ஸ்வாமியும் இப்படி திருவுள்ளம் பற்றுகிறார்" என் றெழுதியிருந்தார். [இது முகுந்தமாலை விஷயத்திலென்று நினைக்கிறேன்.] அதை அப்போது அவர் [மு.ரா.] எடுத்துக்காட்டி "ஸ்வாமியிடத்தில் அடியேன் மிகவும் ப்ரதிபந்நன்; சென்னையில் லெக்ஸிகனில் பணி செய்யும்போதும் ஸ்வாமியின் நூல்களை

ஆதாரமாகக்கொண்டு பல விஷயங்களில் தெளிவு காட்டியிருக்கிறேன்" என்றார்; அப்போது அவர்க்கு நான் பதில் சொன்னது, 'இந்த தோத்திரங்களினால் அடியேன் மயங்கிவிடமாட்டேன்; ஸர்வஜ்ஞர்களான பூர்வாசார்யர்களின் ஸூக்திகளை அவமதித்து என்பால் பக்திகொண்டாலென்ன? விப்ரதிபத்தி கொண்டாலென்ன?' என்று. அந்த யாத்திரைக்குப் பிறகு, அவர் வெளியிட்டவற்றையெல்லாம் வரவழைத்துப் பார்த்து ஒன்றையும் உபேக்ஷியாமல் அவருள்ளம் தெளிவுபெறப் பல வியாஸங்களெழுதியுள்ளேன். அப்போது ஸ்ரீராமாநுஜன் தோன்றியிராமையால் அம்ருதலஹரியில் வெளியிட்டுவந்தேன். கோயிலில் வாழ்பவரும் அம்ருதலஹரி மானேஜிங் எடிடருமான ஸ்ரீ உ.வே. பண்டிதராஜ. மெ. ஸுந்தராசார்ய ஸ்வாமிக்கு அந்த மு. ராகவையங்கார் தேஹாநுபந்திகளில் சேர்ந்தவர் என்பது அப்போது தெரிந்தது. அந்த ஸ்வாமிக்கு இந்தக் கண்டனங்கள் அப்ரியமாயிருக்குமோ! என்றுகூடப் பாராமல், உண்மையுரையில் ஒருவர்க்கும் அஞ்ச வேண்டியதில்லை யென்கிற அத்யவஸாயத்துடன் கடமையைச் செலுத்திவந்தேன். இதன் முடிவைத் தெரிவிக்கவேணுமே; அவர் சரமகதிக்கு முன்பு சிலகாலம் திருவனந்தபுரத்தில் யூனிவர்ஸிடியில் பணியாற்றி வந்தார். அப்போது நான் பல அன்பர்களுடன் மலைநாட்டுத் திருப்பதி யாத்திரை புறப்பட்டு அவ்விடம் சென்றேன். நாலைந்துநாள் அங்கிருந்து ஸன்னிதியில் உபந்யாஸங்கள் நடத்தினேன். அவரும் (மு-ரா.) கூடவிருந்து களித்து முடிவில் தேவியாருடனேயெழுந்து தம்முடைய ஸம்பாவனையாக ரூ. 116ம் சால்வையு மளித்துப் பலரறியப் பேசினவை பத்ரிகைகளில் ப்ரஸித்தமானவை. இங்கு இந்த விஸ்தரம் எதற்காக வென்னில்; பெரியவாச்சான்பிள்ளைக்கு ஔரஸபுத்திரர்கள் தாங்களே யென்றும் அவரைத் தாங்குபவர்களும் தாங்களே யென்றும் வீணாக இறுமாந்திருப்பவர்கள் என் செய்தார்களென்று கேட்கவத்தனையே. ஒரு மஹாவீரர் 'ஐந்நூறு சூரர்களின் கால்களை இப்போதுதான் வெட்டிவிட்டு வருகிறேன்' என்றாராம். தலைகளை வெட்டாமல் கால்களை ஏதுக்கு வெட்டினீரென்று கேட்க, வேறொருவர் பத்துநாள்முன் தலைகளை வெட்டிப்போனார்; கிடந்த கால்களை நான் ஒரே வெட்டாக வெட்டிவிட்டேனென்றாராம்.

ஏழாவது ரத்னம்;—உலகில் வைதிக மார்க்கத்திலும் லௌகிக மார்க்கத்திலும் ப்ரதிஷ்டிதர்களாய் ப்ரஸித்தர்களான பல் மஹான்கள் ஸுதர்சனத்தைக் கண்டித்து உபதேசமணித்திரள் முதலான புத்தகங்களை வெளியிட்டுள்ளார்கள். அவையெல்லாம் நம்முடைய ரசனையேயென்று (ஸு) பறைசாற்றி வருகின்றது. அது வஸ்துஸ்திதியாகவே யிருக்கட்டும். ப்ரக்ருதஸ்தலபரிஸ்திதி கேளீர். வடநாட்டில் பிர்லா முதலான கோடீச்வரர்கள் தங்களுக்கு லக்ஷ்மீ கடாக்ஷமிருப்பது போலவே ஸரஸ்வதீ கடாக்ஷமு மிருப்பதாகக் காட்டிக்கொள்ளவேண்டிச் சில வித்வான்களுக்குக் காசு கொடுத்து [அபரிமிதமான பொருள் கொடுத்துச்] சில பல க்ரந்தங்களை யெழுதுவித்துத் தங்கள் பெயரால் பிரசுரிக்கச் செய்து வருகிறார்கள். அந்த க்ரந்தங்கள் உண்மைப் பண்டிதர்களா லெழுதப்படுவனவாதலாலும், உயர்ந்த விஷயங்களைக் கொண்டனவாதலாலும் உலகங் கொண்டாடவே அமைகின்றன. இங்கு அப்படியல்லாமல் அக்கிலிபிக்கிலிகள் என்னும் படியான அரைகுறைப் படிப்பாளிகளைக் காசுகொடுத்து ஆதரித்து அவர்களைக் கொண்டே எழுதுவித்துக் கொள்ளும் தத்துவத்தை ஸ்ரீரங்கவாஸிகளான பல மஹான் களின் திருவாக்கில் கேட்டிருக்கிறேன். ஆகவேதான் அவை க்ஷணபங்குரங்களாயொழி

கின்றன. குவலயானந்தத்தில் "க்ஷணத்வயம் ந திஷ்டந்தி காராப்தாந்யபி ஸ்வயம்" என்கிற சுலோகத்தின் பூர்வார்த்தத்தில் சொல்லப்பட்டவைகளோடு இதையும் சேர்த்துக் கொள்ளவேணுமென்றார்கள் வித்வான் சதாபிஷேகஸ்வாமியும் திருமஞ்சனம் ஸ்வாமியும்.

எட்டாவது ரத்தினம்:—நாலூரான் கட்டுரை தான் பலபல சாஸ்த்ரார்த்தங்களை வெளியிட்டுவிட்டதாக நினைத்து "இக்கட்டுரையைக் கண்டு கடுங் கொதிப்புற்று நம்மைத் தாறுமாறாகத் தாக்கிப் பலருடைய பெயரில் பல சுவடிகளை வெளியிடுவர் இவர்; இவர் எத்தனை தாக்கினாலும் அவற்றை கணிசித்து அவர் நடையில் பதில் தாக்குதலைச் செய்யமாட்டோம் நாம்" என்று மண்டுகநாத கம்பீரமாக கர்ஜிக்கிறது. ரஸிகர்களுக்குத் தெரிவிக்கிறேன். பாம்பு, தேள் முதலான விஷ ஜந்துக்கள் வெளியில் புறப்படும்போதே நம்மேல் தடியும் தாம்பும் சாணமும் ஸம்மார்ஜனியும் விழுந்தே தீருமென்று நிச்சயித்துப் புறப்படுமாம். அத்தகைய நிச்சயம் எதைத்தான் எழுதுவிக்க மாட்டாது. கோவர்த்தன மென்னும் கொற்றக் குடையை வருணிக்கும் பெரியாழ்வார் "இலைவேய் குரம்பைத் தவமா முனிவர் இருந்தார் நடுவே சென்று அணார் சொறியக், கொலைவாய்ச் சினவேங்கைகள் நின்றுறங்கும்" என்கிறார். கோவர்த்தன மலையில் குடில் கட்டி வாழும் தாபஸர்களிடத்தே பதினறடி வேங்கைப்புலிகள் பல வந்து நிற்க, அவர்கள் சிறிதுங் கூசாதே பசுக்களுக்குத் தினவு சொறியுமாபோலே கழுத்திலே தினவுள்ளமையறிந்து இனிதாகச் சொறிய அந்த வேங்கைகள் ஆனந்த பாரவச்யத்தாலே நின்றபடியேயுறங்குமாம். இங்ஙனே கோவர்த்தனமலை நிகழ்ச்சியைப் பெரியாழ்வார் கூறினர். சித்திரகூடச்சாரல் நிகழ்ச்சியைக் கம்பர் கூறுகின்றார்—"இடிகொள் வேழத்தை யெயிற்றொடு மெடுத்துடன் விழுங்கும், கடிய மாசுணம் கற்றறிந்தவரென வடங்கி, சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாம் மிதித்தேறப், படிகள் தாமெனத் தாழ்வரை கிடப்பன பாராய்." என்று. [இச் செய்யுளின் பதப்பொருளை நமது கம்பரின்பக் கவித் திரட்டில் கண்டுகொள்க.] கொடிய மலைப்பாம்புகள் வரிசையாகப் படுத்திருக்க அவற்றை மலைப்படிகளாகக் கொண்டு முனிவர் கிடுகிடுவென்று ஏறுகின்றனராம். இவ்விதமாக துஷ்ட ஜந்துக்களிடத்திலே எள்ளளவுமஞ்ச வேண்டியதில்லை நமக்கு. பிறருடைய நடை நமக்கு ஏழேழ் பிறவிக்கும் வேண்டாம்; நமது நடை பிறர்க்கு ஏழேழ் பிறவி தவம்புரிந்தாலும் அணுவளவும் வாய்க்காது. விஷய துர்ப்பிக்ஷமுள்ளவர்களன்றோ தங்களிடத்து ஸுபிக்ஷமான வசவுகளினால் பத்ரபூரணம் செய்யவேண்டும். பெரிய திருமொழியில் (8-1-1.) *கலையிலங்கு மொழியாளர் கண்ணபுரமென்றவிடத்துப் பெரியவாச்சான் பிள்ளையருளிய ஸ்ரீஸூக்திகளை விரித்து அடியேன் திவ்யார்த்த தீபிகையிலெழுதியிருப்பது காணீர்—[கலையிலங்கு மொழியாளர் என்பதற்கு மொழிகள் தோறும் கலைகள் இலங்கப் பெற்றவர்களென்று பொருள்.] வெறும் வாய்ப்பேச்சுக்களிலும் சாஸ்த்ரார்த்தம் விளங்காநிற்குமாம். சாஸ்த்ர விஷயமாகப் பேசுகையன்றியே 'உண்ண உடுக்க' என்று உலகவார்த்தைகள் பேசினாலும் அவற்றிலும் சாஸ்த்ரார்த்த நுட்பங்கள் கண்டுகொள்ளலாயிருக்கும். அறிவு நிரம்பியிருப்பார் எது பேசினாலும் சாஸ்த்ரார்த்தங்கள் தாம் பெருகும் என்று.—ஓட்டுமாமரத்தின்மேல் ஏறியிருப்பாரை நலிய நினைக்குமவர்கள் கல்லை விட்டெறிந்தாலும் ப்ரதிப்ரக்ஷேபம் அரியபெரிய மாம்பழங்களினால் தானேயாகும். பிறர் கற்களையே விட்டெறிய நாம் அவற்றைப் பலபலர் நுகர்ந்து மகிழ்வார்கள்.

கனிகளையே விட்டெறிவோம். காய்கனி எதுவுமில்லாத மொட்டை மரத்தின்மீது கல்லும்தடியுமெடுத்தெறிவாரில்லை. ஒரு பேதையன் எறிந்தால் 'ஐயோ! இவனுக்கு நாம் கொடுக்கத்தக்கது ஏதுமில்லையே' யென வருந்தி வாளா நிற்குமது. "செடிகள் பழுப்பது அடிகள் படவே" என்றார் ஆன்றோர். நன்றாகக் காய்த்துப் பழுத்துத் தழைத்த தேன்மாமரத்தின் தலையிலேதான் அடிகள் விழும்; விழ விழ நல்ல பலன்கள் கிடைத்தே தீரும். காழிச் சீராமவிண்ணகரப் பதிகத்தில் *நெட்டிலைய கருங்கமுகின் செங்காய் வீழ நீள்பலவின் தாழ் சினையில் நெருங்கு பீனத், தெட்டபழஞ் சிதைந்து மதுச் சொரியும்* என்ற பாசுரம் மிகவற்புதம். பாக்கு மரத்திலிருந்து கொட்டையான காய்கள் உதிர்ந்து கனியப்பழுத்த பலங்கனிமீது விழ, அக்கனி சிதைந்து தேன்வெள்ளம் சொரிந்ததாம். மாண்மதியோர்மீது அடிவிழுந்தால் மதுவெள்ளந்தானெழுகுமென்று காட்டவேயன்றோ ஆழ்வார் இங்ஙனே பாசுரம் பாடினது.

ஒன்பதாவது ரத்னம்;—அத்திருமங்கையாழ்வார் தாமே திருவெள்ளறைச் சோலையிலே ஒரு நிகழ்ச்சியைக் கண்டு அதனைத் தமது திருமொழியிலே பொறித்து வைத்தார். அப்பாசுரமாவது [5-3-4.] *மாம்பொழில் தளிர்கோதிய மடக்குயில் வாயது துவர்ப்பு எய்தத், தீம்பலங்கனி தேனது நுகர் திருவெள்ளறை நின்றானே*=குயில்கள் மாந்தளிர் களைக் கோதியதனால் வாய் துவர்த்துப்போக பலாமரத்திலே பழங்கள் விண்டுவிரிந்து தேன் வெள்ளத்தைப் பெருக்காநிற்க, அந்தத் தேனையருந்தி வாய்த்துவர்ப்பு நீங்கி மகிழ்ந்ததாகக் கூறினபடி. ஆரணசாரமான பரகாலன் பனுவல்களில் குயிலின் கதையும் மயிலின் கதையும் கொக்கின் கதையும் கோழியின் கதையும் வருவது வெறுமனன்றே. அபசப்தமயமான நிந்தைக் கந்தைகளை வாசித்துக் கசப்பெய்தினவர்களுக்குத் தேனும் பாலும் நெய்யுங்கன்னலுமமுது மளிக்க அடியேன் பிறந்திருக்கின்றேனேயன்றி விஷய லேசமுமில்லாமல் வைது வல்லவாபழித்து வெற்றிபெற்றதாக நினைக்கப் பிறந்தேனல்லேன். மணவாளமாமுனிகளிடத்திலே வித்யாஸம்பத்தும் விநயஸம்பத்தும் ஏற்றத்தாழ்வின்றி விளங்காநிற்கவும் விநயச்செல்வமே வீறுபெற்றிருக்குமென்பர் பெரியோர். அன்னவர் "முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம் முழுது நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம், பின்னையொன்றுதனில் நெஞ்சு பேராமற்பெற்றோம் பிறர் மினுக்கம் பொறாமையிலாப்பெருமையும் பெற்றோமே" என்று தமக்கேயுரிய சில பெருமைகளை யநுஸந்தித்தருளினர். இதை அநுவதிக்கவும் அநதிகாரிகள் நாம். ஆயினும், மாமுனிகள் தாம் தம் பெருங்கண்மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பரவவைத்தருளி யிருக்கையாலே, பட்டர் அருளிய *வாத்யாவ்யாலோலத் கமலதடாக தாண்டவேந* என்று *பரிசிதமிவாதாபிகஹனமானதொரு கமலதடாக தாண்டவத்தாலே* லாபஸ் தஸ்ய ஜயஸ் தஸ்ய குதஸ் தஸ்ய பராபவ:? யஸ்ய ஸ்ரீவரயோகீந்த்ரோ ஹ்ருதயே ஸுப்ரதிஷ்டித:* என்றநுஸந்தித்து*நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மியாய் நிற்கிறேன். ... (200)

எந்தவிடந் தொட்டாலு மின்பவெள்ள மேபெருகும்
இந்த விருநூ றெழில்மலரைச்—சந்ததமும்
சிந்திப்பார் செப்புவார் சேவிப்பார் தித்திப்பார்
வந்திப்பார் வாழ்ந்திடுவர் வாய்ந்து.

முற்றிற்று.

# உபந்யாஸ சதத்வயத்தின் உபஸம்ஹாரம்

நிகழும் விச்வாவஸு ௵ ஆடிமாதத்தில் நமது ஸ்ரீ ராமாநுஜனுக்கு இருநூறு மாதம் பூர்த்தியடைந்ததை முன்னிட்டு இருநூறு உபந்யாஸமாலை வெளியிடவேணுமென்னுமுத்தேசத்தைப் பெருந்தேவி மணவாளனான பேரருளாளன் அடியேனது நெஞ்சில் தோற்றுவித்தான். எந்தெந்த விஷயங்களைப்பற்றி உபந்யாஸங்களெழுதவேணுமென்கிற சிந்தனையே அப்போது உண்டாகவில்லை. ஸமயாநுகுணமாக விஷயங்களை எம்பெருமானே உபஸ்தாபனம் பண்ணியருளினனாதலால் அங்ஙனம் உபஸ்திதங்களான விஷயங்களைக்கொண்டு இருநூறு உபந்யாஸங்களையும் ஆத்மதுஷ்டியுடன் தலைக்கட்டிவிட்டேன். ஆடிமாதத்தில் ஆண்டாளுடைய திருவாடிப்பூர மஹோத்ஸவத்தின் தொடக்கநாளில் எழுதத் தொடங்கப்பெற்ற இவ்வுபந்யாஸ சதத்வயம் ஆவணி மாதத்திலேயே பூர்த்தியடையவேண்டியது அப்போது 134 உபந்யாஸங்கள்மட்டுமே பூர்த்தியடைந்திருந்தது. இடையிடையே வெவ்வேறு விஷயங்களும் எழுத நேர்ந்ததனால் நேற்று மார்கழித்திங்களில்தான் இருநூறும் பூர்த்தியடைந்தது. இதில் 193-ஆம் உபந்யாஸம் முதலாக வெளிவந்துள்ள எட்டு உபந்யாஸங்கள் அரங்கனுடைய ஆஜ்ஞையினாலத்தலை. இவ்வெட்டு உபந்யாஸங்களுக்கும் சிகரமான விஜ்ஞாபனம் கேண்மின். இக்காலத்தில் விளங்கும் எழுத்தாளர்களில் ஸ்ரீமான். உ.வே. (சென்னை அட்வகேட்) D. ராமஸ்வாமி ஐயங்கார் பரிகணனீயராக விளங்குகின்றார். இவர் ஆங்கிலத்தில் வியாக்கியானங்களும், தமிழில் பல கட்டுரைகளும் அடிக்கடி யெழுதி வெளியிட்டு வருகின்றார். நமதுநாட்டில் உலவும் மாதாந்தப்பத்திரிகைகளில் இவருடைய இனிமைமிக்க வியாஸங்களை உலகம் அநுபவித்துக் களித்துவருகின்றது. அருளிச்செயல் ஸ்ரீராமாயணம் முதலானவற்றில் மேதையைச் செலுத்தி இனிமைப்பொருள் கண்டறிவதிலும், அறிந்தவற்றை உலகமனுபவிக்கச் செய்வதிலுமே கண்ணுங்கருத்துமாயிருந்துவருகிறார். இவர் கோர்ட்டு அலுவல்களை எப்போது கவனிக்கிறாரென்பது கண்டறியமுடியாமலிருக்கிறது. இவரிடத்தில் நமக்கும், நம்மிடத்தில் இவருக்கும் பல அபிப்ராயபேதங்கள் காரணமாகக் கசப்பு இருக்கக்கூடியதே. இருந்துவருகின்றதென்றே கொள்வோம். அதைப்பற்றியென்ன ? மதிப்பு என்பது தனிப்பட்ட விஷயம். நான் பல பண்டிதர்களுக்கு டைடல்கள் [பிருதுகள்] கொடுப்பதுண்டு. நேற்று மார்கழி மாதத்திலும் சிலர்க்குக் கொடுத்திருக்கிறேன். பத்ரிகைகளிலும் வெளிவந்துள்ளது. இவர்க்கு நான் கொடுக்கவிரும்பும் விருது நெடுநாளாகவே என்னுள்ளத்துள் ஊறியுள்ளது. அது என் அந்தரங்கத்திலேயே உறைய வேணுமென்றும், வெளிவந்து ஆகவேண்டியதொன்றுமில்லை யென்றும் கருதியிருந்த நான் இன்று அதை வெளியிடுகிறேன் ஆத்மத்ருப்திக்காக. இதை அவர் பொருள்படுத்த வேண்டியதில்லை, பொருள்படுத்தவும் மாட்டார். ஆயினும் ஆத்மத்ருப்திக்காக என்றெழுதினபடி அதையுத்தேசித்தே வெளியிடுகிறேன் ஸஹ்ருதயரஸிகமணி: என்று. அடியேனுடைய இந்த உபந்யாஸ சதத்வயத்தில் இவருடைய சொல்மாலை யொன்று அணிகலனாகத் திகழவேணுமென்னுமாசையினால் இவருடைய மதிப்புரையொன்றை இங்கு வெளியிடுகின்றேன்.

சென்ற விக்ருதிஞு பங்குனிமாதத்தில் அடியேனுக்கு ஷஷ்டியப்தபூர்த்தி விசேஷத்தைச் சிறப்பாக நடத்திவைத்த வொரு ஸமிதிக்குத் தலைவராயிருந்த கனம். ஹைகோர்ட்ஜட்ஜ் W. S. கிருஷ்ணஸ்வாமி நாயுடு என்னும் பெரியார் **P. B. A.** ஷஷ்டியப்த பூர்த்தி நினைவுமலர் என்ற பெயரால் ஒரு பெரிய புத்தகம் வெளியிடவெண்ணி, அதற்குக் கட்டுரைகள் வழங்குமாறு தம்முடைய பல ஆப்தர்களை ஸத்வாரகமாகவும் அத்வாரக மாகவும் கேட்டுக்கொண்டாராம். அப்போது 35 பெரியார்கள் எழுதியனுப்பின கட்டுரை களைத் தம்முடைய மிகவழகிய முன்னுரையோடுங்கூட மிகச்சிறந்த முறையிலே வெளி யிட்டுள்ளார். ஆங்கிலத்தில்வந்த வியாஸங்களுக்கு அந்த ஜட்ஜ் அவர்களே தமிழ் மொழிபெயர்ப்பெழுதி வெளியிட்டுள்ளார். ப்ரஸ்துதரான D. R. ஐயங்காரின் ஆங்கில வியாஸத்திற்கு அவருடைய மொழிபெயர்ப்பை இங்கு அப்படியே தருகிறேன். என்னுடைய பெருமையை வெளிக்காட்டுவதற்காகவன்று; D. R. அவர்களுடைய மனத் தூய்மையை [அதாவது ஈர்ஷ்யாஸூயைகளை அறவே வென்றிருக்கும் வீறு தன்னை] உலகம் காண்பதற்காகவே. இஃது அபூர்வக் காட்சியன்று; ஆயினும் நித்யாபூர்வமா யிருக்கும் பேரன்புடையார்க்கு. என் பெருமையைக் காட்டிக்கொள்வதற்காகவே இதை வெளியிடுவதென்று சிலர் நினைத்தாலும் குற்றமில்லை. அநிருத்தாழ்வானது தேவி யான உஷையின் தந்தை இயற்கையில் இருகரங்களோடுதான் பிறந்திருந்தான்; ஒருகால் அவன் சிவபெருமானுடைய நடனத்திற்கு மிகவுகந்து அதற்குத் தனது இரண்டு கைகளால் மத்தளந்தட்டினுன். அதனுல் சிவனுக்குப் பரமஸந்தோஷமுண்டாகி அருள்கூர்ந்து அவனுக்கு ஆயிரங்கைகளையும் நெருப்பு மதிளையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும் தந்ததோடு நில்லாமல், தான் தனது பரிவாரங்களோடு அவன் மாளிகை வாசலில் காவல்செய்யும் பெருமையையும் அவனுக்கு அளித்தனனுகப் புராணங் கூறுகின்றது. தனது நடனத்தை உகந்தான் வாணன் என்கிற இவ்வளவுக்காக இத்தனை அரியபெரிய வரங்கள் அளித்தால் இதில் ஏகதேசமுமளிக்க ஆற்றலற்ற நாம் நமது மகிழ்ச்சிக்குப் போக்குவீடு செய்வதும் பொருத்தமற்றதாகுமோ? முக்கியமாக ஸௌஜந ஸௌஜந்ய ப்ரகாசம் இத்தகைத்தென்று உலகமறியவேண்டுமென்பதே முக்கியமான குறிக்கோள். [இனி D. R. ஐயங்காருடைய மதிப்புரை.]

## "ஸ்ரீ வைஷ்ணவமே வடிவெடுத்தவர்"

ஓர் உண்மை ஸ்ரீ வைஷ்ணவன் மூன்றுவித நோக்கங்களுடன் உயிர் வாழ்கிறுன். ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தையும் கொள்கைகளையும் பிறருக்குப் போதிப்பதும் தேச மெங்கும் பிரசாரம் செய்வதும் முதலாவதாகும். பின்புள்ளார் கற்றறிந்து ஆசரிக்கைக் காக அச்சித்தாந்தத்தின் உயர்ந்த கொள்கைகளையும் உன்னத நோக்கங்களையும் கிரந்த ரூபமாக எழுதி வெளியிட்டு பிரசுரம் செய்வது இரண்டாவதாகும். கடைசியாக, ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்டு ஆங்காங்கு அர்ச்சாரூபியாய்த் திருக் கோயில்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களின் வடிவழகில் ஈடுபட்டுப் பணி செய்தல். இம்மூன்றுவகை வைஷ்ணவ நோக்கங்களுக்காக முறையே பாடுபட்டுப் பெரிதாக வெற்றியடைந்தவர் உளரேல் அவர் ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யஸ்வாமி ஒருவரே யாவர். இவருடைய ஷஷ்டியப்தபூர்த்தி இம்மாதம் எல்லா வைஷ்ணவர்களாலும் தேசமெங்கும் கொண்டாடப்படுகிறது. ஸம்ஸ்கிருதம்

தமிழ் ஆகிய உபயவேதாந்தத்திலும் இந்த ஸ்வாமிக்கிருக்கும் அபார ஞானம், ஆச்சரியமான உபன்யாஸ சக்தி இவைகளைப்பற்றிய கீர்த்தி தேசமெங்கும் பரவியிருப்பதால் நான் அதிக மாகச் சொல்லத்தேவையில்லை, பரத கண்டத்தில் முக்கியமாக சென்னை மாகாணத்தில், அதனிலும் முக்கியமாக மதராஸில் ஸ்ரீவைஷ்ணவத்திற்காக இவர் செய்திருக்கும் பணிகள் சமீப காலங்களில் இணையற்றதாகும். ஸ்ரீவைஷ்ணவக்கொடியை இவர் ஹிமாலயம் முதல் கன்னியாகுமரி வரையில் வெற்றிகரமாக நாட்டியிருக்கிறார். இவர் எங்குச் சென்றாலும் அங்கு மத சம்பந்தமான நடவடிக்கைகளில் சூழப்பட்டு ஓர் பிரகாசமான நக்ஷத்திரம்போல் விளங்குகிறார். இவருடைய சொந்த நகரமான காஞ்சீபுரியில் ஓர் பாடசாலையையும் க்ரந்த ப்ரசுராலயத்தையும் ஸ்தாபித்திருக்கிறார். இவருடைய பாட சாலையிலிருந்து வெளியேறும் வித்யார்த்திகளும் ப்ரசுராலயத்திலிருந்து வெளியாகும் க்ரந்தங்களுமே மத விஷயத்தில் இவர்க்கிருக்கும் ஆர்வத்துக்கும், நிர்மாணத் திறமைக்கும், விடாமுயற்சிக்கும் சிறந்த அத்தாட்சிகள். இன்றைக்கும் ஒரு நாளைக்குப் பதினாறு மணிகளுக்குமேல், சிறிதும் குன்றாத வீர்யத்துடன், ஸ்ரீவைஷ்ணவத்துக்கே பாடுபடும் நபர் ஸ்வாமியைத் தவிர வேறு கிடையாது. கம்பீரமான வங்கலகண்டத்வனியுடன் மணிக் கணக்காக கேட்போர் மனங்களை வசீகரித்து அப்படியே ஸ்தம்பிக்கச் செய்யும் சக்தியே எம்பெருமான் இவருக்களித்திருக்கும் குணாதிசயங்களில் முதன்மையாகும். சொல்லப்படும் விஷயங்களிலும் எடுத்துரைக்கும் ரீதிகளிலும் இவரையே மற்றவர்கள் தற்காலத்தில் பின்பற்றுகின்றனர். தெலுங்கு பாஷையில் இவருக்கிருக்கும் புலமை தெலுங்கு நாடுகளிலும் உபய வேதாந்தத்தின் உண்மைகளை இவரால் பரவச்செய்து விட்டது. அந்தந்த காலத்தில் க்ரந்தங்களை எழுதி ப்ரசுரிப்பதிலேயோ-இவை இப்போது நூற்றுக்கணக்காகவே யிருக்கவேண்டும்—எந்த விஷயத்தை எடுத்துக்கொண்டாலும் அந்த விஷயத்தில் இவர் காட்டும் ஞானத்திலேயோ இவரை வெல்பவர் கிடையாது. இவர் கையாண்ட விஷயங்களோ அனேகம்; இவை பல துறைகளிலுள்ளவை என்பதையும் இங்கு ஞாபகப்படுத்துகிறேன். வாதப் போர் நடத்துவதில் ஸ்வாமிக்கு வெகு உற்சாகம். இதனால் ஸ்வாமியாலும் ஸ்வாமி விஷயமாகவும் அனேக ரஸமில்லாத கிரந்தங்கள் உற்பத்தியாகியிருக்கின்றனவென்றாலும் இவற்றுக்கெல்லாம் காரணம் ஸ்வாமியின் அதி சக்தி வாய்ந்த குணாதிசயமென்றே சொல்லவேண்டும். இவ்வளவு சக்திவாய்ந்த ஒரு மஹாபுருஷர் விஷயத்தில் அசூயையையும் பொறாமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர் பார்க்கலாம். ஆனால், எவ்வித வாதப்போரிலும் ஸ்வாமி பின்வாங்கவேமாட்டார், இவருடைய வாதமே கடைசியாக ஓங்கி நிற்கும். இந்த ரீதியில் அனேகம் உள்ளன. விஷயங்களைத் தேங்காய் உடைப்பது போல், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று உடைத்துக் காட்டுவர்! இவை ஒரு பக்கம் கிடக்கட்டும். ஸ்ரீவைஷ்ணவத்திற்காக இவர் செய்திருக்கும் செய்துகொண்டிருக்கும் பணி கணக்கிட முடியாது. நம் தேசமெங்கும் ஆயிரக்கணக்கிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் இவருக்கு மேன்மேலும் வணங்கிக்கொண்டும் நன்றி செலுத்திக்கொண்டு மிருக்கின்றனர். இவர்கள் எல்லாருடைய பிரார்த்தனைகளும், ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி நடக்கும் இத்தருவாயில், இவர் பல்லாண்டு பல்லாண் டாக குன்றாத ஆரோக்யத்துடன் ஸ்ரீவைஷ்ணவத்திற்கு தொண்டாற்றவேண்டுமென்று எம்பெருமானிடம் செலுத்தப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

D. ராமஸ்வாமி அய்யங்கார்,

அன்பர்களே! இருள்தருமா ஞாலத்திற்பிறந்த மானிடர்க்கு அவர்ஜநீயமான அபிப்ராய பேதங்காரணமாக மனக்கசப்பு இருவர்க்கு முள்ளதேயென்று கீழே ப்ரஸ்தாவித் திருக்கிறேன். D. R. அவர்களின் மனத்திலே கசப்புண்டாவதற்குரிய காரணங்கள் என்னிடத்தில் மலிந்திருப்பதுபோல, என் மனத்திலே கசப்புண்டாவதற்கான காரணம் அவரிடத்தில் இராது. ஸ்வல்பமிருக்குமேயல்லது மலிந்திராது. அப்படியிருந்தும் அவர் தம்முடைய ஸௌஜந்யத்தை லோகோத்தரமாகப் பரிபாலனம் செய்தது ஸ்ரீ வைஷ்ணவர் களுக்கு நல்வழி காட்டுதற்காகவென்றே யென்னத்தட்டில்லை. இப்பெரியாரிடத்தில் முக்கியமாக நான் கண்டது சோதிடத்திலும் இவர்க்கு வல்லமையுண்டென்பதே. அந்த வல்லமையினாலன்றோ

"இவ்வளவு சக்திவாய்ந்த மஹாபுருஷர் விஷயத்தில் அசூயையையும் பொருமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர்பார்க்கலாம்"

என்று துணிந்தெழுதி வைத்தார். திருவாய்மொழியில் *திசைபத்தாய* என்றும், ஸுதர்சந சதகத்தில் *தச திசோ வ்யச்நுவாநம் யச:* என்றும், தசாவதார ஸ்தோத்ரத்தில் *திசாஸு தசஸு க்க்யாதி:* என்றும் பணித்தபடியே திக்குகளும் விதிக்குகளும் கீழும் மேலுமாகவுள்ள பத்துதிசைகளில் எட்டுத்திசைகளிலும் இப்பெரியாருடைய சோதிடம் பலித்திட்டது. சேஷித்துள்ள இருதிசைகளிலிருந்து இனி ப்ராப்தமாக வேணும். *ப்ருதிவ்யந்தரிக்ஷம் த்யௌர் திசோவாந்தரதிசா:* என்ற உபநிஷத்தின்படி கீழ்த்திசை யான ப்ருதிவி ஆய்விட்டது. [ப்ருதிவியில் தானே இவ்வளவும் நடப்பது.] இனி அந்தரிக்ஷம் த்யௌ: என்றவிடங்களில் D. R. அவர்களின் சோதிடம் பலிக்கவேணும்.

சோதிடம் என்ற இந்த ப்ரஸ்தாவத்தில் இந்த சோதிடத்திற்கு மிக முற்பட்ட சோதிடமொன்று வெகு அற்புதமாகப் பலித்துவருகின்றதே, அதையும் நினைவூட்டி உபஸம்ஹரிக்கின்றேன். (வைகுண்டவாஸி) விச்வவித்யாநிதியான காரப்பங்காடு சிங்கப் பெருமாள் ஸ்வாமி ஸ்ரீரங்கத்தில் வானமாமலை மடத்திலெழுந்தருளியிருந்தபோது அங்கு நான் வைத்திருந்த ஒரு நோட்டுக்கில் என்னுடைய ஜாதகம் குறிக்கப்பட்டிருந்ததைக் கடாக்ஷித்துவிட்டு அதீதாநாகதங்களான பலவற்றையும் சுலோகங்கள் பாட்டுக்களுடன் ஸாதித்து, *விசேஷேணது ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்த முக்தவாந்* என்னுமாபோலே அழுத்தம் திருத்தமாக ஒரு விஷயம் விசேஷித்தருளிச் செய்தார்; (அதாவது)

**பிரதிவாதி பயங்கரரென்கிற குடிப்பெயர் உமக்கு அந்வர்த்தமாகவேயிருக்கும். உலகத்திலுள்ள வித்வான்கள் யாவரும் தாமாகவே வந்து உம்முடைய வாக்கில் மாட்டிக்கொள்வர்கள். இதை நீர் பரீக்ஷையாகப் பார்க்கலாம்; வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்கிற வாசியில்லாமல் பெரும்பாலும் எல்லாருமே உம்மிடம் வந்து சிக்கிக் கொள்வர்கள். சிக்கிக்கொள்வதோடு நிற்கமாட்டார்கள், திக்குமுக்கலாடியும் நிற்பர்கள்" ... ... ... இத்யாதி.**

முடிவாக ஸாதித்த வார்த்தை; உலகில் சோதிடர்கள் சொல்லுகிறபடியெல்லாம் பலிக்கிற தென்று நிர்ப்பந்தமில்லை. சில வார்த்தைகள் விபரீதமாவதுமுண்டு; இப்போது நான் உமக்குப் பல விஷயங்கள் சொல்லியிருக்கிறேன்; அவற்றில் மற்ற விஷயங்கள் பழுது பட்டாலும் இந்தவொரு விஷயம் மட்டும் பழுதுபடவே மாட்டாதென்று சபதம்

செய்வேன். நூற்றுக்கணக்கான வித்வான்கள் உம்மிடம் வந்து மாட்டிக்கொண்டே தீருவர்கள். நான்கூட ஒருகால் உம்மிடத்தில் மாட்டிக்கொள்வேனோ என்கிற அச்சமும் உண்டாகியிருக்கிறது. ஆனால் எனக்கு விஷயம் தெரிந்துவிட்டபடியால் நான் ஜாகருகனாகவேயிருந்திடுவேன். இன்னும் நான் பத்திருபது வருஷங்களாவது ஜீவித்திருப்பேன். அடிக்கடி நாம் சந்திக்க நேருமே. அவ்வப்போதுகளில் நானே இதைப்பற்றி யோகக்ஷேமவிசாரம் செய்வேன்—என்றும் ஸாதித்தார். [தன் சரிதையில் 140 முதலிய நான்கு பக்கங்களில் இதன் விரிவு காண்க. அந்த ஸ்வாமியின் அந்தத் திருவாக்கு அவ்விடத்திலேயே அன்றைக்கே பலிக்க ஆரம்பித்தது......இத்யாதிகளை அனைவரும் அனேக பர்யாயம் கடாக்ஷித்திருந்தாலும் இப்போது ஒருமுறை கடாக்ஷிப்பது நன்று. ஆனால் சிங்கப்பெருமாள் ஸ்வாமி திருவாக்கில் வித்வான்கள் வித்வான்கள் என்றே அடிக்கடி ஸாதிக்கக் கேட்டிருந்தேன். அது உபலக்ஷணம் போலும். ... ❋

விச்வாவஸூதநுர்மாஸே கூடாரைவெல்லுபாசுரம்.
வ்யாக்க்யாயத யதா கோஷ்ட்யாம் ப்ராஸ்தாவிதம் ததா முதா.
ஸஹஸ்ராதிகஸத்பக்தா: ச்ருத்வைதத் ஸகுதூஹலம்.
ஆநந்ததுந்திலா பூத்வா ப்ரார்த்தயந்தேஸ்ம முத்ரணம்.
தத்ப்ரார்த்தநாநுஸாரேண ஸ்வோபந்யாஸசதத்வயே.
ஸம்யோஜ்ய க்ருத்வா தத்பூர்த்திம் ப்ராஹர்ஷயமிதம் ஜகத்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்,
அண்ணங்கராசாரியர் எழுதிய உபந்யாஸ சதத்வயம்
முற்றுப்பெற்றது.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) G. ரங்கைய நாயுடு,
(இவர் சென்னையில் ப்ரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

(4) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

(5) S. R. SRINIVASAYYANGAR,
11/5, ஐஸ்ஹௌஸ் ரோட், திருவல்லிக்கேணி.

If un-delivered please return to:
P. B. ANNANGARACHARYA,
L. KANCHEEPURAM.

346. Sri Vangeepuram Raghavacharya,
Melkote (Mysore)

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.